# கல்கி

23.2.97 KALKI ரூ. 3.00



அமைச்சர்களுக்கு முதல்வர் விட்ட டோஸ்!

# இடிராஜாக்களே உஷார்!

# பெண்கள் மசூதிக்குச் சென்று தொழுகை நடத்தலாமா?

திருவனந்தபுரத்திலுள்ள பாளையம் ஜும்மா மஜ்ஜித்தில் தொழுகை செய்யப் பெண்களை அனுமதித்து விட்டார். இமாம் பி.கே.கே. அஹமது குட்டி மௌலவி. இது முஸ்லீம் மதத்தினரிடையே ஒரு பரபரப்பை உண்டாக்கி இருக்கிறது. தொழலாமா? கூடாதா? இது பற்றி தமிழ் நாட்டில் உள்ள இரு முஸ்லீம் மார்க்க அறிஞர்களிடம் கேட்டபோது...

**பி.ஜைனுல் ஆபிதீன் (ஆசிரியர், அல் ஜன்னத் மாத இதழ்):**

திருக்குர்ஆன், இறைவன் அவர்களால், இறைத் தூதர் நபிகள் நாயகம் மூலம் உலகுக்கு அருளப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் காலமான 150 ஆண்டுகளுக்குப் பின் (இன்றைக்கு 1250 ஆண்டுகளுக்கு முன்) அவரின் சொல், செயல், அங்கீகாரம் பெற்ற விஷயங்கள் ஆறு கிரந்தங்களாகத் தொகுக்கப்பட்டன. இவற்றை ஹதீஸ் என்கிறோம். இவற்றில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா விஷயங்களுக்கும் அசைக்க முடியாத ஆதாரம் உண்டு. புகாரி, முஸ்லீம், அபுதாவுது, நசயீ, திர்மிதீ, இப்னுமாஜா என்று ஆறு மார்க்க அறிஞர்கள் தொகுத்ததுதான் ஹதீஸ். ஒவ்வொரு முஸ்லீமும் குர்ஆனில் சொல்லப்பட்டது தவிர, ஹதீஸில் சொல்லப்பட்டுள்ள நெறி காட்டுதல்களையும், வழிகாட்டுதல்களையும் கடைப்பிடிக்க வேண்டியது கட்டாயம். அவற்றில் சொல்லப்பட்டுள்ளது போல வாழ வேண்டும். இப்போது இந்த அடிப்படையில் நீங்கள் கேட்ட விஷயத்திற்கு வருவோம்!

நபிகள் காலத்தில் பெண்கள் மசூதிக்குள் (பள்ளி வாசல்) தொழுகை நடத்த அனுமதிக்கப்பட்டார்கள் என்று ஹதீஸ் (புகாரி) தெளிவாகச் சொல்கிறது. பெருமானின் மனைவியான ஆயிஷா(ரலி) அம்



• பி.ஜைனுல் ஆபிதீன்



• ஏ.குத்புத்தீன் அஹமது

மையார் ஓர் இடத்தில் சொல்கிறார்(578):

"மூமினான(முஸ்லீம்) பெண்கள் தங்களின் ஆடைகளால் போர்த்திக் கொண்டு நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகையில் பங்கெடுப்பவர்களாக இருந்தனர். தொழுகை முடிந்ததும் தங்களின் இல்லங்களுக்குத் திரும்புவார்கள். இருட்டின் காரணமாக அவர்களை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாது."

நபிகள் காலத்தில் பள்ளி வாசலில், ஆண்களுக்குப் பின்னால் பெண்கள் தனித் தொகுப்பாக நின்று தொழுகை நடத்தியிருக்கிறார்கள். தொழுகைக்கு வரும் ஒரு பெண், குழந்தையுடன் வருகிறாள். அந்தப் பெண் தொழுகையில் ஈடுபட்டிருக்கும் போது குழந்தை அழுகிறது. குழந்தையின் அழுகுரல் கேட்டால் தாய்க்குப் பொறுக்குமா? "அந்தத் தாய் மனது புரிந்த காரணத்தால் சுருக்கமாக அன்று தொழுகை நடத்தி முடித்தேன்" என்று நபி அவர்கள் ஓர் இடத்தில் சொல்கிறார்.

"பள்ளிவாசலில் தொழுகை முடிந்ததும், பெண்கள் கலைந்து செல்லும் வரை ஆண்கள் தங்கிச் செல்லுங்கள்" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் "பெண்கள் வாசனைத் திரவியம் போட்டுக் கொண்டு பள்ளி வாசலுக்கு வரக் கூடாது" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது சொல்லப்பட்ட எல்லாவற்றுக்கும் ஹதீஸிலிருந்து என்னால் ஆதாரம் காட்ட முடியும்! ஆக, நபிகள் நாயகம் காலத்தில் அனுமதிக்கப்பட்ட ஒரு விஷயத்தை மறுக்க யாருக்கும் அனுமதியுமில்லை; உரிமையுமில்லை.

முகலாயர்கள் இந்தியாவை ஆட்சி செய்யும் போது, 'பெண்கள் மசூதிக்குச் செல்வது கூடாது' என்று ஒரு நடைமுறை, மதம் பற்றி சரியாக அறியாத மார்க்க அறிஞர்களால் உண்டாக்கப்பட்டு இருக்கலாம்! இதற்கு இரண்டு காரணங்கள் இருக்கலாம். ஒன்று; அந்தக் காலத்தில், எல்லாப் பெண்களுமே வீட்டிற்குள் அடக்கி வைக்கப்பட்டார்கள். மற்றொன்று; அடிக்கடி, சண்டையும் சச்சரவும் நடந்து கொண்டிருந்ததால் பெண்களுக்கு வீட்டிற்கு வெளியில் பாதுகாப்பு இருக்காது என்று கருதப்பட்டு, பெண்கள் வீட்டிற்குள்ளேயே தொழுகை நடத்துமாறு பணிக்கப்பட்டிருப்பார்கள்.

சவுதிஅரேபியா, மலேஷியா போன்ற நாடுகளில் பெண்கள் பள்ளி வாசலுக்கு வந்து தொழுகை நடத்துகிறார்கள். இந்தியாவில் கேரளாவிலும், தமிழ்நாட்டின் சில இடங்களிலும் பெண்கள் பள்ளி வாசலுக்குள் தொழுகை நடத்த அனுமதிக்கப்படுகிறார்கள். ஆனால் ஆண்-பெண் என்று பக்கத்தில் நின்று தொழுவது கவனச் சிதறல்களுக்கு வழி வகுக்கும் என்பதால், தடுப்புகளுக்கு அந்தப் புறமும், தனித் தொகுப்பாகவும் நின்று தொழுகையில் ஈடுபடுகிறார்கள். பெண்கள் தொழுகைக்கு வருவதும் போவதும் தெரியாத அளவுக்குச் சில பள்ளி வாசல்களில் வழி செய்து வைத்திருக்கிறார்கள். வீட்டில் தொழுவதைவிட பள்ளி வாசலில் தொழுவது 27 மடங்கு கூடுதல் நன்மையைக் கொடுக்கும். ஹஜ் கடமையை நிறைவேற்றும் இடத்தில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து தான் தொழுகை நடத்துகிறார்கள்.

நபிகள் காலத்துக்குப் பின்னர் வாழ்ந்த ஆயிஷா அம்மையார் சொன்னதாக ஒரு தகவல் சொல்லப்படுகிறது. அதாவது "காலம் ரொம்பக் கெட்டுப் போச்சு; இன்றைக்கு (அதாவது ஆயிஷா அம்மையார் வாழ்ந்த காலம்) நடப்பதைப் பார்த்தால் நபிகள், பள்ளி வாசலுக்குள் பெண்களை அனுமதிப்பாரா என்பது சந்தேகமே" என்றாராம். "அப்போதே ஆயிஷா அவர்கள் அப்படிச் சொல்லி விட்டதால், இப்போது காலம் இன்னும் மோசமாகப் போய் விட்டது. ஆதலால், பெண்களை அனுமதிக்காமல் இருப்பதே சரியானது" என்று சில மார்க்க அறிஞர்கள் கூறலாம். ஆனால் இந்த இடத்தில் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். ஆயிஷா அம்மையாரால் இது போலச் சொல்லப்பட்டதா என்பதை ஹதீஸிலிருந்து யாராவது ஆதாரம் காட்டிச் சொல்வார்களா? அது போல பெண்மணி ஒருவர் நபிகள் அவர்களிடம் 'உங்களுடன் சேர்ந்து தொழுகை நடத்த விரும்புகிறேன்' என்று சொன்னதாக ஒரு தகவல். நபிகள்

காலத்தில் பெண்கள் பள்ளி வாசலுக்குள் அனுமதிக்கப்பட்ட நிலையில் இது போன்ற கேள்விகள் எழுவதற்கு வாய்ப்பே இல்லையே! ஆகவே பெண்கள் பள்ளி வாசலுக்கு வந்து தொழுகை நடத்துவதைத் தடுக்க இது போன்ற ஆதாரமற்ற செய்திகளெல்லாம், பரப்பி விடப்படுகின்றன. ஆகவே மீண்டும் சொல்கிறேன், இஸ்லாம் அனுமதித்துள்ளதை மறுக்க யாருக்கும் உரிமையில்லை!

## மௌலவி ஏ.குத்புத்தீன் அஹமது பாகவி:

நபிகள் (ஸல்) அவர்கள் பெண்கள் பள்ளி வாசலுக்குச் செல்வதைத் தடுக்கவுமில்லை; ஊக்குவிக்கவும் இல்லை. ஹதீஸில் ஒரு இடத்தில் (அபுதாவுத்) "உங்களுடைய பெண்கள் மசூதிக்குச் செல்வதைத் தடுக்காதீர்கள்; ஆனால் வீட்டிலிருந்து தொழுகை நடத்துவது மிகவும் சிறப்பானது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. நபித் தோழர் அப்துல்லாபின் அவர்களின் துணைவியார் ஜைனப் சொன்னதாக ஹதீஸில் (முஸ்லீம்) ஒரு தகவல். "உங்களில் யாராவது மசூதிக்குச் செல்ல விரும்பினால் மணம் பூசிக் கொண்டு செல்லாதீர்கள்" என்று பெருமான் சொன்னாராம். பெண்மணி ஒருவர் பெருமானிடம் "உங்களுடன் சேர்ந்து தொழுகை நடத்த விரும்புகிறேன்" என்று சொல்லியிருக்கிறார். உடனே பெருமான் "உன் வீட்டின் முற்றத்தில் நின்று தொழுவது நல்லது; அதைவிடச் சிறந்தது வீட்டிற்குள் தொழுவது; இன்னமும் சாலச் சிறந்தது, உங்கள் அறையில் தொழுவது" என்றாராம். இந்தத் தகவல் தப்ரானி என்ற மார்க்க அறிஞர் எழுதிய தொகுப்பில் இருக்கிறது. அணியாகச் சென்று பள்ளி வாசலில் தொழுகை நடத்துவது ஆண்களுக்குக் கட்டாயம் என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது. பெண்கள் விஷயத்தில் அப்படியில்லை. ஈத் போன்ற பெரு நாட்களில் ஊருக்கு வெளியே உள்ள திடலில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து தொழுகை நடத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இன்னமும் சொல்லப் போனால், வீட்டுக்கு விலக்காக இருக்கும் பெண்களும் அங்கு வரலாம்; பிரசங்கங்களைக் கேட்கலாம்; ஆனால் தொழுகை மட்டும் செய்யக் கூடாது என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.

இஸ்லாம் மார்க்கத்தின் வழி முறைகளைப் பின்பற்றுவதில் இந்தியாவைப் பொறுத்த மட்டில் அனபி (Hanafi), ஷாபி (Shafi) என்று இரண்டு விதமான School of thought கள் இருக்கின்றன. அனபி வகையறாவில் பெண்கள் பள்ளிவாசலுக்குள் அனுமதிக்கப்படுவதில்லை.

ஆகவே மீண்டும் சொல்கிறேன்: பெண்கள் பள்ளிவாசலுக்குச் சென்று தொழுவதை நபிகள் தடுக்கவில்லை; ஊக்குவிக்கவுமில்லை.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**



"எதுக்கு உன் கணவரைப் பார்த்து தலையில் அடிச்சுக் கிறே..?"

"சமையல் செய்யறார்... பாத்திரங்கள் தேய்க்கிறார்... துணிகள் துவைக்கிறார் ஒத்துக் கிறேன். அதுக்காக பெருமையா பூஸ்ட் ஈஸ் தி சீக்ரெட் ஆஃப் மை எனர்ஜி'ன்னு கத்தணுமா?"

– ராஜிராதா



வயதான நடிகையிடம்: இப்போதெல்லாம் உங்களைப் பற்றி கிசு கிசுவே வருவதில்லையே, ஏன்?

– எஸ்.மோகன்



"சூடா என்ன இருக்குன்னு சொல்லிச் சொல்லி அலுத்துப் போச்சாம்; மெனு கார்டெல்லாம் போட முடியாதுன்னு முதலாளி கண்டிஷனா சொல்லிட்டாராம்!"

– பாஸு

# கலைஞரிடம் சரண்டரான வாலி!




சென்னை ரசிகர்களுக்கு அது ஒரு வித்தியாசமான வாய்ப்பு. இதுவரையில் எந்த மேடையிலும் அப்படியொரு வினோதமான கலவையை அவர்கள் கண்டு மகிழ்ந்திருக்க முடியாது.

முதல்வர் கலைஞர். எம்.எஸ். சுப்புலட்சுமி. சதாசிவம், ரஜினிகாந்த். கமல்ஹாசன், லதா மங்கேஷ்கர், எஸ். ஜானகி, பி. சுசீலா, பாரதிராஜா. ஏ.வி.எம் சரவணன் என்று இப்படி எல்லோரும் ஒரே மேடையில்.

மியூஸிக் அகாடமி நிரம்பி வழிந்தது.

30 வருடங்களில் 30000 பாடல்கள் பாடிய எஸ்.பி.பிக்குப் பாராட்டு விழா.

● அரங்கில் வந்து அமர்ந்த முதல் வி.ஐ.பி. எஸ். ஜானகி. பாலுவின் சாதனை பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று அவரிடம் கேட்டதற்கு "இது ரொம்பப் பெரிய அச்சீவ்மென்ட். சாதாரண விஷயமில்லே. எத்தினி பாஷையில் பாடியிருக்கார்! அடேயப்பா."

● ஸ்ரீராம் குரூப் ஏ.வி.எஸ். ராஜா அங்குமிங்கும் மிகச் சுறுசுறுப் பாக இயங்கிக் கொண்டிருந்தார். அவர் சார்ந்துள்ள கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் இந்த விழாவை ஏற்பாடு செய்தது என்பது மட்டுமல்ல காரணம். ராஜா. பாலுவின் சம்பந்தியும் கூட!

● ஜெமினி கணேசனுக்கு ஏகப் பெருமை : "பாலு பாடிய முதல் பாட்டு 'இயற்கை யெனும் இளைய கன்னி. அதற்கு நடித்தவன் நான். இன்னொரு விஷயம் தெரியுமா? சான்ஸ் கேட்டுப் போனபோது அவர் பாடிக் காட்டிய பாடல் : 'நிலவே என்னிடம் நெருங்காதே' அதற்கு நடித்திருந்தவனும் நான்தான்!"

● லதாமங்கேஷ்கர் ஹிந்தியில் பேசினார். என்ன பேசினார் என்று யாருக்கும் புரியவில்லை. பாலுஜி, சரஸ்வதி என்ற வார்த்தைகள் கேட்டதால் 'பாலுவுக்கு சரஸ்வதி கடாட்சம் பரிபூரணமாக இருக்கிறது' என்று சொல்லியிருப்பாரோ! இவ்வளவு விமரிசையாக விழாவை ஏற்பாடு செய்தவர்கள் லதாஜியின் பேச்சை மொழிபெயர்த்துச் சொல்ல ஏற்பாடு செய்திருக்கலாம்.

● எஸ். ஜானகி பேச வந்தார். வார்த்தைகள் சரியாக வரவில்லை. பார்த்தார். 'பேச வந்தேன்... சொல்லத்தான் ஒரு வார்த்தை இல்லை' என்று பொருத்தமாக இரண்டு வரிகளை அழகாகப் பாடி அப்ளாஸ் வாங்கிக் கொண்டார். கலைஞர் உட்பட அனைவரும் அவரது சமயோசித யுக்தியை ரசித்தார்கள்.

● வாலி எழுதிய கவிதையை அமுதசுரபி ஆசிரியர் விக்ரமன் படித்தார். பின்னர் அதை கலைஞர் கையால் பாலுவுக்குக் கொடுத்தார்கள். அப்படிக் கொடுத்தபோது கவிதையில் ஒரு வரியைச் சுட்டிக்காட்டி கலைஞர் வாலியிடம் ஏதோ வாதம் செய்ய, பதிலுக்கு வாலி ஏதோ சொல்ல, என்ன தகராறு என்று ஆடியன்ஸுக்குப் புரியவில்லை. வாலி பேசும்

போது புரியவைத்தார். விஷயம் இதுதான் : கவிதையில் ஒரு பாராவில் 'உன் சாரீரத்திலும் கனமிருக்கிறது; சரீரத்திலும் கனம் இருக்கிறது; ஆனால் அந்தக் கனம் உன் தலையில் இல்லை; நீ கற்ற கலையில் இல்லை' என்று வாலி எழுதியிருந்தார். 'தலையில் இல்லை என்பது ரொம்பச் சரி. கலையில் இல்லை



என்பது எப்படி வரும்? கலையில் கனம் இருப்பதால்தானே பாலுவுக்கு வெற்றி' என்று கலைஞர் பிடித்தார். சில நிமிட வாதங்களுக்குப் பிறகு வாலி சரண்டர். தப்புத்தான் என்று 'மைக்'கிலேயே ஒப்புக் கொண்டார்.

● ராது எழுதி, அன்று கலைஞர் வெளியிட்ட 'பாடும் நிலா பாலு' புத்தகத்துக்கு இளையராஜா எழுதியனுப்பிய முன்னுரை நேரத்துக்கு வராததால் சேர்க்க முடியவில்லை. எனவே அந்த முன்னுரையை நேரில் படித்துக் காட்டி விட்டார் இளையராஜா.

● கமல் வந்தார். பாலுவின் சாதனை பற்றித் தாம் தமிழில் சொன்னது லதா மங்கேஷ்கருக்குப் புரிய வேண்டும் என்பதற்காக அந்த வரிகளை மட்டும் ஹிந்தியில் சொல்லிவிட்டு, 'கலைஞர் அமர்ந்திருக்கும் மேடையில் நான் ஹிந்தியில் பேசுவேன் என்று கனவிலும் கருதவில்லை' என்று ஒரு போடு போட்டார். 'எல்லோரும் பாலுவுக்கு என்னென்னமோ பரிசுப் பொருள் வாங்கி வந்து மரியாதை செய்தார்கள். நானும் என் பங்குக்கு செய்யப் போகிறேன். பாலு இங்கே வர வேண்டும்' என்றார். பாலு வந்து கமல் அருகே நின்றார். அரங்கில் ஒரே சஸ்பென்ஸ். சட்டென்று பாலுவின் காலைத் தொட்டுக் கும்பிட்டு கட்டித் தழுவினார் கமல். பாலுவே எதிர்பார்க்கவில்லை. நெகிழ்ந்து அழுதே விட்டார்.

● ரஜினி : "இரண்டு முறை இந்த விழாவுக்குத் தேதி கேட்டார்கள். முதல்வர் வருவதால் நான் வேண்டுமென்றே தவிர்த்தேன். ஏனென்றால் அரசாங்கனோடு ரொம்பவும் ஒட்டிக் கொண்டால் பிரச்னை; ரொம்பவும் விலகிப் போனால் வீண் சந்தேகம்."

● கலைஞர் : "தம்பி ரஜினி திருக்குறள் கருத்தைச் சொன்னார். குளிரில் தீமூட்டிக் குளிர்காயும் போது ரொம்ப நெருங்கினால் சுட்டு விடும். விலகிப் போனாலோ குளிர் நீங்காது என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறார். நான் நெருப்பாக இருந்தால் அது சரி. நானோ மக்களின் செருப்பாக இருப்பவன். நெருங்கி வந்து என்னை அணிந்து கொள்வதுதான் சரி."

● விழாவின் இறுதியில் பாலு, அவர் மகன், மகள் என்று குடும்பமே கச்சேரி நடத்தியது முதன் முறையாக. இதை எச்.எம்.வி. காஸெட்டாக கொண்டுவரப்போகிறது.

**பின்னணித் தகவல்கள் :**

● ராது எழுதிய புத்தகத்துக்கு 'பாடும் நிலா பாலு' என்று தலைப்புத் தந்தவர் டி. ராஜேந்தர். பாலுவின் குரல் என்றால் டி.ஆருக்கு அப்படியொரு மயக்கமாம்.

● பலமுறை பாலுவோடு அமர்ந்து அனுபவங்களைக் கேட்டு ராது எழுதியிருக்கிறார். சில நேரம் ஒலிப்பதிவுக்காக வெளியூர் சென்றபோதெல்லாம் தான் சொல்ல வேண்டியதை டேப்பில் பதிவுசெய்து ராதுவுக்கு அனுப்பி விட்டாராம் பாலு.

● இந்தப் புத்தகத்திலிருந்து கிடைக்கும் ராயல்டி தொகை முழுவதையும் தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளைக்கு அளிக்கிறார் நூலாசிரியர்.

**- ராணிமைந்தன்**

படங்கள் : **யோகா**

**இந்த வினோத வழக்கில், குற்றம் சாட்டப்பட்டவர்களைச் சுற்றி எதிர்ப்புக் குரல் வலுக்கிறது... ஆனால்**

# மரணத்தின் இரண்டு

'தூக்குக் கயிறா, மரண ஊசியா - எது வேண்டும்?' - சென்ற மாதம் இரண்டு டீன் ஏஜர்களிடம் இந்தக் கேள்வி எழுப்பப்பட்டது. இரண்டு பேரும் பணக்கார - மத்தியதரக் குடும்பத்து டீன் ஏஜர்கள். தாங்கள் செய்தது மிகப் பெரிய கொடுமை என்பதை உணராத, அப்பாவித்தனமான முகங்கள். இரண்டு பேருக்கும் வயது பதினெட்டு.

பெண்ணுக்குப் பெயர் ஆமி கிராஸ் பெர்க். பையனின் பெயர் பிரையான் பீட்டர்சன். நியூஜெர்ஸியில் அவர்கள் படித்த பள்ளிக்கூடத்திலேயே இரண்டு பேரும் பிரபலமான ஜோடிகள். இரண்டு பேருமே அழகானவர்கள். அமெரிக்காவிலுள்ள டெலாவேர் மாநிலத்தைச் சேர்ந்தவர்கள்.

சரி, எதற்கு இவர்களுக்கு மரண தண்டனை? திட்டமிட்டு ஒரு கொலையைச் செய்திருக்கிறார்கள்!

ஆமாம். சிசுக் கொலை.

இரண்டு பேருமே பள்ளிப் படிப்பு முடிந்து, கல்லூரியில் சேரத் தயாராகிக் கொண்டிருந்த நிலையில், ஆமி கருவுற்றிருந்த விஷயம் தெரிந்தது. தொளதொளவென்ற 'பேகி பேன்ட்' போட்டுக் கொண்டு சமாளித்து வந்தாள் ஆமி.

நவம்பர் 12-ஆம் தேதியன்று, அதிகாலையில், நீவர்க் போகிற வழியில் இருக்கிற ஒரு மோட்டலைக் கண்டுபிடித்து, இரண்டு பேரும் ஓர் அறையை எடுத்துக் கொண்டார்கள்.

இரவில் ஆமிக்குக் குழந்தை பிறந்தது. பிரையான் ஒரு பிளாஸ்டிக் உறையை எடுத்து, சிசுவை அதில் தள்ளி, சுத்தமாக மூடி, மோட்டலின் பின்புறம் இருந்த குப்பைத் தொட்டியில்

• சரணடைந்த பிரயான்...

**குற்றம் நிகழ அடிப்படையான சமுதாயச் சீர்குலைவு குறித்து அமெரிக்கா சிந்திக்கிறதா...? குடும்ப அமைப்பை மதியாமல் புறக்கணிக்கும் ஒரு நாட்டில் இத்தகைய நிகழ்வுகள் அதிகரிக்கும் என உணர்கிறதா...?**

வீசி எறிந்து விட்டான். மாலை ஆமியைக் காரில் ஏற்றிக் கொண்டு போய் அவளுடைய ஹாஸ்டலில் விட்டுவிட்டு, பிரையான் கெட்டிஸ்பர்குக்குப் போய் விட்டான்.

குழந்தை இறந்ததோடு, கதையும் முடிந்திருக்கும்.

ஆனால் ஆமியை விதி ஆட்டிவைக்க ஆரம்பித்தது.

நீவர்க்கில் உள்ள மருத்துவமனையில், ஆமி இரண்டு நாள் கழித்து ஏதோ பிரச்னை காரணமாகப் போனபோது, தனக்குக் குழந்தை பிறந்த விஷயத்தைச் சொல்லி விட்டாள். பிரையானும் ஒரு ஸ்டூடன்ட் கௌன்சலரிடத்தில் நடந்ததைத் தெரிவித்து விட்டான்!

மருத்துவமனையிலிருந்து ஆமி வந்ததும் அவளைக் கைது செய்தார்கள். குற்றப் பத்திரிகை தயாரித்தார்கள் – அவள் மீதும், பிரையான் மீதும். பிறந்த குழந்தையை வெறுமனே பைக்குள் போட்டு அமுக்கிக் கொல்லவில்லை. கோரமாகத் தாக்கிய பிறகே பிளாஸ்டிக் பைக்குள் போட்டு மூடி, குப்பைத் தொட்டியில் பிரையான் வீசியிருக்கிறான்.

அசிஸ்டென்ட் அட்டர்னி ஜெனரல் டொனால்ட் ராபர்ட்ஸ் இருவருக்கும் மரண தண்டனை வழங்கத்தான் வேண்டும் என்று வாதாடியிருக்கிறார்.

## ...சலில் ...ன்-ஏஜர்கள்!

நியூயார்க் ஒட்டல் ஒன்றில் ஒரு குழந்தையைப் பெற்றுவிட்டு, அதைக் கொன்று, அதன் உடலை ஒரு பொட்டலமாக யாருக்கும் தெரியாமல் லண்டனுக்குக் கொண்டு போக முயன்று பிடிபட்டு, எட்டு மாதம் சிறைத் தண்டனை அனுபவித்து வருபவள் பிரிட்டிஷ் இளம்பெண் கரோலின் பீல். அவளுக்காக வாதாடி வரும் புகழ்பெற்ற வழக்கறிஞர் டௌடு (Mr Dowd), ஆமிக்காக ஆஜர் ஆகியிருக்கிறார்.

"இதைத் திட்டமிட்டுச் செய்த கொலை என்று எப்படிச் சொல்ல முடியும்? இரண்டு டீன் ஏஜர்களும் அன்று, அந்த மோட்டல் ரூம் அறையில் மனத்தளவில் என்ன பாடுபட்டிருப்பார்கள் என்பதை யோசித்துப் பாருங்கள்! ரொம்ப சௌகரியமாகச் சிசுவைக் கொலை செய்து வீசியெறிந்து விட்டார்களே என்று குற்றம் சொல்லலாம். ஆனால் அவர்கள் எதைப் பற்றி எல்லாம் சிந்தித்துப் பார்த்திருப்பார்கள்? சமூகம், தங்கள் வீடு – குடும்பம், கல்லூரி வாழ்க்கை பற்றி எல்லாம் நினைத்துப் பார்த்திருப்பார்கள். அப்புறம் உண்டான குழப்பங்கள், பயம், எல்லாம் அவர்களை ஆட்டிப் படைத்திருக்காதா?" என்று கேட்டிருக்கிறார் டௌடு.

ஆமியின் அம்மா உடைகள் டிசைன் செய்பவர்; அப்பா ஃபர்னிச்சர் கடை வைத்திருக்கிறார். "ஆமி கருவுற்றதே தெரியாதே!" என்கிறாள் அம்மா! "எங்களிடம் சொல்லியிருந்தால் தேவையான அட்வைஸ் செய்து, உதவியும் கொடுத்திருப்போமே?" என்கிறாள்.

இரண்டு நாள் கழித்துச் சரணடைந்தான் பிரையான். ஆனால் அந்த இரண்டு நாட்களும் நரகவேதனைப்பட்டிருக்கிறான். ஒருவித மயக்க நிலையில்தான் இருந்திருக்கிறான். 'பிரையான் பிரமை பிடித்த நிலையில் இருக்கிறான். மரண ஊசி குத்தி உன்னை மேல் உலகத்துக்கு அனுப்ப ஏற்பாடுகள் நடக்கின்றன என்றால், அவனால் என்ன பதில் சொல்ல முடியும்?' என்று கேட்கிறார் பிரையானின் வழக்கறிஞர்.

பிரையானின் அம்மா, அவன் எப்படியாவது அங்கிருந்து தப்பி, அமெரிக்காவுடன் குற்றவாளிகள் பரிவர்த்தனை ஒப்பந்தம் இல்லாத நாடுகளான சிரியா, இராக், இரான், லெபனான்... இதில் ஏதேனும் ஒரு நாட்டுக்குத் தப்பி ஓடி விடச் செய்யப் படாதபாடுபடுகிறாள். "குறைந்தபட்சம் அவன் உயிரோடாவது இருப்பானல்லவா?" என்கிறாள்.

ஆனால் அவர்களது வழக்கறிஞர் ஹர்வி அதை ஒப்புக் கொள்ளவில்லை. வழக்கைச் சந்திப்போம் என்று அடித்துச் சொல்லி விட்டார்.

எஃப்.பி.ஐ. அலுவலகத்திலிருந்து பிரையானைக் கொண்டு வந்தபோது மக்கள் சூழ்ந்து கொண்டு, "சிசுக் கொலைகாரா, சிசுக் கொலைகாரா!" என்று கூச்சலிட்டபோது, பிரையானின் அம்மா முகத்தை மூடிக்கொண்டு விம்மினாள்.

கூட்டத்தில் ஒரே ஒரு பெண்ணின் குரல் மட்டும், "பிரையான், நான் உனக்காகப் பிரார்த்தனை செய்கிறேன்!" என்று ஒலித்தது.

நன்றி : **த இன்டிபென்டென்ட்**

தகவல் : **சித்தார்த்**


ஜோக்கணி




தலைவருக்கு கையை ஆட்டி ஆட்டி கை வலிக்குது போல


அவசரமா ஆஸ்பத்திரிக்கு போயாகணும்
இங்கேயே வெயிட் பண்ணுங்க. எங்க கட்சி மருத்துவர்கள் அணி கிராஸ் பண்ணும் போது வைத்தியம் பார்த்துக்கங்க


பாம்பு...பாம்புன்னு ஏன் சும்மா கத்தினீங்க?
அப்பத்தானே ஊர்வலம் கலைஞ்சு, ரோட்டை கிராஸ் பண்ண வழி கிடைக்கும்













கருத்து: ஜூலி
படம்: செல்லம்

# சினிமாக்காரர்களுக்கு தனி திருமணச் சட்டம்?!

### 'வீக்' ஆன தாக்கரே

● வாயால் கெடுபவர்கள் லிஸ்டில் தலையாய இடம் தாக்கரேவுக்கு! ஒரு நீதிபதியே ஒரு லட்சம் லஞ்சம் கேட்டதாகப் பறைசாற்றி, கோர்ட்டை அவமதித்தது முதல் குற்றம்! சாம்னா பத்திரிகையில் 'கலவர'மான கட்டுரை எழுதியது பிரிதொரு குற்றம். முறையே ஒரு வார சிறைவாசம் + 2000 ரூபாய் அபராதம்; 2 வார சிறைவாசம், 2000 ரூபாய் அபராதம் என்ற தண்டனை! "எதிர்பார்த்ததுதான், சந்தோஷம்!" என்று கூறியிருக்கிறார்! உச்சநீதி மன்றத்துக்கு அப்பீல் செய்ய இரண்டு வார கால அவகாசம் இருக்கிறது தாக்கரேவுக்கு. நீதிமன்றத் தீர்ப்பைத் தொடர்ந்து சில பகுதிகளில், கொஞ்சம் கட்டாயக் கடை அடைப்பைத் தவிர, எதிர்பார்த்தபடியான பெரிய கலவரம். ஒன்றுமில்லை! 'ரிமோட் கண்ட்ரோலின் பாட்டரி 'வீக்'காகி விட்டதா? இனி மேல்தான் பார்க்க வேண்டும்.

### தேனிலவு முடிந்தது!

● சிவசேனை - பி.ஜே.பி தேனிலவு முற்றுப் பெற்று விட்டதை வர இருக்கின்ற தேர்தல் நடவடிக்கைகள் பகிரங்கமாக அறிவிக்கின்றன. முனகிக் கொண்டே மும்பையில் முப்பது சதவிகித இடங்களை பி.ஜே.பி ஏற்றுக் கொண்டது. பிறகு இறுதி முடிவுக்கு வர முடியாமல் போய், இரண்டு கட்சிகளும் தனித் தனியாகப் போட்டியிடுவதென்று முடிவாகியுள்ளது. முன்பெல்லாம் கட்சிகளிடையே கூட்டு என்பது நாடு தழுவியதாக இருந்தது. அப்புறம் மாநிலத்துக்கு மாநிலம் கூட்டுகள் வேறுபட்டன. இப்போது ஜில்லாவுக்கு ஜில்லா என்று மாறி வருகிறது. நாளை பேட்டைக்குப் பேட்டை "சீட் அட்ஜஸ்ட்மெண்ட்" இருந்தாலும் வியப்பதற்கில்லை.

### பழைய கதை; புதிய பாடம்!

● ஒலிபரப்பாவதற்கு முன்பே பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது. எது? முன்னாள் உள்துறை அமைச்சர் சவான், தனியார் டீ.விக்கு அளித்த பேட்டி ஒன்று! ஒளிபரப்புக்கு முன்னதாகவே செய்தித்தாள்களில் விளம்பரங்கள் பிரசுரமாயின. அதில் "கல்யாண்சிங் அரசை டிஸ்மிஸ் செய்யுமாறு நான் வற்புறுத்தியதை நரசிம்மராவ் ஏற்கவில்லை; அதனால்தான் பாபர் மசூதி இடிந்தது; அது இடிந்தபோதும், 'காபினெட் மீட்டிங்'கைக் கூட்டாமல், ராவ் சாவகாசமாக டீ.வி பார்த்துக் கொண்டிருந்தார்" என்றும், "ராவ் என்னுடன் 'விளையாடி' விட்டார்!" என்றெல்லாம் குறிப்பிட்டதாகவும் வெளிவந்தது. முன்னாள் உள்துறைச் செயலாளர், "இவை உண்மைதான்" என்று உறுதிப்படுத்தினார்! உடனே குலாம் நபி ஆசாத் "இந்த விஷயத்தில் உயர்மட்ட விசாரணை நடத்தி, ராவை தண்டிக்க வேண்டும்" என்றார். கடைசியில் உள்துறை அமைச்சரின் உதவியாளர் ஒருவர், "off the record ஆகக் கூறப்பட்ட விஷயங்களை டீ.வி.க்காரர்கள் அநியாயமாகப் பரபரப்பாக்கியிருக்கிறார்கள்!" என்று குட்டை(யை) உடைத்திருக்கிறார் (குழப்பியிருக்கிறார்)! எது



• தாக்கரே

'ஆன்' எது 'ஆஃப்' என்று புரிந்துகொள்வது எப்படி என மீடியாக்காரர்களுக்கு அரசியல்வாதிகள் பாடமெடுத்தால் என்ன?

### நாடகமும் நிஜமும்!

● மும்பை முனிசிபல் கார்பரேஷனுக்கு, நகரைச் சுத்தமாக்கும் வெறி புதிய பரிணாமங்களைத் தொட்டிருக்கிறது. வீதி நாடகங்கள் நடத்தி ஆங்காங்கே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தப் பாடுபடுகிறார்கள் ஒருபுறம்! மறுபுறம்...? நடுரோட்டில் குப்பையைக் கொட்டிய ஓட்டல் முதலாளிக்கு நூறு ரூபாய் அபாரதம் விதித்தார் ஓர் அதிகாரி. முதலாளி அவரைத் தனியாக அழைத்துச் சென்று 'கண்டு' கொண்டார். முப்பது ரூபாயில் பேரம் முடிந்தது. பிரிதொரு இடத்தில் அபராதத் தொகையைக் கறாராகக் கறந்துவிட்டார் நேர்மையான அதிகாரி. ஆனால், சிறிது தூரம் நடந்து சென்ற அந்த அதிகாரி 'புளிச்'சென்று நடுரோட்டில் வெற்றிலைச் சாறைத் துப்பினாரே பார்க்கலாம்!...

### ஸ்பெஷல் லைசன்ஸ்!

● 'உல்ட்டா ஃபுல்டா' 'ஃப்ளாப் ஷோ' போன்ற டீவி நிகழ்ச்சிகள் புகழ் ஜஸ்பால் பட்டி மும்பை நீதிமன்றத்துக்கு ஒரு மனு கொடுத்திருக்கிறார். கலை உலகப் பிரபலங்களின் வழக்கப்படி, தாமும் இரண்டாவது திருமணம் செய்து கொள்ள அனுமதி கோரியிருக்கிறார்! சட்டத்தில் அதற்கிடமில்லை என்றால், சினிமா கலைஞர்களுக்கென்று அதை மாற்றி அமைக்க வேண்டுமென்றும் வற்புறுத்தியிருக்கிறார். இது கோர்ட்டை அவமதிப்பதாக அவர்கள் நினைத்தால், தாம் மன்னிப்புக் கோருவதாகவும், எப்படியாவது முதல் மனைவியுடனேயே வாழ்க்கையைக் கஷ்டப்பட்டுச் சமாளிப்பதாகவும் ஒரு சிரிப்பு வெ(க)டியை அனுப்பி, நீதிமன்றத்தையே ஒரு கலக்குக் கலக்கியிருக்கிறார் இந்த கிண்டல் மன்னன்! போனிகபூர்-ஸ்ரீதேவி திருமணத்தைத்தான் இப்படி கிண்டலடித்திருக்கிறார் மனுஷர்!

### பாவம் போலீஸ்!

● இந்தத் தேர்தலில் அரசியல்வாதிகள், நடிகர்கள் தவிர, காவல்துறையைச் சேர்ந்தவர்களும் தங்கள் பிரதிநிதிகளை மகாராஷ்டிர தேர்தல் களத்தில் இறக்கப் போகிறார்கள். "எல்லோரும் எங்களைத் துயர் துடைப்பவர்களாகப் பார்க்கிறார்கள். எங்கள் குறைகளை யாரிடம் சொல்வது?" என அங்கலாய்க்கிறார்கள். காவல் துறையில் பிரச்னைகள் அதிகரித்திருப்பதன் பிரதிபலிப்பாக, எக்கச்சக்க தற்கொலைகள்! அப்படி என்னதான் பிரச்னை? ஓர் அதிகாரியின் மாதச் சம்பளம் 4000 ரூபாய்! ஆனால் அவர் ஆன்டூட்டியில், செலவழிக்க வேண்டியது, கிட்டத்தட்ட 15,000 ரூபாயாம்! ஆம்! அவர்கள் பொறுப்பிலிருக்கும் கைதிகளை ஓரிடத்திலிருந்து மற்ற இடத்திற்கு அழைத்துச் செல்லும்போது அவர்களுக்கான உணவுச் செலவுகள், சாட்சிகளை அழைத்து வரும் செலவு, அனாதை உடல்களை அப்புறப்படுத்தி தகனம், அடக்கம் செய்ய ஆகும் செலவுகள்என்று எல்லாமே இவர்களுடையதுதானாம்! சொல்கிறார்கள்...

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**



## கிரிக்கெட் பாஷையில் காதல்!

காதல், கல்யாணம் இத்யாதிகளைக் கிரிக்கெட் பாஷையில் சொல்வதென்றால்...:

காதலில் குறுக்கீடு வந்தால் - LBW,

காதலியைக் கைவிட்டு ஓடினால் - Run out,

சக்களத்தி - Byes,

ஜாதகம் பொருந்தவில்லை - No ball,

கல்யாணம் முடிவு ஆகாமல் காதல் தொடர்ந்தால் - Follow on,

கடற்கரை சந்திப்பு - Drinks,

காதலில் தற்கொலை - Hitwicket,

காதலி புளித்துப்போய் புதிய காதலியை நாடுவது - New ball,

காதல் படுதோல்வி - Innings defeat,

சாந்தி முகூர்த்தம் - Clean bowled!

– பத்மஜா

பட்டுச் சேலைகளில், சூரிதாரில், கைகளில் புத்தகங்களோடு கூட்டமாகப் பெண்கள் நிற்கிறார்களா... நிச்சயம் அவர்களில் பெண்போலீஸாரும் இருப்பார்கள்...

"காஞ்சிபுரம் பட்டுல கம கமன்னு மணக்கறாங்களே, யாருப்பா அவுங்க?"

"யாராக இருந்தா என்ன, எல்லாம் நமக்காகத்தாம்பா..."

"அப்படின்னா அதோ அது எனக்கு..."

"அதத்தாம்பா நானும் நெனச்சிருந்தேன். சரி, பரவால்ல. டேக் இட். நான் அதுக்குப் பக்கத்துல அசைஞ்சு அசைஞ்சு போவுதே... அதை எடுத்துக்கறேன்...."

"உங்களுக்கு ரசனையே இல்லப்பா... ரைட் சைடுல நாலாவதா போவுதே... அடேயப்பா! என்னவொரு ஃபிகரு... அதுதாம்பா எனக்கு..."

"அப்பமன்னா மிச்சமிருக்கிற பார்ட்டிதான் எனக்கா... சரி சரி! உங்களுக்காக நான் அட்ஜெஸ்ட் பண்ணிக்கறேன்..."

"டேய் மச்சிகளா... நீங்க நாலு பேருமே நாலையும் தள்ளிக்கிட்டுப் போய்ட்டா எப்படிப்பா... அஞ்சாவதா இருக்கற நான் தேவதாஸ்தானா..."

"சேச்சே! யாருமே தேவதாஸ் ஆக வேண்டியதேயில்லை!"

அந்த நான்கு பெண்களில் ஒரு பெண் திரும்பிப் பார்த்துக் கூறியதும் இந்த இளைஞர்களுக்கு இனிய ஆச்சரியம்!

"அப்பமன்னா..."

ஐந்து இளைஞர்களும் ஒரு சேரச் சந்தோஷக் குரல் கொடுக்க, கண்ணிமைக்கிற நேரத்தில் அந்த நான்கு பெண்களும், அந்த ஐந்து இளைஞர்களையும் கராத்தே அடிகொடுத்துப் பிடித்தார்கள்.

தாங்கள் கிண்டல் செய்த நான்கு பெண்களுமே, தங்களைப் போன்ற ஜொள்ளு பார்ட்டிகளையும் இடிராஜாக்களையும் பிடிப்பதற்காக மப்டியில் வந்த பெண் போலீஸார் என்பது கராத்தே அடி வாங்கிய பிறகுதான் தெரிந்தது அந்த இளைஞர்களுக்கு.

அப்புறம் என்ன? அந்த ஐந்து இளைஞர்களும் நீதிமன்றத்தில் ஆஜர் செய்யப்பட்டு ஆளுக்கு 750 ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டனர்.

"சமீபத்தில் ஒரு கல்லூரியைச் சேர்ந்த ஏழு மாணவர்கள் கூட இப்படிப் பிடிபட்டனர்! இப்படிப் பிடிபடுகிறவர்கள் பெரும்பாலும் வசதிமிக்க குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள்!" என்ற அடையாறு போலீஸ் சரகத்திலுள்ள உதவி கமிஷனர் வேதக்கண்ணனிடம் "ஏன் அப்படி?" என்றோம்.

"அன்றாட வாழ்க்கை பற்றிய கவலையில்லாத இளைஞர்களிடம்தான் இதுபோன்ற 'இளமைக் குறும்புகள்' அதிகம். புள்ளி விவரப்படி பார்த்தால் வடசென்னைப் பகுதிகளில் இதுபோன்ற புகார்கள் வருவது அபூர்வம். காரணம் அங்கேயுள்ள இளைஞர்களுக்கு அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளே பெரிதாக இருப்பதுதான்!"

குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட இளைஞர்கள் வந்து தினசரி இப்படிப் பெண்களிடம் வம்பு பண்ணுகிறார்கள் என்று யாராவது புகார் கொடுத்தால்தான்

# இடி ராஜாக்களே உஷார்!

இந்தப் பெண் போலீஸின் கராத்தே படை சென்று சம்பந் தப்பட்டவர்களைப் பிடித்து வருமா?

"கிடையவே கிடையாது. பெரும்பாலும் இதுபோன்ற புகார்கள் கொடுக்கவே பலரும் தயங்குவார்கள். காரணம், நாளைக்கு ஏதாவது பழிவாங்குகிற நடவடிக்கைகளில் ஈடுபடுவார்களோ என்கிற பயம்தான் பல பெண்களுக்கும். அதோடு வழக்கு விசாரணை என்று போலீஸ் ஸ்டேஷனுக்கும் கோர்ட்டுக்கும் அலைய வேண்டுமே என்கிற பயமும் இருப்ப ...தால், பெரும்பாலான பெண்கள் இவற்றை யெல்லாம் சகித்துக் கொண்டுதான் போகிறார்கள். இத் தனையையும் மீறிப் புகார் கொடுப்பவர்கள் சம்பந்தப் பட்ட பெண்களின் தகப்பன்மார்களோ அல்லது அண்ணன், தம்பிகளாகவோ தான் இருக்கிறார்கள். அவர்கள் கூட அவர்களைப் பற்றி வெளியே சொல்லி விடக் கூடாது என்கிற பயத்தோடுதான் எங்களிடம் வருகிறார்கள்.

''இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டுதான் கமிஷனர், அடிஷனல் கமிஷனர் மற்றும் டெபுடி கமிஷனர் களெல்லாம் ஒன்றாகக் கலந்து பேசி ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதாவது நாங்களே பல் வேறு இடங்களுக்கும் பெண் போலீஸாரை மப்டியில் அனுப்பி, சம்பந்தப்பட்ட 'இளமைக் குறும்பர்'களைக் கையுங்களவுமாகப் பிடிப்பது என்று..."

"ஒருமுறை ஓர் இடத்துக்குச் செல்லும் பெண் போலீஸார் மறுமுறையும் அதே இடத்துக் குச் செல்கிறபோது, அவர் களைச் சுலபமாக அடை யாளம் கண்டுகொள்வார் களே..."

"சென்னை மகாநகரத்தில் நாற்பது பெண் போலீஸாருக்கு

• ரேணுகா

• சாந்தி தேவி

• சுனந்தா



* உதவி கமிஷனர் வேதக்கண்

மேல் இருக்கிறார்கள். அதனால் மாற்றி மாற்றி அனுப்புவோம். அதோடு ஒருநாள் சேலையில் போவார்கள். மறுநாள் சூரிதார் அணிந்து கொண்டு செல்வார்கள். இன்னொரு நாள் கல்லூரி மாணவிகளைப் போல் புத்தகங்களைக் கையில் எடுத்துக் கொண்டு செல்வார்கள். வேறொரு நாள் வேலைக்குச் செல்லும் பெண்களைப் போல் போவார்கள். எனவே, அவர்களை அத்தனை சுலபத்தில் அடையாளம் காண முடியாது.

"மேலும் ஓர் அழகான இளஞ்ஜோடியை முன்னால் அனுப்பி வைத்துவிட்டு, அவர்களை இவர்கள் பின்தொடர்ந்தும் செல்வார்கள். அப்போது சம்பந்தப்பட்ட ஜோடியை மூன்று நான்கு இளைஞர்கள் ஒன்றுசேர்ந்து கொண்டு கலாட்டா செய்தால் உடனடியாக இவர்கள் சென்று பிடித்து விடுவார்கள்!'' என்றார் வேதக்கண்.

"பஸ் ஸ்டாப்புகளிலும் கடற்கரைகளிலும் தானா இப்படிப்பட்ட 'ஈவ் டீசிங்' நடக்கிறது? பஸ்களில் பயணம் செய்கிற போதும் பயணிகளோடு பயணிகளாக ஏறிப் பயணம் செய்து கொண்டே பெண்களை இடிக்கிற ராஜாக்களும் இருக்கிறார்களே?"

"ஆமாம். அவர்களையும் இவர்கள் விட்டு வைக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட இடி ராஜாக்களைப் பிடிப்பதற்காகவே இவர்களும் பஸ்களில் பயணம் செய்கிறார்கள். நிறையப் பேரைப் பிடித்தும் இருக்கிறார்கள்."

"இந்தப் பணிக்கென்று இவர்களுக்கு சிறப்புப் பயிற்சிகள் ஏதும் அளிக்கப்படுகிறதா?"

"போலீஸ் பயிற்சியில் சேருகிறபோதே அடிப்படையான சில கராத்தே பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன. அதன் பிறகும் இவர்கள் தங்களின் சொந்த ஆர்வத்திலும் கற்றுக் கொள்கிறார்கள்!'' என்றார் வேதக்கண்.

"நீங்கள் மஃப்டியில் செல்கிறபோது, நீங்கள் போலீஸார் என்கிற பயம் மற்றவர்களுக்கு ஏற்படாது. அதனால் உங்களை அவர்கள் திருப்பித் தாக்குகிற சந்தர்ப்பங்களும் ஏற்பட வாய்ப்பு உண்டே?" என்று சம்பந்தப்பட்ட பெண் போலீஸாரிடம் கேட்ட போது, "இதற்கெல்லாம் பயந்திருந்தால் இந்த வேலைக்கே வந்திருக்க மாட்டோமே!'' என்றார்கள்.

இப்படிப்பட்ட 'இளமைக் குறும்பர்'களைப் பிடிக்கிற பணியில் கடந்த இரண்டொரு மாத காலமாகத்தானே நீங்கள் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறீர்கள். அதற்கு ஏதாவது சிறப்புக் காரணங்கள் உண்டா?" என்று டெபுடி கமிஷனர் குணசீலனிடம் கேட்டபோது, "எங்களது கமிஷனர் மற்றும் அடிஷனல் கமிஷனர் ஆகியோர் சொன்னபடி நாங்கள் செய்கிறோம். இதுவும் எங்கள் கடமையல்லவா!"

அவர் நம்மிடம் சொல்லாவிட்டாலும் காரணம் இதுதான் : முன்பு போலீஸ்காரர்கள் மாத்திரமல்ல; பெண் போலீஸாரும் பாதுகாப்பு அது இது என்று அரசியல் காரணங்களுக்காகவே பயன்படுத்தப்பட்டதால், பொது மக்களின் மேல் இவர்களால் அதிக கவனம் செலுத்த இயலவில்லை. இப்போது நிலைமை மாறியிருப்பதால் பொது மக்களின் பாதுகாப்புக்கும் வந்திருக்கிறார்கள்.

ஆனாலும் இருக்கிற பெண் போலீஸாரின் எண்ணிக்கை நிச்சயம் போதாது. இன்னும் அதிகப்படுத்தினால் இன்னும் சிறப்பாகச் சேவையாற்ற முடியும். நிஜமாகவே போலீஸ் மக்களின் நண்பனாக இருக்கும்!

**— பிரின்ஸ்**

அட்டையில் (பெண் போலீஸ்) : **ரேணுகா**

அட்டை வண்ணப்படமும் படங்களும் : **யோகா**



ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் அறிவிப்பு:

''இனி என் மனைவி வாங்கும் எந்தக் கடனுக்கும் நான் பொறுப்பாளியாக முடியாது.''– ஜான்.

மறுநாள் இடம் பெற்ற அறிவிப்பு:

''என் கடன்களுக்கு எவர் பொறுப்பாளியாக இருக்கத் தயாரோ அவரே என் கணவர்!''

– 'பட்டிமன்ற நகைச்சுவை'யிலிருந்து:

– விசிவா



# அரண்மனை எலிகளும் அரசியல் எலிகளும்

லண்டன் பக்கிங்ஹாம் அரண்மனையில் பெரும் பரபரப்பு. காரணம் எலிகள்! விஷயம் 'லீக்' ஆக, பத்திரிகை ஒன்று 'ஸ்கூப்' செய்தி வெளியிட்டது. அதைப் பார்த்ததும் நாடாளு மன்றத்தில் தொழிற்கட்சி எம்.பி. ஒருவர் கவன ஈர்ப்புத் தீர்மானம் கொணர்ந்தார் :

"பக்கிங்ஹாம் அரண்மனையில் எலிகள் நடமாட்டம் அதிகரித்துள்ளது பற்றி அரசுக்குத் தெரியுமா? அரசியாரின் தேக ஆரோக்கியத் துக்கு இதனால் கேடு விளையாதா? என்ன நட வடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது?"

சுகாதார அமைச்சர் இதற்கு பதில் கூறும் முகமாக, "பக்கிங்ஹாம் அரண்மனை மிகப் புராதனமான, பிரும்மாண்டமான கட்டடம். அதில் மனிதப் புழக்கம் அதிகம் இல்லாத சில அறைகளில் எலிகள் ஓடலாம். ஆனால் அரசி வாழும் பகுதியிலோ அல்லது அவரது சமைய லறையிலோ எலிகள் கிடையாது; அரசிக்கு ஆபத்து ஏதுமில்லை" என்று கூறி அமர்ந்தார்.

உடனே மற்றொரு தொழிற்கட்சி எம்.பி. எழுந்து, "ஆபத்து இல்லை என்று எப்படிக் கூறலாம்? அரசி ஆரோக்கியத்துக்கு ஆபத்து இல்லை எனில், குடிமக்கள் ஆரோக்கியத் துக்கு ஆபத்து நிச்சயம் இருக்கிறது. எலி களால் லண்டனில் பிளேக் நோய் பரவும் என்பது அமைச்சருக்குத் தெரியாது என்றால் சரித்திர ஏடுகளைப் புரட்டிப் பார்க்கட்டும். சமீபத்தில்தான் மாட்டு மாமிசத்தால் மூளைக் காய்ச்சல் பரவி, ஐரோப்பிய மக்கள் அனை வரையும் பயமுறுத்தியிருக்கிறதே, போதாதா?" என்று சூடாகக் கேட்டார்.

"ஆபத்து இல்லை என்பது உண்மை; ஏனென்றால் எலிகளை ஒழிக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது" என்று கூறினார் அமைச் சர்.

"என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது என்பதற்கு விளக்கமில்லை; இந்த அரசே இப் படித்தான், எதையும் அரைகுறையாக..." என்று ஒரு தொழிற்கட்சி எம்.பி. ஆரம்பிக்கவும், பிரதமர் ஜான் மேஜர் இடைபுகுந்தார் :

**செம்பியன்**

" 'பூனைகள் வளர்க்கப்படுகின்றன' என்ற பதிலை அரச பரம்பரை விஷயங்களைக் கவனிக்கிற நான்தான் சொல்ல வேண்டும்; அதனால்தான் சுகாதார அமைச்சரிடமிருந்து அந்தப் பகுதி பதில் வரவில்லை" என்று விளக்கினார்.

"இதுவரை பூனைகள் எத்தனை எலிகளைக் கொன்றிருக்கின்றன; இன்னும் எத்தனை எலிகள் மிச்சமுள்ளன என்ற புள்ளி விவரங்கள் தேவை" என்றார் தொ.க. அங்கத்தினர்.

"அந்தப் பதிலைத் தரக்கூடிய கம்ப்யூட்டர் கருவிகள் எலிகளால் கடிக்கப்பட்டு பாழாகி விட்டதால், புதிதாகத் தகவல்கள் திரட்ட ஒரு மாத அவகாசம் தேவை" என்றார் பிரதமர்.

"எல்லாவற்றையும் இப்படித்தான் ஒத்திப் போடுகிறீர்கள்; இது திறமையற்ற அரசு; அதனால்தான் வோட்டு கிடைக்காமல் போய் விடும் என்கிற பயத்தில், கன்ஸர்வெடிவ் கட்சி, தினசரிகளின் மூன்றாம் பக்கத்தில் இடம் பெறும் கவர்ச்சிக் கன்னி படங்களுக்குப் 'போஸ்' கொடுப்பவர்களை வருந்தி அழைத்து கட்சியில் சேர்த்துக் கொள்கிறது" என்றார் தொழிற்கட்சி எம்.பி.

"நாங்கள் ஒன்றும் கவர்ச்சிக் கன்னியைத் தேடிப் போகவில்லை; அந்தக் கன்னி தன்னிச்சையாக எங்களுக்கு ஆதரவு கொடுக்க முன் வந்தால் நாங்கள் என்ன செய்ய முடியும்?" என்று சூடாகப் பதில் கூறினார் பிரதமர்.

"கவர்ச்சிக் கன்னியின் ஆதரவு அதிகரிக்க அதிகரிக்க, அவரது உடையின் அளவு குறைந்து கொண்டே வருவதை மூன்றாம் பக்கப் படங்களில் பார்த்துக் கொண்டுதான் வருகிறோம்" என்று தொழிற்கட்சித் தலைவர் இடைவெட்ட, பரிகாசச் சிரிப்பு கூரையை எட்டியது.

அவைத் தலைவர் குறுக்கிட்டு, "இந்த விவாதம் எலிகளைப் பற்றியதேயன்றி கவர்ச்சிக் கன்னிகளைப் பற்றியதில்லை" என்று நினைவூட்டிவிட்டு, அடுத்த விஷயம் பற்றிப் பேச வேறு ஒரு எம்.பி.யை அழைத்தார்.

**பி**ரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் நடந்த இந்த விவாதத்தின் எதிரொலி தில்லி நாடாளுமன்றத்திலும் கேட்டது.

"பக்கிங்ஹாம் அரண்மனையில் நாலு எலிகள் என்றால், நமது மத்திய அரசின் புதுதில்லி அலுவலகங்களில் மட்டும் நாற்பதாயிரம் எலிகளாவது இருக்கும். இதனால் விளையும் சேதம் குறித்து ஆராய ஒரு விசாரணைக் கமிஷனை அரசு அமைக்குமா?" என்று கேட்டார் ஒரு பி.ஜே.பி. உறுப்பினர்.

"மரியாதைக்குரிய அங்கத்தினர் குறிப்பிடுவது எலிகளையா, ஊழல் பெருச்சாளிகளையா?" என்று கிண்டலாகக் கேட்டார் ஒரு காங்கிரஸ் எம்.பி.

"முந்தைய காங்கிரஸ் ஆட்சியில் ஊழல் பெருச்சாளிகள் நிறையவே இருந்தன என்பது உண்மைதான்; ஆனால் இன்றைய ஆட்சியில் கிடையாது" என்றார் உள்துறை அமைச்சர்.

இ. காங்கிரஸ் எம்.பிக்கள் இதை ஆட்சேபித்து கோஷமெழுப்பியபடியே வெளிநடப்புச் செய்தனர்.

**இ**ந்தச் செய்தி எட்டியதும், வாஜ்பாயி, "காங்கிரஸ் ஆதரவை இந்த அமைச்சரவை இழந்து விட்டது. இன்னும் நாலு நாளில் அல்லது நாற்பது நாளில் அல்லது நானூறு நாளில் அல்லது நிச்சயமாக நாலாயிரம் நாட்களுக்குள் இந்த ஆட்சி கவிழ்ந்து விடும்; தேர்தலுக்குத் தயாராவோம்" என்று அறிக்கை விட்டார்.

அதைப் படித்து விட்டு நெடுஞ்செழியன் "எங்கள் தலைவி பொய்க் குற்றச்சாட்டுகளின் பேரில் கருணாநிதியால் சிறைவைக்கப்பட்ட போதே எலிகளைத் துணிவுடன் சந்தித்தவர்" என்று நினைவூட்டினார். "பி.ஜே.பி.யுடன் கூட்டணிக்குத் தயார்; அவர்கள் மறுத்தால் எலிகளோடு கூட்டணி வைத்துக் கொள்வோம்!"

**இ**ப்படி நாடாளுமன்றத்துக்கு வெளியே அவரவரும் அறிக்கைகள் விட, மறுநாள் நாடாளுமன்றத்தில் எலி விவாதம் தொடர்ந்தது! ஒரு சிவசேனா உறுப்பினர், "உடன்டிப் பிரச்னை, எலிகளால் ஏற்படும் சேதம்தான். அது பற்றிய கணிப்பை அமைச்சர் வெளியிடுவாரா?" என்று கேட்டார்.

நாடாளுமன்ற விவகாரங்கள் அமைச்சர் இதற்குப் பதிலளிக்காமல், "அரசு காரியாலயங்களில் எலிகள் அதிகமாகக் காணப்படாது. அதனால் அன்றாட அலுவல்கள் பாதிக்கப்படுவதில்லை. கோடவுன், ரிகார்ட் ரூம் போன்றவற்றில்தான் எலித் தொல்லை அதிகம். அங்கேயெல்லாம் பல்வேறு விசாரணைக் கமிஷன்களின் ஆய்வு அறிக்கைகள்தாம் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. அவை கறையான் அரித்து அழிந்தால் என்ன, அல்லது எலி கடித்துச் சிதைந்தால்தான் என்ன?" என்று படுசாமர்த்தியமாகக் கேட்டார்.

"உண்மைதான், அதிலும் போஃபோர்ஸ் ஊழல் பற்றிய நாடாளுமன்ற கூட்டுக் கமிட்டியின் அறிக்கையை நிச்சயம் எலிகள் கடித்துக் குதறலாம். அது அன்றைய பிரதமரைப் பாதுகாப்பதற்காகவே உருவான மோசடி அறிக்கை" என்று ஒரு பி.ஜே.பி. உறுப்பினர் கூறவும் ஏக ரகளையாகி விட்டது!

நல்லவேளையாக அந்தச் சமயம் பார்த்து ஒரு குண்டு எலி அவைத் தலைவர் கம்மா மேஜை மீது தாவிக் குதித்து ஓடவும், அடுத்த கணம் அவருடன் சேர்ந்து சபை கலைந்து விட, அசம்பாவிதங்கள் தவிர்க்கப்பட்டன!







1997 பிப்ரவரி 23
தாது மாசி 12
மலர் : 55
இதழ் : 30

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# ஜெ. கூறும் கட்டுக்கதை!

'புதுக்கோட்டை இடைத்தேர்தலில் தி.மு.க.வுக்கு வெற்றி சுலபமாகக் கை வராது' என்று நமது நேரடி விசிட் ரிப்போர்ட்டில் எழுதியது மெய்யாகியிருக்கிறது.

வெற்றி பெற்றிருக்கும் தி.மு.க., அடுத்த நிலையிலிருக்கும் அ.தி.மு.க.வை விட சுமார் பன்னிரண்டாயிரம் வாக்குகளே அதிகம் பெற்றிருக்கிறது.

தி.மு.க.வினால் கணிசமான வாக்கு வித்தியாசத்தில் ஜெயிக்க முடியாது போனால் ஏற்படக் கூடிய அபாயகரமான விளைவுகளை நாம் நமது தலையங்கம் ஒன்றில் முன்னரே சுட்டிக் காட்டி யிருந்தோம். நாம் அதில் குறிப்பிட்டது போலவே, ஜெயலலிதா தோல்வியை வெற்றியாகக் காட்டிக் கொள்ள முயன்றிருக்கிறார். மேலும் மேலும் அனுதாபம் தேடும் விதமாகப் பேசி வருகிறார்.

'தேர்தல் களத்தில் அ.தி.மு.க., தன்னந்தனியாக, நிராயுதபாணியாக இறங்கியது' என்று உருகியிருக்கிறார். அதே மூச்சில், 'சொந்த பலத்தை நம்பியே அ.தி.மு.க. வேட்பாளரை நிறுத்தினோம்' என்றும் கூறியுள்ளார்!

மக்களுக்கு தி.மு.க. ஆட்சியின் பேரிலுள்ள வெறுப்பையே இத் தேர்தல் காட்டுகிறது என்பது ஜெயலலிதாவின் தீர்மானம்!

விலைவாசி உயர்வு போன்ற ஒருசில காரணங்கள் தி.மு.க.வை பாதித்துள்ளது தெளிவாகவே




தெரிகிறது. பொதுத் தேர்தலைக் காட்டிலும் இடைத் தேர்தலில் வாக்குகள் குறைந்துள்ளன.

ஆனால் இருபதாயிரம் கள்ள வோட்டுகள் போடப்பட்டன என்று ஜெ. கூறும் கட்டுக் கதையை ஏற்க முடியாது.

தேர்தலை மேற்பார்வையிட மத்திய அரசு அனுப்பிய நடுநிலைக் குழு, தமிழ்நாட்டின் அரசியல் பண்பாட்டையே வியந்திருக்கிறது. புதுக்கோட்டையில் வெகு அமைதியாகத் தேர்தல் நடந்ததையும் பிரசாரத்தின்போது எதிரெதிரே சந்தித்துக் கொண்டாலும் மாற்றுக் கட்சித் தொண்டர்கள் மோதிக் கொள்ளாமல் செயல்பட்டதையும் பாராட்டியிருக்கிறது.

இந் நிலையில், வேறெந்தக் கட்சியினருக்கும் தோன்றாத ஒரு கற்பனை 'ஜெ'வுக்கு மட்டும் உதயமாக, இப்படியொரு கள்ள வோட்டுக் கதையைக் கட்டி விட்ட அவருடைய மதிநுட்பத்தை வியக்கத்தான் வேண்டும்!

பிரசாரத்தின்போது, ஆளுங்கட்சியினர், 'தி.மு.க.வுக்கு அளிக்கப்படும் வாக்குகள் ஜெயலலிதா பேரில் எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளுக்குக் கிடைக்கும் அங்கீகாரமாகும்' என்கிற ரீதியில் பேசியுள்ளனர். இதுவே வம்பை விலைக்கு வாங்கும் கதையாக முடிந்திருக்கிறது!

'தி.மு.க.வுக்கு இத் தேர்தலில் வாக்குகள் குறைந்து விட்டன; என் பேரில் எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளை மக்கள் எதிர்க்கிறார்கள்' என்று பேச ஜெயலலிதாவுக்கு வாய்ப்புக் கிடைத்துள்ளது.

ஜெயலலிதாவின் வாதத்துக்கு எதிராக ஒரு வாதத்தை வைப்பது சாத்தியமே.

அ.தி.மு.க. நீங்கலான அனைத்துக் கட்சிகளுமே ஜெயலலிதாவை வன்மையாக எதிர்ப்பவை தாம். அந்தக் கட்சிகள், தி.மு.க.வை எதிர்க்கின்றன என்பதால் அ.தி.மு.க.வை ஆதரிக்கின்றன என்றாகி விடாது!

இவ்வாறு அ.தி.மு.க. வை எதிர்க்கும் அனைத்துக் கட்சிகளும் ஜெயலலிதா பேரில் தமிழக




அரசு எடுத்துள்ள நடவடிக்கைகளை வரவேற்கவே செய்கின்றன. தி.மு.க.விலிருந்து பிளவுபட்டு வந்த ம.தி.மு.க. கூட ஜெ. மீதான நடவடிக்கையை எதிர்க்கவில்லை; இன்னும் தீவிரமாக்க வேண்டும், போட்டி அ.தி.மு.க.வினர் பேரிலும் நடவடிக்கைகள் தீவிரப்படுத்தப்பட வேண்டும் என்பதையே சுட்டிக்காட்டியிருக்கிறது.

எனவே, தி.மு.க. - த.மா.கா. கூட்டணி மட்டுமின்றி, அ.தி.மு.க. நீங்கலான இதர கட்சிகள் பெற்றுள்ள வாக்குகள் அனைத்துமே ஜெயலலிதா பேரிலான நடவடிக்கையை ஆதரிக்கும் வாக்குகள் என்று கொள்ளலாம். அந்த வாக்குகளின் கூட்டுத் தொகையைக் கணக்கிட்டால், ஜெயலலிதாவுக்கு எதிரான நடவடிக்கைக்கு அபரிமிதமான ஆதரவு கிடைத்துள்ளது என்றே முடிவுக்கு வரலாம்.

ஜெயலலிதா தடுக்கில் புகுந்தால், இப்படி கோலத்தில் புகும்விதமாக வாதாடுவது சாத்தியமே.

பலமுனைப் போட்டிகள் உருவாகும் போது, இப்படியெல்லாம் வாதப் பிரதிவாதங்கள் எழவே செய்யும். இரு கட்சி ஜனநாயகத்தில்தான் மக்களின் மனத்தைத் துல்லியமாக எடைபோட முடியும்.

இன்றைய சூழலில், இடைத் தேர்தல் என்பது ஆளுங்கட்சிக்குத்தான் பெரிய சோதனை. ஆட்சியில் இருக்கும் கட்சியே அதிக கவனம் ஈர்க்கிறது; விமர்சனத்துக்கு உள்ளாகிறது. வட மாநில இடைத் தேர்தல்களில் கூட பி.ஜே.பி. பெரும்பாலான இடங்களில் வென்றுள்ளது இதையே உணர்த்துகிறது.

இந்நிலையில், தி.மு.க.வுக்குப் புதுக்கோட்டையில் கிடைத்துள்ள வெற்றி அபரிமிதமானது அல்ல என்றாலும் பாராட்டுக்குரியதே ஆகும்.

வெற்றி பெற்றவர்கள் அதை அடக்கத்துடன் ஏற்பதும் தோல்வியுற்றவர்கள் அதை கண்ணியமுடன் ஒப்புக் கொள்வதும்தான் ஜனநாயகப் பண்பு.

**7**

அது. இரண்டாம் உலக யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம். யுத்த நிதிக்காக, அவரவர் தம்மாலான உதவிகளைச் செய்து கொண்டிருந்தனர். கலைஞர்களும் ஆங்காங்கே நாடகங்கள் நடத்தி, வசூலாகிற தொகையை யுத்த நிதிக்கு அளித்து வந்தனர்.

அப்படி நிதி வசூல் செய்வதற்காக, 'மனோகரா' நாடகம் போட இருந்தனர், அச்சாபீஸ் சங்கரனும் அவர் சார்ந்த குழுவினரும்.




அந்த நாடகத்தில், முக்கியமான மூன்று பாத்திரங்களில் நடிக்கவிருந்தவர்கள் எதிர்பாராதவிதமாக வர இயலாது போகவே, அவர் வேறு வழியின்றி, டி.கே. ராமச்சந்திரனைப் பார்க்க அவசரமாக ஓடி வந்திருக்கிறார்.

வேறு குழுக்களில் நடிப்பவர்களையும் எப்போதாவது இதுபோல் 'வாடகை'க்கு எடுத்துக் கொள்வதுண்டு.

வயதிலும் அனுபவத்திலும் மூத்தவரான சங்கரன் வந்து உதவி கேட்டபோது, டி.கே. ஆரால் தட்ட முடியவில்லை. அவரையும், என் அண்ணன் வி.சி. மாரியப்பனையும் என்னையும் நடிக்க வர வேண்டும் என்று கேட்டார் சங்கரன்.

ஆனால் ஏனோ, டி.கே. ஆருக்கு என்னைக் கூட்டிப் போக விருப்பமில்லை. "நானும் மாரியப்பனும் மட்டும் வரோம். ராமசாமி இங்க மத்தப் பையன்களைப் பார்த்துக்கட்டும்" என்று சொல்லிவிட்டு, மப்பேடில் வாங்கிய ரூபாய் நூறை என்னிடம் கொடுத்து, "நீ போய் பையன்களுக்கு டிபன் வாங்கிக் குடுத்து, பார்த்துக்க. நாங்க போயிட்டு வந்துடறோம்" என்று சொல்லி, சங்கரனுடன் புறப்பட்டுப் போனார்.

**வி.கே. ராமசாமி**

நாமும் போக முடியவில்லையே என்ற ஏக்கம் இருந்தாலும் தாற்காலிகமாகத்தானெனினும் குழுவைத் 'தலைமை' தாங்கும் பொறுப்பு நமக்குக் கிடைத்ததே என்று சந்தோஷப்பட்டேன்.

பையன்களை ரயில்வே ஸ்டேஷன் கான்டீனுக்குக் கூட்டிப் போய் டிபன் வாங்கிக் கொடுத்துவிட்டு, அங்கேயே காத்திருக்கச் சொல்லிவிட்டு, டவுன் ஹாலுக்குப் போனேன். அங்கே எனக்குப் பெரிய அதிர்ச்சி காத்திருந்தது.

டவுன் ஹாலில் நாங்கள் தங்கி இருந்த பகுதிக்குப் போனபோது, அங்கிருந்த ஊழியர், என்னை வாசலிலேயே தடுத்து நிறுத்தினார்.

"நீங்க வாடகையே குடுக்கலையாம்? இனிமே வந்தால், உள்ள சேர்க்க வேணாம்னு ஐயா சொல்லிட்டாரு. மரியாதையா ஊர் போய்ச் சேருங்க."

ஊர் போய்ச் சேர்வதா? எந்த ஊருக்குப் போவது? டி.கே.ஆர். வேறு உடன் இல்லை. எனக்கு கிலி பிடித்துக் கொண்டது. அலறியடித்துக் கொண்டு, மறுபடி அந்த செகரெட்டரியின் மனைவியிடம் ஓடினேன்.

காலில் விழாத குறை. கெஞ்சிக் கூத்தாடி எப்படியோ இருக்க இடம் வாங்கிக் கொண்டேன். ஒரு வாரத்துக்குள் வாடகை தந்துவிடுவதாக ஒப்புக் கொண்டு, பையன்களைக் கூட்டிக் கொண்டு டவுன் ஹால் வந்தேன்.

டி.கே.ஆர். திரும்பி வந்தார். அவரைத் தனியே கூட்டிப் போய் விஷயத்தைச் சொன்னேன். "இதுதான் கடைசி வாய்ப்பு. இன்னொருதரம் அந்த அம்மா உதவுவார் என்று தோன்றவில்லை. ஏதாவது உருப்படியாகச் செய்தாக வேண்டும்" என்று சொன்னேன்.

தீவிரமாக யோசித்து, 'விமலா அல்லது விதவையின் கண்ணீர்' நாடகத்தைப் போடுவது என்று முடிவு செய்தோம்.

வரலாறு காணாதவிதமாக விளம்பரம் செய்தோம். நகரெங்கும் சுவரொட்டி.. பிட் நோட்டீஸ்கள். ஆரவாரம். ஊரில் நாலு பேர் கூடிப் பேசினாலே எங்கள் நாடகத்தைப் பற்றித்தான் பேச வேண்டும் என்பது போல இயங்கினோம்.

அந்த உழைப்புக்கு நல்ல பலன் கிடைத்தது. நாடகம் நடந்த அன்று கூட்டம் நிரம்பி வழிந்தது! அந்தக் காலத்திலேயே ரூ. 400 வசூல் ஆகி சரித்திரம் படைத்தது.

கூடியிருந்த அத்தனை பேரும், "இத்தனை நல்ல சரக்கை உள்ளே வெச்சிக்கிட்டு

தண்டமான நாடகங்களைப் போட்டு இத்தனை நாள் படுத்திட்டீங்களேப்பா!" என்று சந்தோஷத்திலேயே திட்டினார்கள்! எங்கள் குழுவுக்கு அன்றைய தினம் ஒரு மறுமலர்ச்சி பிறந்து விட்டதாகவே நினைத்தோம்.

இந்த சூட்டை ஆறப் போடக் கூடாது என்று முடிவு செய்தார் டி.கே.ஆர். சென்னையிலிருந்து காதர்பாஷா என்கிற ஸ்பெஷல் நாடகப் பாடகர் - ஆர்மோனிஸ்டைக் கூட்டி வந்தார்.

அந்நாளில் காதர்பாஷாவின் பாடல்கள் என்றால் ரசிகர்களுக்கு லட்டு மாதிரி! விழுந்தடித்துக் கொண்டு அவர் பாட்டுக்கு ஓடி வருவார்கள்.

தனது 'கனமான' குரலில் 'சுருளி மலை மேவும் சீலா; உன்னைத் தோத்தரித்தேன் சுப்ரமணிய வேலா' என்று அவர் பாடினால் கைதட்டல்களும் விஸிலும் கூரையைக் கிழிக்கும்!

அப்படிப்பட்ட புகழ்மிக்க 'காதர்பாஷா இன்றைய நாடகத்தில் பாடுகிறார்' என்று விளம்பரம் செய்ததுதான் தாமதம் - அரங்கம் நிரம்பி விட்டது.

ஆனால் விதி வேறொரு வகையில் பழிவாங்கிவிட்டது, அன்று. அற்புதமான அந்தக் கலைஞருக்கு அன்று 'நிலைமை' சரியில்லை. முட்ட முட்டக் குடித்துவிட்டு மேடைக்கு வந்தவரை, உட்காரவைக்கக் கூட முடியவில்லை. போதாக்குறைக்கு எங்கள் குழுவில் தபேலா வாசித்து வந்தவர் அன்று பார்த்து, சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட, இரவோடு இரவாக ஊர் முழுக்க சல்லடை போட்டுத் தேடினோம், யாராவது தபேலா வித்வான் கிடைப்பாரா என்று.




'வனமோகினி' என்ற படத்தில் நடித்த ஒரு அம்மா அந்த ஊரில் இருப்பதைக் கேள்விப்பட்டு, அவரிடம் போய் 'உங்களுக்கு யாராவது தபேலா கலைஞர் தெரியுமா?' என்று கேட்டோம்.

அதிர்ஷ்டவசமாக அவரது கணவருக்கே தபேலா வாசிக்கத் தெரியும் என்றார் அவர். ஆனால் அவர் தம் வாத்தியத்தை மூட்டை கட்டிப் பரணில் போட்டு வெகு நாட்கள் ஆகிவிட்டதாம்! 'ஒருநாள் உதவுங்கள்' என்று கெஞ்சி, பரணிலிருந்த வாத்தியத்தை இறக்கி, தூசு தட்டி, அவரையும் தாஜா செய்து வரச் சொல்லிவிட்டுப் போனோம்.

வந்து சேர்ந்தார், எப்படி? அவரும் முட்ட முட்டக் குடித்துவிட்டு!

மேடையில் இருவரும் உட்கார்ந்தார்களே யொழிய, அவருக்குப் பாட்டு வரவில்லை; இவருக்கு வாசிக்க முடியவில்லை!

இருவரும் அப்படியே மயங்கி விழுந்துவிட, கூட்டம் ரகளை செய்ய ஆரம்பித்தது.

"காதர் பாஷா... பாடப் போறியா இல்லையா?" என்று மக்கள் கூவ, அவர் காதில் அதெல்லாம் விழுந்தால்தானே? அவர் ஏகாந்தத்தில் அல்லவா இருந்தார்?





**"என்ன பலமான யோசனையில் மூழ்கி இருக்கே?"**

**"சம்பள கமிஷன் மாதிரியே கிம்பள கமிஷன்னு ஒண்ணு வைக்கக் கூடாதான்னு யோசிக்கிறேன்!"**

—பாஸு

பொறுமை இழந்த கூட்டம் வன்முறையில் இறங்க ஆரம்பித்தது. நாங்கள் மிரண்டு விட்டோம்.

சென்னையிலிருந்து அழைத்து வரப்பட்ட காதர்பாஷாவுக்கு அடிகிடி பட்டுவிட்டால் பெரிய அவமானம்.

என்ன செய்வதென்று புரியாமல் தலைக்குத் தலை 'அமைதி, அமைதி' என்று குரல் கொடுத்துக் கொண்டிருக்க, நான் ஒரு காரியம் செய்தேன்.

அவரை குண்டுக் கட்டாகத் தூக்கிக் கொண்டு ஓட ஆரம்பித்தேன்.

கலையரங்கம் தவிர விளையாட்டு மைதானம், மனமகிழ் மன்றம் என்று பல பிரிவுகள் உண்டு, டவுன் ஹாலில். காதர் பாஷாவைத் தூக்கிக் கொண்டு ஓடிய நான், அவரை அங்கிருந்த டென்னிஸ் கோர்ட்டுக்குக் கொண்டு போய் ஒரு மறைவான இடத்தில் படுக்கவைத்து, 'நெட்'டால் அவரை மூடினேன்.

**ம**றுபடி நான் அரங்கத்துக்கு வந்து பார்த்தால், நிலைமை எல்லை மீறி இருந்தது. மக்கள் கோபத்தைக் கட்டுப்படுத்த முடியாது என்று தோன்ற, என்ன செய்வதென்று புரியாமல் எங்கள் குழுவினர் கையைப் பிசைந்துகொண்டிருந்தனர்.

எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. பேசிப் பார்க்கலாம் என்று முடிவு செய்து, தைரியமாக மேடை ஏறினேன்.

"இந்தா பாருங்க. உங்களையெல்லாம் ஏமாத்தற நோக்கம் எங்களுக்கு இல்லை. காதர் பாஷாவுக்கு நிலைமை சரியில்லை. கலைஞர்களுக்கே உண்டான வீக் பாயின்ட்டுதான். இன்னிக்கு அவர் பாடற நிலையில இல்லை. நாளைக்குக் கட்டாயம் பாடுவார்" என்றேன்.

"அப்ப எதுக்குய்யா இன்னைக்கு நிகழ்ச்சி வெச்சீங்க? நீங்களாவது உங்க டிராமாவைப் போடுங்க" என்றனர்.

"இது சரியான பேச்சு!" என்று சொல்லிவிட்டு உடனேயே விமலா அல்லது விதவையின் கண்ணீர் நாடகத்தை விடிய விடியப் போட்டோம்.

**ம**றுநாள் மாலை காதர் பாஷா பாடினார். உயிரையே உருக்கிப் பாட்டாகப் பிழிவது போல அப்படியொரு பாட்டு! அத்தனை உருக்கம். அரக்கோணம் மக்கள் அதுவரை அப்படியொரு பாடலைக் கேட்டிருக்கவில்லை. சந்தோஷ வெள்ளத்தில், முந்தைய தினக் கசப்பான அனுபவத்தையே மறந்து விட்டார்கள்!

அதற்கு மறுநாளும் மறுநாளும் மறுநாளும் எங்கள் நாடகத்துக்கு இடையே அவர் பாடல்களையும் சேர்த்து நிகழ்ச்சி நடத்த, நல்ல பெயரோடு கூட வருமானமும் கிடைத்தது.

டவுன் ஹால் வாடகை பாக்கியைத் தீர்த்தோம். காதர்பாஷாவை நல்லபடியாக சென்னைக்கு அனுப்பி வைத்து விட்டு, நாங்கள் அடுத்த 'கேம்ப்'புக்கு ஆம்பூர் போனோம்.

**ஆ**ம்பூரில் ஒரு தமாஷான அனுபவம் எங்களுக்கு. நாடகம் நடக்கிற தினங்களில் கொட்டகை வாசலில் நல்ல கூட்டம் இருக்கும். ஆனால் நாடகம் ஆரம்பித்து, உள்ளே போய்ப் பார்த்தால் ஈ, காக்கை இருக்காது.

இது எங்களுக்குப் புரியாத புதிராக இருந்தது. வாசலில் நிற்கிற கூட்டம் ஏன் உள்ளே வரவில்லை?

சற்றுத் தீவிரமாக ஆராய்ந்த போது உண்மை தெரிந்தது.

நாங்கள் நாடகம் நடத்திய கொட்டகைக்கு அருகில், மறைவாக ஒரு கள்ளுக் கடை இருந்தது. கொட்டகை வாசலில் இருந்த கூட்டமெல்லாம் கள்ளுக் கடைக்குக் கூடிய கூட்டமே தவிர, நாடகத்துக்குக் கூடியதல்ல.



மேலும் சில நாட்கள் அங்கு

முகாமிட்டிருந்தும் கூட்டம் வராததால் அங்கிருந்து வேலூருக்கு முகாமை மாற்றி விட்டோம்.




'நமது நாடகத்தில் நல்ல கதையம்சம் இருக்கிறது. நடிக்கிறவர்களும் உயிரைக் கொடுத்து நடிக்கிறார்கள். அப்படி இருந்தும் கூட்டம் எப்போதும் நிறைய வருவதில்லையே? இதற்கு என்ன காரணம்?'

டி.கே.ஆர். தலைமையில் நாங்கள் இந்தப் பிரச்னை பற்றித் தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தது வேலூரில்தான்.

ஒருவேளை பிரும்மாண்டமான சீன், செட்டுகள் இல்லாமல் வெறும் வெள்ளைத் திரைப் பின்னணியில் நடத்துவதால் இருக்குமோ என்று நினைத்தோம்.

அதிலும் ஒரு முயற்சி செய்து பார்த்து விடுவது என்று முடிவு செய்து, அந்நாளில் மிகப் பிரபலமான நாடகக் கம்பெனியாக இருந்த கன்னையா நாயுடு கம்பெனியிலிருந்து பெரிய பெரிய திரைச்சீலைகள், புதிய அரங்க செட்கள், கண்ணாடி மாளிகை செட் இவற்றையெல்லாம் வாடகைக்குக் கொண்டு வந்து போட்டு, வேலூரில் நாடகம் நடத்துவது என்று முடிவு செய்தோம்.

அப்படியே போய் அவர்களிடம் பேசி, விவரம் சொன்னோம். கன்னையா நாயுடுவின் தம்பி கிருஷ்ணையா நாயுடு மிகுந்த இரக்க சுபாவம் கொண்டவர். எங்களுக்காகப் பரிதாபப்பட்டு, குறைந்த வாடகையில் சீன், செட்டுகளைத் தர ஒப்புக் கொண்டு, அவற்றை எடுத்துக் கொண்டு, தாமும் எங்களுடன் வேலூருக்கு வந்தார்.

ஆனால், விதி விடுவேனா என்றது. வேலூரில் நாங்கள் செய்த விளம்பரமோ, உபயோகித்த பிரும்மாண்டமான செட்களோ கூட்டத்தைக் கூட்டிவிடவில்லை. கொட்டகை நிறையவே காற்றாடியது!

வாடகைக் கட்டணம் வேறு ஏறிக் கொண்டே போக, என்ன செய்வது என்று எங்களுக்குப் புரியவில்லை. எப்போதாவது ஒருமுறை நல்ல வசூலாகி, மகிழ்ச்சி பொங்குவதும் உடனே நிலைமை தலைகீழாகி சாப்பாட்டுக்கே கஷ்டப்படுவதுமாக, தினசரி திணறிக் கொண்டிருந்தோம்.

ஒருநாள் ஆற்றுக்குக் குளிக்கப் போன கிருஷ்ணையா நாயுடு, என்னையும் உடன் அழைத்துப் போனார்.

மிகுந்த ஆசார சீலரான அவர், குளித்து முழுகி, மடியாக ஆற்றங்கரையில் அமர்ந்து நாமம் குழைத்துக் கொண்டபடியே (நாமம் இல்லாமல் அவரைப் பார்க்க முடியாது, எப்போதும்!)

"ஏண்டா, சாமான் செட்டெல்லாம் எடுத்தாந்தீங்களே, அதுக்கெல்லாம் வாடகை தரணும்ங்கற ஞாபகம் இருக்குதா?" என்றார் என்னிடம்.

"இல்லாம என்னங்க?" என்றேன்.

"உங்க டி.கே.ஆர். தந்துருவாரா ஒழுங்கா? இல்ல..."

எனக்கு நிஜ நிலவரம் தெரியும். இருக்கிற சூழ்நிலையில் அப்போது வாடகை எதுவும் தர முடியாது என்பதுதான் உண்மை. ஆனால் அதை அவரிடம் எப்படிச் சொல்வது?

"என்னடா பேசாம இருக்கே?" என்றபடி அவர் குழைத்த நாமத்தை நெற்றியில் வைக்க, நான் இதுதான் சமயமென்று, "இப்ப நீங்க செய்யறீங்க பாருங்க, இதே தாங்க!" என்றேன் குறும்புடன்.

"என்னது? நாமம்தாங்கறியா?"

"ஆமாங்க!" என்றேன் தலைகுனிந்தபடி.

என் நகைச்சுவையை ரசித்தவர், கோபப்படாமல் என்னைத் தட்டிக் கொடுத்தார்.

"இருந்தா குடுத்துடப் போறாரு. நீங்கதான் பார்க்கறீங்களே, வசூல் எங்க ஆவுது?" என்றேன் நான்.

"அதுவும் சரிதான். ஆனா ஒண்ணு. இன்னிக்கு ஒருநாள் பார்ப்பேன். வாடகை தராட்டா எல்லாத்தையும் திருப்பி எடுத்துட்டுப் போயிடுவேன். பிறகு வருத்தப்பட்டுப் பிரயோஜனமில்லை!" என்றார் அவர்.

எனக்கு, அவர் சொன்னது சரியாகத்தான் பட்டது.

அத்தனை நாள் ஆகாத வசூல், அன்று ஒரு நாளிலா ஆகிவிடப் போகிறது?

கிருஷ்ணையா நாயுடு, தமது சீன், செட்டுகளை எடுத்துக்கொண்டு போய் விட்டார்.

எங்கள் பாதை மிக இருட்டாக இருந்தது.

(தொடரும்)

## "மூன்றாவது கண்" - நூல் வெளியீட்டு விழா

**கா**வல் துறையில் பல உயர்பதவிகள் வகித்து, ஸி.பி.ஐ. இயக்குனராக விளங்கி ஓய்வுபெற்ற ஸி.வி. நரசிம்மன், கல்கியில் தொடர்ந்து எழுதி வந்த "மூன்றாவது கண்" கட்டுரைகள் நூல் வடிவம் பெற்று விட்டன. வானதி பதிப்பகத்தின் பிரசுரமான இந்த நூலினை, "ராஜாஜி பொது நிர்வாக ஆய்வு மையம்" (Rajaji Center for Public Affairs) விழா எடுத்து வெளியிடுகிறது.

*விழாத் தலைமை ; நூல் வெளியீடு :*

*ஜஸ்டிஸ்* **எஸ். மோகன்,**

உச்சநீதிமன்ற முன்னாள் நீதிபதி

*முதல் பிரதி பெறுபவர் :*

தமிழ்நாடு காவல்துறை இயக்குனர்

**கே. கே. ராஜசேகரன் நாயர்**

*மதிப்புரைகள் :*

துக்ளக் ஆசிரியர் **'சோ',**

**பி.எஸ். ராகவன்,**

ஐ.ஏ.எஸ். (ஓய்வு)

**கீதா ராமசேஷன்**

(வழக்குரைஞர்)

**22.2.97 சனிக்கிழமை**
**மாலை 5:30 மணி**
**ஸ்ரீநிவாச சாஸ்திரி அரங்கம், லஸ், சென்னை - 4.**



# நானும் நகை அணியமாட்டேன்

"நானும் இனிமேல் அணியவே மாட்டேன்'' என்று என் மனைவி சொன்னாள். அவளைப் பார்த்தேன். காது, மூக்கு, கழுத்து எல்லாம் மூளியாக இருந்தன. அத்தனை நகைகளும் மேஜையின் மேல் குவியலாகக் கிடந்தன. நகையைப் பற்றிய அவளுடைய முடிவை நகைப்புக்கிடமாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. சொல்லும்போது முகத்தில் புன்னகை கூட இல்லாமல் சீரியஸாகவே சொன்னாள். தலைவி பாணியை என் குடும்பத் தலைவியும் பின்பற்றியிருப்பது எனக்கு ஏகப்பட்ட சந்தோஷத்தைக் கொடுத்தாலும், எங்கே அத்தனை நகைகளையும் தானம், தர்மமென்று கொடுத்துத் தொலைத்து விடுவாளோ என்ற சந்தேகமும் எழாமலில்லை. எதற்கும் நோட்டம் விடலாமென்று ஆரம்பித்தேன்.

"இப்படி காதுலே, மூக்கிலே ஒன்னும் இல்லாம நின்னா நல்லாவா இருக்கும்? கொஞ்சம் யோசனை பண்ணு" என்று கெஞ்சுவது போல் கேட்டேன்.

"தீர்மானமா சொல்றேன். இனிமே இதையெல்லாம் போட்டுக்கிறதா இல்லே.'' - உறுதியாக பதில் வந்தது.

"பரம்பரை, பரம்பரையா எல்லோரும் போட்டுண்டு வந்த நகைங்களாச்சே!"

"போதும்.. பரம்பரை அது இதுன்னு பேசி என் கோபத்தைக் கிளறாதீங்க."

"இந்த ஒட்டியாணத்தைப் பாரு... கிட்டத்தட்ட ஐம்பது பவுன்லே என்ன ஒரு வேலைப்பாடோட செஞ்சிருக்கு... எல்லாம் அந்தக் காலத்து ஒரிஜினல் 22 கேரட். நீ எப்போ போட்டுட்டு வந்து நின்னாலும் கம்பீரமா ஒரு கெட்அப் கொடுக்கும் தெரியுமா"

"கம்பீரத்தைக் கொண்டு போய்க் குப்பையிலே போடுங்க."

"இருபது பவுன் காசு மாலையைப் பாரு... தழையத் தழைய உன் கழுத்து நிறைய இது அலங்கரிக்கிறபோதெல்லாம் அம்மன் வந்து நிக்கறாப் போல இருக்கும்."

"சுத்த கழுத்தறுப்பா போச்சே உங்க கூட... நான் சொன்னா சொன்னதுதான்."

"இப்படி மூக்குக்கு மேலே கோபம் வருதே.. அப்ப இந்த எட்டுக்கல் பேசரி போட்டா எத்தனை எடுப்பா இருக்கும் தெரியுமா"

"எடுப்பு கிடுப்புன்னு கடுப்பு ஏத்தாதீங்க, ஆமாம்."

"இந்த கல்லு வளையலை உன் வாழைத்தண்டு கைக்குப் போட்டா..."

"இன்னும் அந்த கம்மல், புல்லாக்கு, ராக்கோடி, திருகப்பூனு ஒவ்வொண்ணா அடுக்கிக்கிட்டே போக வேண்டாம்... இனிமே இதையெல்லாம் நான் தொடறதா இல்லே."

'அப்பாடி.... இனிமேல் நகைத் தொல்லையில்லை' என்று ஒரு நிம்மதிப் பெருமூச்சுடன், "அப்போ இதையெல்லாம் லாக்கர்லே கொண்டு போய் வைச்சுடலாம்னு சொல்றயா?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"அதானே பார்த்தேன்... உங்களோட அல்ப புத்தி உங்களை விட்டுப் போகுமா என்ன..." என்று அவள் ஆரம்பித்ததும் திடுக்கிட்டேன். நான் பயந்தது போலவே தானம் தரலாமென்பாளோ என்னவோ?

"ஒரு கல்யாணம் கார்த்தின்னா அவ அவ ஃபேஷனா லேட்டஸ்ட் டிசைன்லே போட்டுண்டு வந்து பெருமையா பீத்திக்கறா.. நான் மட்டும் ஹைதர் அலி காலத்து உங்க பரம்பரை பழசையெல்லாம் லாலி பூலின்னு போட்டுண்டு கர்நாடகமா நிக்க வேண்டியிருக்கு.. இதை எல்லாத்தையும் அழிச்சி புது டிசைன்லே வேற நகைகள் பண்ணிக்கறேன்னு நான் கழுதையா கத்தியாச்சி.. நீங்க அதைக் காதிலே போட்டுக்கிறதா இல்லே.. அதனாலதான் நானும் அது வரைக்கும் காதிலே, கழுத்திலே போட்டுக்காம நிக்கறதா முடிவு பண்ணிட்டேன்.. நாலு பேர் மானம் போறா மாதிரி கேட்டாத்தான் உங்களுக்குப் புத்தி வரும்" என்றாள்.

**- அகிலா கார்த்திகேயன்**

## மூழ்காத ஷிப் : ஓவியர் ஆதிமூலம்

'விசாலமாகச் சிந்திக்க வேண்டும்; எவரிடமும் அன்பு கொள்ள வேண்டும்' என்ற கொள்கையைக் கொண்ட ஒரு கலைஞன் நான். எனவே, நட்புக்கு என்று ஒரே ஒருவரை இந்தப் பகுதிக்காகத் தேர்வு செய்வது கடினமான சோதனை. உயர்நிலை பள்ளிப் பருவம், ஓவியக் கல்லூரி வாழ்க்கை இவற்றில் இணைந்த சில நண்பர்களைக் குறிப்பிடலாம். 1968ல் இளம் எழுத்தாளராக எனக்கு அறிமுகமாகி, பிறகு நல்ல நண்பரான சா. கந்தசாமி அவர்களையும் சொல்ல முடியும்.

இருந்தாலும்...

1960 மே மாதம் சென்னை ஓவியக் கல்லூரியின் நுழைவுத் தேர்வு தேதியை அறிந்து கொள்ள அங்கு சென்றிருந்தேன். அதே நோக்கத்துடன் அங்கே வந்திருந்தார் வேறொரு இளைஞர். குடியாத்தத்திலிருந்து வந்திருந்தார். வெளியில் உள்ள ஆலமரத்தடியில் உட்கார்ந்து பேசினோம். எங்களுடைய ஓவிய ஆர்வம், பொருளாதார பலவீனம் இரண்டுமே பேச்சில் இடம் பெற்றன. அனுதாபத்தோடு நண்பர்கள் ஆனோம். அன்று மதியமே அவர் குடியாத்தம் திரும்பி விட்டார்.

நான் அப்போது 'சினிமா உலகம் செட்டியார்' என்று அறியப்பட்டிருந்த திரு. பி.எஸ். செட்டியார் இல்லத்தில், சென்னையில் தங்கியிருந்தேன்.

மீண்டும் ஜூலை மாதம் நுழைவுத் தேர்வின்போது சந்தித்தோம். முப்பது பேரே அனுமதிக்கப்படும் அந்தப் படிப்புக்கு 150க்கும் அதிகமானோர் வந்திருந்தனர். அதிர்ஷ்டவசமாக எங்கள் இருவருக்குமே இடம் கிடைத்தது. 'பெயிண்டிங்'கையே பிரதான பாடமாக எடுத்துக் கொண்டதால் ஒரே வகுப்பறையில் பயிலும் வாய்ப்பும் கிடைத்தது.

அன்றிலிருந்து, கடந்த 37 வருடங்களாக என் உற்ற நண்பராக இருந்து வருபவர் சி.தட்சிணா மூர்த்தி. இன்று இருவருக்குமே கலை உலகில் அழுத்தமான அங்கீகாரம். நான் எப்படி ஓவியராக அறியப்பட்டிருக்கிறேனோ, அதே போல் சிறந்த நவீனபாணி சிற்பியாக அவர் இந்திய அளவில் புகழ்பெற்று விளங்குகிறார்.

கல்லூரியில் பயிற்சி முடிந்து வெளி வந்தவுடன். அப்போதுதான் புதிதாக உருவான 'சோழ மண்டலம் ஓவியர் கிராமத்தில்' ஒரே கீற்றுக் கொட்டகையில் 24 மணி நேரமும் தங்கி எங்கள் கலைப்பணியைத் தொடர்ந்தோம். ஒரு குடும்பத்து சகோதரர்களாய் எங்கள் நட்பு தொடர்ந்தது.

எங்களது லட்சியம், (சாதனை), கருத்துகள், பொருளாதாரப் பின்னணி (பிரச்னைகளுக்குக் குறைவில்லை) எல்லாவற்றிலுமே நாங்கள் ஒத்துப் போனோம்! எங்கள் நெருக்கத்தைக் குறைக்க மற்ற சில நண்பர்கள் முயன்றதுண்டு. ஒருவரைப் பற்றி மற்றவர் தவறாக விமர்சித்ததாகக் கோள்மூட்டுவார்கள். அதுப்பற்றி நாங்கள் இருவரும் நேரிடையாகவே ஒருவருக்கொருவர் பேசி, சிக்கல் எழாதவாறு பார்த்துக் கொண்டோம்.

எங்கள் துறைகளில் படிப்படியாகப் பெரும் வளர்ச்சி பெற்ற போதும் எங்களுக்கிடையே நானா, நீயா என்ற 'ஈகோ' பிரச்னை வந்ததில்லை. பல வருடங்களாக நானும் அவரும் டெல்லி லலித் கலா அகாதமியில் முக்கியப் பொறுப்புகள் ஏற்று வருகிறோம். சேர்ந்தே டெல்லிக்குச் சென்று வருவோம். யார் எவ்வளவு

திருவனந்தபுரம் கல்லூரி ஒன்றின் நூற்றாண்டு விழா. அதில் உதவி ஜனாதிபதி கே.ஆர். நாராயணன் கலந்து கொண்டார். விழா மேடையில் உதவி ஜனாதிபதி தவிர, முதல்வர் நாயனார், எதிர்க்கட்சித் தலைவர் ஏ.கே. அந்தோணி, திருவனந்தபுரம் மாநகராட்சித் தலைவர், தொகுதி எம்பி, தொகுதி எம்எல்ஏ ஆகியோர் அமர்ந்திருந்தனர். உதவி ஜனாதிபதி கலந்து கொள்ளும் விழாக்களிலெல்லாம்

# பெண்களே உஷார்!

செலவு செய்தோம் என்று எங்களுக்குள் எப்போதுமே கணக்குப் பார்த்தது கிடையாது. மூத்த கலைஞர்களைப் பாராட்டுவதிலும், இளம் கலைஞர்களை ஊக்குவிப்பதிலும் எங்களுக்குள் கருத்து வேறுபாடு இருக்காது.

• ஆதிமூலம், தட்சிணாமூர்த்தி

பரீட்சார்த்தமான முறையில், புது டெல்லியில் 1993ஆம் ஆண்டு நடைபெற்ற தேசிய கலைக் கண்காட்சிக்கு ஒரே ஒரு நீதிபதியை (one man jury) நியமித்தனர். அந்த கௌரவம் எனக்குக் கிடைப்பதற்கு தட்சிணாமூர்த்தியும் ஒரு காரணம் என்பதைப் பிறகுதான் அறிந்தேன்!

எனக்கு 1968ல் திருமணம் நடைபெற்றது. ஓவியத்தில் நிரந்தர வருமானமில்லை. மனைவியின் பெற்றோருக்கும் இந்த நிலை சற்று அதிருப்தியைத் தர, வேலைக்குப் போக முடிவெடுத்தேன். வேலை தேடும் படலத்தில் பல விதங்களில் எனக்கு தட்சிணாமூர்த்தி உதவியிருக்கிறார். நெசவாளர் சேவை மையத்தில், 'டிசைனர்' வேலை கிடைத்தது. இருபது வருடங்கள் பணிபுரிந்து, விருப்ப ஓய்வு பெற்றேன். 1972ல் அவர் ஒரு பெண்ணைக் காதலிக்க, ஜாதி சிக்கலால் திருமணம் தடைபட்டது. நான் எடுத்துக் கூறி பெண் வீட்டினரைச் சம்மதிக்க வைத்தேன்.

ஹோட்டல்களுக்குச் சென்றால் 'நான்தான் பில்லுக்குப் பணம் தருவேன்'' என்று இருவருமே முந்திக் கொள்ளப் பார்ப்போம். ஒருவர் மேல் ஒருவர் அதிக அன்ட செலுத்துவதிலும் இந்தப் போட்டி தொடர்கிறது!

# "எதுவும் எங்கள் நெருக்கத்தைக் குறைக்காது!"

- ஜி.எஸ்.எஸ்.

படங்கள்: யோகா

மேடையில் ஏழு பேருக்கு மேல் அமரக் கூடாது என்பதால் மற்ற யாரும் மேடையில் அமர அனுமதிக்கப் படவில்லை. 'இதுவொரு விஷயமா?' என்றால் விஷயம்தான்! நடந்தது பெண்கள் கல்லூரியின் நூற்றாண்டு விழா. ஆனால் ஒரு பெண்கூட விழா மேடையில் உட்கார அனுமதிக்கப் படவில்லை என்பதுதான் விசேஷம்! பெண்களே உஷார்.

திருவனந்தபுரத்திலிருந்து:
**எஸ்.எஸ். மணி**

# மீண்டும் மத்யமர் கதைகள் – 7

அனுராதாவின் கணவன் கோபால்சாமி ஓர் ஆங்கில செய்தித்தாளின் உதவி ஆசிரியர். மாநிலத்தின் பல திசைகளிலிருந்து பல நிருபர்கள் பலவகை ஆங்கிலத்தில் அனுப்பும் செய்திகளை ஒருமைப்படுத்தி, திருப்பி எழுதும் வேலை. அந்தச் செய்தித்தாளுக்கு பாண்டிச்சேரியில் அலுவலகம் ஏதும் கிடையாது.

அவள் மனைவி அனுராதா மைய அரசின் ஒரு ம்யூச்சுவல் ஃபண்ட் நிதி அலுவலகத்தில் பணிபுரிகிறாள். அதிகாரியாகத் தகுதி பெற்று, கொட்டுவாயில் இருக்கும் 'சீனியர் அசிஸ்டண்ட்'. நாலாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம். அவளை பாண்டிச்சேரிக்கு புதிதாக ஆரம்பித்த கிளைக்கு மாற்றி விட்டார்கள். மூன்று வருஷத்துக்கு மேல் ஒரே இடத்தில் ஒருவர் இருக்கக் கூடாது என்ற உத்தரவு, அவள் ஆபீசில் எல்லாருக்கும் சமமாக நிறைவேற்றப்படுகிறது என்று சொல்ல முடியாது. அனுராதாவின் மேலதிகாரி கறாரான ஆசாமி.

"மற்ற ப்ராஞ்ச்ல என்ன நடக்குதோ எனக்கு அக்கறையில்லை. இந்த ரூலை என்னால மாற்ற முடியாதும்மா. என்ன, ஒரு மூணு வருஷம் கஷ்டப்பட்டுக் கொண்டு இருந்துவிட வேண்டியது உனக்கும் நல்லது. புது பிராஞ்ச். அங்கு சிறப்பா கவனிக்க முடியும். சீக்கிரமே, ஃபீல்டு எக்ஸ்பீரியன்ஸ்னால, ப்ரோமோஷன் வந்து, திரும்ப சென்னை வந்து விடலாம்" என்றார்.

அனுராதாவுக்கு பாண்டிச்சேரியில் எப்படி தனியாக இருப்பது என்பது புரியவே இல்லை. அதும் ஒரு பெண். "மெஸ் வசதிகள் ஆஸ்டல் எல்லாம் இருக்கு. இல்லை, உன் உறவுக்காரர் யாரையாவது கூட்டிச் செல். எப்படியாவது சமாளிக்கலாம்மா" என்றார்.

கணவனிடம் சாயங்காலம் சொன்ன போது, தன் தினசரியின் பாண்டிச்சேரி ஏஜெண்டிடம் சொல்லி, தங்கும் இடம் எதாவது விசாரிக்கச் சொல்கிறேன் என்றான்.

"ராஜிநாமா செய்து விடட்டுமா?" என்றாள் அனுராதா.

"ஏன்?"

"வேற வேலை கிடைக்காதா..."

"உன் அனுபவத்துக்கு வேறு இடத்தில் வேலை கிடைப்பது கஷ்டம். பல்லைக் கடித்துக் கொண்டு இருந்து விடு."

"எதாவது கம்ப்யூட்டர், வோர்ட் ப்ராசசர் கோர்ஸ் பண்ணிவிட்டு சென்னையிலேயே இருக்கிறேனே!"

"பைத்தியம் மாதிரி பேசாதே. நல்ல

# மாற்றல்

சுஜாதா

வேலையை விடாதே. மூன்று வருஷம், இதோ ஓடிப் போய்விடும். மேலும் பாண்டிச்சேரிதானே. வாரா வாரம் நீ வரலாம். மாற்றி மாற்றி நானும் வரலாம்."

"எனக்கென்னவோ பயமாக இருக்கிறது."

"ரெண்டு பேரும் வேலைக்குப் போனால் கணவன், மனைவி கொஞ்ச நாளைக்குப் பிரிந்திருப்பது சகஜம். இப்போ தெல்லாம் ரெண்டு பேரும் சம்பாதித்தாக வேண்டிய கட்டாயம் இருக்கிறது."

"நமக்கு அந்தக் கட்டாயம் இல்லையே. உங்கள் சம்பளமே போதுமே. என்ன பிள்ளையா குட்டியா?"

"அதற்கென்று பொறுப்பில்லாமல் வந்த பணத்தையெல்லாம் செலவழித்துக் கொண்டிருப்பதா? நமக்கும் குழந்தைகள் பிறந்து அதற்காக இன்ஷுரன்ஸ் போன்றவை கட்ட வேண்டாமா என்ன?"

ஆறு வருஷமாகக் குழந்தை இல்லை. அனுராதாவின் பயம் அது இல்லை!

**பா**ண்டிச்சேரியில் கடற்கரை பிடித்திருந்தது. அதோடு ஓடும் கால்வாயைக் கடந்து ஒழுங்கான சதுர சதுர தெருக்களின் பெத்ரோ கனகராய முதலியார் வீதி போன்ற விநோதமான பிரெஞ்சுப் பெயர்கள் பிடித்திருந்தன. போலீஸ் வில்லா தழுவும் கட்டடங்களும் ஆசிரமும் அன்னையின் அமைதியான மர நிழலும் துப்ளேயின் சிலையும் பிடித்திருந்தது. ஆரோவில்லும் முதலில் அவளுக்குப் பிடித்தது.

ஒரு வயதான தமிழ்ப் பென்ஷனரின் வீட்டில் மாடி அறை. முரளிதான் ஏற்பாடு செய்திருந்தான். காலை ரொட்டி முதலியன தயாரிக்க, மாலை சமைக்கவும் சின்ன சமையல் அறை வசதி இருந்தது. பாட்டி பரிவாக ஏதாவது சாப்பிடக் கொடுத்துக் கொண்டே இருந்தாள். பாட்டி, தாத்தா இருவரும் ப்ரெஞ்சு குடிமக்கள். அவருக்கு ப்ரான்சு தேசத்திலிருந்து ஒரு நல்ல தொகை ப்ரெஞ்சு ப்ராங்கில் பென்ஷனாக வருகிறது. நிறைய மறதி. தான் லூவர் அருங்காட்சியகத்தில் வேலை செய்ததையே தினம் சொல்லிக் கொண்டிருப்பார்.

ஆபீசில் அவளுடைய பழைய சகஊழியன் முரளியைப் பார்த்தது இன்னொரு சந்தோஷ சமாசாரம். அவள் வேலை ஆரம்பித்த புதிதில் இவளுடன் சேர்ந்தவன். பம்பாய்க்கு மாற்றி இப்போது சீனியர் லெவலில் பாண்டிச்சேரிக்கு வந்திருக்கிறான். அவன்தான் இந்த வீடு ஏற்பாடு செய்து கொடுத்தவன். கோபால்சாமி ஒருமுறை வந்திருந்தபோது, அறிமுகப்படுத்தி விட்டாள். அவனைப் பிடித்து விட்டது. "நான் பார்த்துக் கொள்கிறேன் சார் இவங்களை. கவலைப்படாதீங்க" என்றான்.

எதும் பெரிய பிரச்னை இல்லாமல் சுமூகமாக வாழ்க்கை நகர்ந்தது. பாண்டிச்சேரி மாறுதலால் அவளுக்கு நிம்மதி. வேலையிலும் அதிகம் டென்ஷனில்லை. பாதி கம்ப்யூட்டரே செய்து விடுகிறது. எல்லாம் கொஞ்ச நாளைக்கு நன்றாகத்தான் இருந்தது.

முரளி, ஒரு ஞாயிற்றுக்கிழமை அவளை, 'சும்மா தாத்தா பாட்டி பேசுவதையே கேட்டுக் கொண்டிருக்கிறீர்களே! ஊர் சுற்றிப் பார்க்கலாம்' என்று கான்சல் ஜெனரல் அலுவலகம், பாரதி நினைவு அருங்காட்சியகம் என்று அழைத்துச் சென்று சுட்டிக்காட்டினான். "இன்னும் பாண்டியில் பார்க்க வேண்டியது

நிறைய இருக்கிறது. ஒருமுறை செஞ்சிக் கோட்டைக்குப் போகலாம். ஒருமுறை புனித இருதய மாதா கோவிலுக்குச் செல்லலாம்" என்றான்.

அனுராதாவுக்கும் ஊர் சுற்றிப் பார்ப்பது இஷ்டமாகவே இருந்தது. முரளி அவளை 'மோட்டார் சைக்கிளில் பின்னால் உட்கார்ந்து வர முடியுமா?' என்று கேட்டான். அது ஒன்றும் அவளுக்கு வித்தியாசமாகப்படவில்லை. "எதற்கும் ஒரு வார்த்தை கோபால்சாமியிடம் சொல்லி விடுகிறேன்" என்றாள்.

கோபால்சாமி போன் செய்த போது, "இதிலென்ன! தாராளமாகப் போ. அந்தப் பையன் ரொம்ப நல்லவன். இதையெல்லாம் நான் விகற்பமாக எடுத்துக் கொள்ள மாட்டேன். அப்படிப்பட்ட கணவன் இல்லை" என்றான்.

அடுத்த வாரம் சுண்ணாம்பார் போட் கிளப்பிற்குச் சென்று, விசைப்படகில் விரைந்து செல்லும் போது, முரளி எழுந்து நிற்க, இவள் மடியில் விழுந்து விட்டான். வீட்டுக்குப் போகும் வரை மன்னிப்புக் கேட்டுக் கொண்டே வந்தான்.

"இது தற்செயலா நிகழ்ந்ததுதானே, நீங்க வேணும்னுட்டே எம்மேல விழலையே!"

"இல்லை. எதுக்கும் இதையும் உங்க கணவர்கிட்ட சொல்லிடுங்க" என்று சிரித்தான்.

"கலாட்டா பண்றீங்களா?"

"ஒண்ணு சொன்னா தப்பா எடுத்துக்க மாட்டீங்களே..."

"சொல்லுங்க முதல்ல. அப்புறம் தப்பா எடுத்துக்கலாமா, யோசிக்கிறேன்!"

"நீங்க சூரிதார் போட்டுக்கிட்டா மோட்டார் சைக்கிள் பின்னால வரதுக்கு சௌகரியமா இருக்கும்."

"எனக்கு அதெல்லாம் பழக்கமில்லை."

"பழகிக்கணும். எதுக்கும் உங்க கணவரை கேட்டுடறீங்களா?" என்று புன்னகைத்தான்.

அந்தச் சிரிப்பில் கேலி எதும் இல்லை. இவ்வளவு வெகுளியாக இருக்கும் அவள் அறியாமையை விரும்பும் சிரிப்புத்தான் அது.

"அவரைக் கேக்காம நான் எந்தக் காரியமும் செய்ய மாட்டேன். வீட்டில் ஒரு பல்பு உடைஞ்சாக் கூட சாயங்காலம் வந்த உடனே சொல்லி விடுவேன். ரொம்ப காரியமா இதையெல்லாம் போய் எங்கிட்ட எதுக்கு சொல்றே? வேற பல்பு வாங்கி மாட்டவேண்டியதுதானேன்னு திட்டுவார்."

"கணவன் மனைவின்னா அப்படித்தான் இருக்கணும். திறந்த புத்தகம் போல."

"உங்க மனைவி எப்படி?"

"மனைவியா? உங்களுக்குத் தெரியாதா? நான் கல்யாணமே பண்ணிக்கலை."

"அப்படியா? ஏன்? அக்கா, தங்கைகள் கல்யாணம் ஆகணுமா?"

"நாசமாப் போச்சு. என்ன தெரியாத மாதிரி கேக்கறீங்க?"

"தெரியாமத்தான் கேக்கறேன்."

"நான் சேர்ந்த புதுசுல உங்களை எதுத்த மேசைலருந்து காதலிச்சேனே, தெரியாதா உங்களுக்கு?"

"அப்படியா! வேடிக்கையா இருக்கே!"

"நிசமாங்க."

அவளை வினோதமாகப் பார்த்தான்.

"அதை உங்ககிட்ட சொல்லாம மனசுக்குள்ளேயே வச்சிருந்தேன். பல பேர் உங்களை பயங்கரமா சைட் அடிச்சாங்க. எனக்குத் தெரியும்."

"எனக்குத் தெரியாது."

"அதான் உங்களோட ஸ்பெஷாலிட்டி. இன்னொசென்ஸ். எனக்கும் அப்ப தைரியம் வரலை. ஆனா வேற ஜாதில கல்யாணம் பண்ணிக்கிறதைப் பத்தி உங்க அப்பா அம்மாவை ஒருமுறை வந்து கேட்டிருக்கேன். எக்காரணத்தைக் கொண்டும் கிடையாது, பேசப்படாதுன்னுட்டாங்க. அதனால் உங்களுக்கு எதுக்கு வீட்ல பிரச்னை பண்ணணும்னு..."

"சரி அதுக்காகக் கல்யாணம் பண்ணிக்காம இருந்தீங்களா?"

"உங்க ஒருத்தரை நினைச்சுட்டேன். என் மனசில் வேற ஒருத்தருக்கும் இடம் இல்லைங்க. அப்படி இடம் கொடுத்தா அந்த முதல் நினைவு துல்லியமானது இல்லைங்க."

"திஸ் இஸ் ரிடிக்யுலஸ்..."

"இட் இஸ் ரொமாண்டிக்."



"என்னது...? கணவன் மனைவிக்குள்ளே தலைவர் பதவிக்காகச் சண்டையா!"

"ஆமாம், ரேஷன் கார்டு புதுப்பிக்க குடும்பத் தலைவரின் பெயரைக் கேட்டிருக்காங்க! நானா நீயான்னு அவங்களுக்குள்ளே சண்டையாம்!"

– மயிலை ந. கணபதி

# மகாபாரதத்துக்கு மகாத்மாவின் விளக்கம்!



"மகாபாரதம், மறைமுகமாக நீதிகளை போதிக்கும் தத்துவக் கதையேயன்றி, அது சரித்திரம் அல்ல. திரௌபதி என்பது ஆன்மா; பஞ்சபாண்டவர்கள் என்பது ஐம்புலன்கள். திரௌபதி பாண்டவர்களின் மனைவியாக இருந்தாள் என்றால், ஐம் புலன்களுடன் ஆன்மா இணைந்திருந்தது என்பதே பொருளாகும்."

– 'ஹரிஜன்' 4.8.1946 இதழில்
மகாத்மா காந்தி
தகவல்:ஜெ.ரஜினி ராம்கி

---

"எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலை. உங்க ஜாதில அழகழகா எத்தனையோ பெண்கள் இருப்பாங்க. அவங்கள்ள யாரை யாவது கல்யாணம் செய்துக்கங்க. உங்களுக்கென்ன குறை? இப்ப ஆபீசர் வேற. வரதட்சணை நிறைய வரும்."

"நீங்க சொல்றது அத்தனையும் என் மனசைப் புண்படுத்தறது அனு."

"வாங்க போகலாம். உங்க கூட மேற்கொண்டு பேசினா சிக்கல் எதாவது வரும்." எச்சரிக்கை அவளுள் ஒலித்தது.

"அனு எங்கிட்ட பயமா?"

"இல்லை எம்மேலதான் பயம்" என்றாள்.

அப்படி ஏன் சொன்னோம் என்று இரவு படுக்கையில் ரொம்ப நேரம் யோசித்தும் புரியவில்லை. ஏதோ ஒருவிதத்தில் தன் வாழ்வில் குறையென்று இருக்கிறதா? இல்லையே! கோபால் நன்றாகத்தானே வைத்துக் கொண்டிருக்கிறார். குழந்தை இல்லாத குறையா? வேண்டுமென்றுதானே தள்ளிப் போட்டோம். அதுவும் இல்லை. பின் எது?

எதற்கும் இந்தச் செய்தியை கோபாலிடம் அடுத்த முறை போன் செய்யும் போது அல்லது அவர் பாண்டி வரும்போது சொல்லியே ஆகவேண்டும். பிற்காலத்தில் சிக்கல் வரக் கூடாது அல்லவா! மேலும் இனி முரளி எங்கு கூப்பிட்டாலும் போகக் கூடாது என்று தீர்மானித்தாள்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை செஞ்சிக்குப் போகலாம் என்று முரளி அழைத்தபோது, அவள் உடை உடுத்திக் கொண்டு தயாராக இருந்தாள்.

"நான் சொல்றதைக் கேட்டுட்டீங்க."

"என்ன?"

"சூரிதார் போட்டுட்டீங்க. எவ்வளவு பொருத்தமா இருக்குது. கண்ணாடில பார்த்தீங்களா!"

முரளி அவளை முதலில் சேக்ரட் ஹார்ட் சர்ச்சுக்கு அழைத்துச் சென்று வண்ணக் கண்ணாடி சன்னல்களின் அழகைக் காட்டினான். சைகானிலிருந்து ஒருவர் நிதி கொடுத்து கட்டிய தேவாலயம். முன் வாசலில் ஏசுநாதரின் அழகான சிலைக்கு மல்லிகை மாலை போட்டார்கள்.

அங்கிருந்து செஞ்சிக்கு முரளியின் மோட்டார் சைக்கிளில் வேகமாகப் போனதால் முரளியின் தோளைப் பிடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. ப்ரேக் போடும் போது மார்போடு அவன் முதுகில் பட வேண்டியதாயிற்று.

செஞ்சி கோட்டையை நாயக்க மன்னர் --வர் கட்டினாரோ, புதுப்பித்தாரோ 1540 -ி என்று புள்ளி விவரம் எல்லாம் ஏதோ முரளி சொல்லிக் கொண்டு வந்தான். அதெல்லாம் அவளுக்கு ஞாபகமில்லை.

அனுராதா அவன் கையை இயல்பாகப் பிடித்துக் கொண்டிருந்தாள். விரல்கள் முதலில் தொட்டுக் கொண்டு, பிறகு கோத்துக் கொண்ட அந்த ஸ்பரிசத்தில் இருந்த ரத்தச் சூடும் குற்றச் சூடும் அவளுக்குப் பிடித்திருந்தது. அச்சமாகவும் இருந்தது.

ஓர் இடத்தில் கல்படி ஏறும் போது தடுக்கி விழுவது போலப் பாசாங்கு செய்தாள். அப்படியே அவளை வாரி அணைத்துக் கொண்டு "கணநேரம் தப்பியிருந்தா காணாம போயிருப்பீங்க!" என்றான்.

அதன்பின் இருவரிடையே ஒரு இருநிலை பாசாங்கு உறவு இயங்கியது. மேலாக, 'அந்த பூ பாத்தீங்களா? கணேஷ் டெம்பிள் போலாமா?' போன்ற சம்பிரதாய உரையாடல்களின் அடித்தளத்தில் இடைத்த சந்தர்ப்பத்தில் எல்லாம் பட்டுக் கொண்டும் தொட்டுக் கொண்டும் எல்லாமே தற்செயலாக இயல்பாக நடப்பது போல...

அதே இயல்புடன்தான் அவன் சம்மதம் என்பதை நேரடியாகக் கேட்காமல் "கொஞ்ச நேரம் என் ரூமுக்கு வந்துட்டுப் போங்களேன்" என்றான்.

"உக்காருங்க. நான் உங்களை கடிச்சு சாப்பிட மாட்டேன். பயப்படாதீங்க..."

"முத தடவையா ரூமுக்கு வந்திருக்கீங்க. சாப்பிடாம போகலாமா? ரிலாக்ஸ்! ஏன் இப்படி டென்ஸா இருக்கீங்க?"

"இல்லை முரளி. வேண்டாம் ரொம்ப

சிக்கலாயிரும்."

"சிக்கலையெல்லாம் தீர்த்து வெக்கலாம். இப்ப இந்த நாற்காலியில உக்கார மாட்டீங்களா? அதில சிக்கலா?"

"இல்லை. நான் வீட்டுக்குப் போறேன். தாத்தா கவலைப்படுவார். கோபால்கிட்டருந்து போன் வரும்."

"பொய். கோபால் டூர் போயிருக்கார்னு நீங்கதான் சொன்னீங்க."

"போய்ட்டு வந்திருப்பார்."

"சும்மா பொய் சொல்லாதீங்க. உங்களுக்கு இயல்பா தோணுற உணர்ச்சிகளை மறைக்காதீங்க" என்று அவள் கன்னத்தில் புறங்கையால் தடவினான்.

என்ன காரியம் செய்து விட்டேன்! எப்படி இதற்கு நான் சம்மதித்தேன்?

இருட்டில் அந்த அன்னிய அறையில் மின்விசிறி, எண்ணெய் இல்லாமல் அழ, நான் பிறந்து வளர்ந்து பேசத் தெரிந்து பள்ளிக்கு, கல்லூரிக்குப் போனதிலிருந்து வாழ்க்கைப்பட்டது வரை முப்பது வருஷம் போதிக்கப்பட்ட பாடங்கள் அனைத்தையும் கடைசியில் ஒரு பாண்டிச்சேரி இரவிற்குப் பண்டமாற்றி விட்டேனே!

ஏன் அப்படிச் செய்தேன்?

சட்டென்று எழுந்தாள். உடைகளைச் சரிசெய்து கொண்டாள். "முரளி, நான் மெட்ராஸ் போகணும்."

"இப்பவா?"

"ஆமாம். இப்பவே!"

"எதுக்கு?"

"அவர்கிட்ட மன்னிப்பு கேக்கறதுக்கு."

"டோண்ட் பி சில்லி. இதெல்லாம் மன்னிப்புக் கேக்கக்கூடிய அவ்வளவு சீரியஸான விஷயமில்லை."

"முரளி! எப்படி நீ அந்த மாதிரி சொல்வே முரளி? ஒரு பெண்ணுக்கு இதுதானே முக்கியம்."

"நான்சென்ஸ்... மேலும் இப்ப மெட்ராஸுக்கு எந்த பஸ்ஸும் கிடையாது. காலைலதான் போக முடியும். காலை யோசிச்சுப் பாருங்க அனு. இது ஒண்ணும் பெரிசாவே தோன்றாது."

காலை வீட்டுக்குத் திரும்பும் போது ஏ.எஸ். கண்ணன் முரளியைப் பார்க்க வந்திருந்தான். "அனுராதா நீங்க இங்க?" என்று நிலைப்படியில் கண்ணனின் கண்கள் கேட்டன. அனுவுக்கு அளவிலாத அச்சம் ஏற்பட்டது. கண்ணன் அவள் கணவனுக்கு தூரத்து உறவு!

தாத்தாவிடம் சாவி வாங்கும் போது, "எங்கம்மா, ராத்திரி வரலையா?"

"ஆமா ஸார், ஆபீஸ்ல ஆடிட் வரது. அதனால அக்கவுண்ட்ஸ் க்ளோசிங். அங்கேயே டார்மிட்டரிலேயே படுத்துட்டேன். உங்களுக்கு போன் வந்ததா?"

"ராத்திரி ஒரு தடவை அடிச்சுது. எடுக்கலை. நாங்க ரெண்டு பேரும் செக்கொனால் போட்டு தூங்கிக்கிட்டு இருந்தமா, எழுந்திருக்க முடியலை. ஏம்மா ஒரு மாதிரி இருக்கறே?"

சுருக்கென்றது.

தினம் முழுவதும் வீட்டிலேயே, அறையிலேயே இருட்டில் அடைந்து கிடந்தாள். குற்ற உணர்வு வாட்டியது. ஜுரம் போல உணர்ந்தாள். குளிக்கவில்லை. பசியில்லை. மத்தியானம் மோட்டார் சைக்கிள் சப்தம் கேட்டு சன்னலைத் திறந்து பார்த்ததில் முரளி.

அவனைக் கண்டதும் பதற்றம். 'போசைத்தானே போ. இனி உன்னோடு பேச மாட்டேன். பேசவே மாட்டேன். ஒழி. நீ என் பலவீனத்தைப் பயன்படுத்துகிறாய். நேற்று நடந்தது மாபாவம். இனி உனக்கும் எனக்கும்



"அந்த டைரக்டர் பாசத்தை மையமா வெச்சு ஒரு படம் எடுத்தார். ஓடலை. கோபம் வந்தது."

"அப்புறம்?"

"ஆபாசத்தை மையமா வெச்சு ஒரு படம் எடுத்தார். பிச்சுக்கிட்டு ஓடிடுச்சு!"

●●●●●

"ஆபீஸர் ஏன் உன்னைத் திட்டினார்?"

"பாட்டி செத்துப் போயிட்டாங்க. லீவு வேணும்னு லீவு லெட்டர் கொடுத்திருந்தேன். அப்புறம் இன்னிக்கி வேணாம் சார். நாளைக்கு எடுத்துக்கிறேன்னு சொன்னேன்!"

– வெ.ராஜாராமன்



பேச்சு வார்த்தை கிடையாது.'

முரளி கதவைத் தட்ட, தயக்கத்துடன் திறக்க,

"ஹலோ அனு!"

"ஹலோ!"

"உடம்பு சரியில்லையா?"

"ம்."

சாயங்காலம் ஒரு தியேட்டர் க்ருப் அரவிந்தோவின் 'சாவித்திரி' போடறாங்க. பார்த்துட்டு, அப்புறம் டின்னர் ஒரு ரெஸ்டாரண்ட்ல சாப்பிட்டுட்டு வரலாம். வரயா?"

மனசு வேண்டாம் என்கிறது. உடல் வேண்டும் என்கிற அந்த அவஸ்தையில் துடித்துப் போனாள். தான் செய்வது எந்த விதிப்படியும், எந்த தேசத்திலும் மன்னிக்கப் படாத குற்றம் என்று தெரிந்தும் ஏன் அதையே நாடுகிறேன் என்பது புரியாமல் பேதலித்தாள்.

"வரேன்" என்றாள்.

ஒரு வாரத்தில் இதற்கெல்லாம் முடிவு கட்டுவது போல் அந்த அதிர்ச்சி செய்தி வந்து விட்டது.

ஒருவழியில் அது நிம்மதியாகக் கூட இருந்தது. கோபால்சாமியிடமிருந்து அவசரமாக போன் வந்தது.

"அனு நான் திருவள்ளுவர் பஸ் ஸ்டாண்டிலிருந்து பேசறேன். புறப்பட்டு மத்தியானம் பாண்டி வந்துருவேன்."

"இன்னிக்கு உங்க அ...அ... ஆபீஸ் லீவா?"

"இல்லை. விஷயம் முக்கியம். உங்கிட்ட ஒண்ணு கேக்கணும்."

"என்ன கேக்கணும்?" என்றாள் ஹீனசுரமாக.

"பாண்டி வந்ததும் சொல்றேனே. ம் கொஞ்சம் தீவிரமான விஷயம். ரெண்டுல ஒண்ணு தீர்க்க வேண்டிய விஷயம்."

போனை வைத்ததும் அவளுக்குக் கைகால் எல்லாம் நடுங்கின. கோபாலுக்குத் தெரிந்து விட்டது.

உடனே முரளியின் காபினுக்குப் போனாள். முரளியைச் சுற்றி நான்கு பேர் மீட்டிங்கில் இருந்தார்கள். "முரளி உங்க கூட கொஞ்சம் அவசரமா பேசணும்."

"கேன் இட் வெய்ட் அனு?"

"நோ" என்றாள்.

மற்றவர்கள் அவளை ஒருமாதிரியாகப் பார்க்க –

"சொல்லு..."

கண்ணன் ஒன்றுமே அறியாதவன் போல சன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்தான்.

"தனியாப் பேசணும்" என்றாள்.

காண்டீனுக்குச் சென்று உட்கார்ந்தார்கள். "என்ன அனு ஆபீஸ் நேரத்தில இப்படி சங்



"காமிராவை கண்டுபிடிச்ச விஞ்ஞானியை எதுக்கு உங்க தலைவர் இந்த திட்டு திட்டறார்!"

"பின்னே... கள்ள வோட்டு போடறதை தடுக்கிறதுக்கு இப்போ வாக்காளருக்கு அடையாள அட்டை இல்லே தர ஆரம்பிச்சிருக்காங்களாம்!"

– நரேந்திரன்

கடப்படுத்தறே?"

"அவருக்கு நம்மைப் பத்தி தெரிஞ்சு போச்சு."

"யாருக்கு?"

"கோபாலுக்குத்தான். அதைக் கேட்க பஸ் பிடிச்சு அவசர அவசரமா வர்றார்."

"என்ன தெரிஞ்சு போச்சு?"

"பாசாங்கு பண்ணாதே முரளி."

"யாரோ ஆபீஸ்ல வத்தி வெச்சிருக்கணும். இந்த ஆபீஸ் முழுக்க கள்ளர்கள்."

"எல்லாம் இந்த ஏ.எஸ். கண்ணன்தான்!"

"அவனா! கூப்பிடட்டுமா?"

"இப்ப அதுக்கு அவசரமில்லை... அவர்ட்ட என்ன சொல்லப் போறேன், இந்த மாதிரின்னு கேள்விப்பட்டேனே நிசமான்னு கேட்டா!"

"எந்த பஸ்ல வரார். நானும் வரேனே."

"வேற வினையே வேண்டாம்."

"பாரு அனு. நான் சொல்லப் போறது கஷ்டமா இருக்கும். ஆனா நான் உன்னை உபயோகப்படுத்திட்டு விட்டுரப் போற ஆசாமின்னு மட்டும் நினைக்காதே. நான் உன்னைக் கல்யாணம் செய்ய எந்த ரூபத்திலயும், எப்பவும் தயாரா இருக்கேன். உனக்காகவே கல்யாணம் செய்துக்காம காத்திருந்திருக்கேன். என்னவோ தற்செயலா கடவுள் நம்ம ரெண்டு பேரையும் மறுபடி சேத்து வெச்சார். நடக்கக் கூடாதது நடந்து போச்சு. கொஞ்சம் சீக்கிரமா நடந்து போச்சு. உன் கணவர் என்ன சொன்னாலும் கேட்டுக்க. தைரியமா இரு. ஆமாம் சந்தர்ப்பவசத்தால் அப்படித்தான் நடந்து போச்சு. நான் செய்தது உங்களுக்கு ரொம்பப் பெரிய தவறுன்னு இருந்தா, பேசாம என்னை டிவோர்ஸ் கொடுத்துருங்கன்னு பனிச்சுனு சொல்லிரு. அனு உன்னை வெச்சு வாழ்நாள்

வழி
த்துகளின்
இறகுப் படபடப்பு
ஆகாயம் வெகு உயரம்.

●●●

வண்டிவிட்டு
இறக்கப்படும் செங்கற்கள்
நாளை எந்தச் சுவரோ.

●●●

கலவரத்தில்
எரியூட்டப்பட்ட மரப் பொந்து
பார்க்கும்போதெல்லாம் எரியும்.

- பா.சத்தியமோகன்

முழுக்க காப்பாத்தத் தயாரா இருக்கேன்'' என்றான். "இப்ப கூட பஸ் நிலையத்துக்கு வரத் தயார்."

"வேண்டாம், இது என் பிரச்னை."

"என்ன பண்ணப் போறே?"

"தெரியலை."

''அவருக்கு எவ்வளவு தூரம் விஷயம் தெரிஞ்சிருக்குன்னு முதல்ல பாரு. அப்புறம் அதுக்குத் தகுந்தாப்பல... எனக்கு என்னவோ எல்லாத்தையும் போட்டு உடைச்சுர்றது உத்தமம்னு தோணுது. பிரச்னை இப்பவே தீர்ந்துரும். எதுக்கும் நான் பஸ் ஸ்டாண்டு வாசல்ல காத்திருக்கேன். எதாவது ரசாபாசமா நிகழ்ந்து அடிச்சுகிடிச்சு...

"அடிக்க மாட்டார்!" என்றாள்.

**ப**ஸ் நிலையத்தில் குழப்பமாக இருந்தது. ஒரு வாழ்க்கையின் மிக முக்கியமான கணத்தைத் தீர்மானிக்கும் இடமாக இல்லாமல், உற்சாகமாக கதம்பச்சரங்களும் ஆப்பிள் பழங்களும், பேரீச்சம் பழங்களும், லாட்டரிச் சீட்டுகளும், அழகான பெண்முகங்கள் கொண்ட வாரப் பத்திரிகைகளும் விற்றுக் கொண்டிருக்க, என்ன சொல்வேன் எப்படிச் சொல்வேன்? காலில் விழுந்து மன்னிப்புக் கேட்பதா? மன்னிப்பா என்ற போது அவன். சென்னை பஸ்ஸிலிருந்து இறங்கியவன், "அப்பலேருந்து கூப்பிடறேன். காதிலயே வாங்கிக்காம நிக்கிறியே! என்னை அடையாளம் தெரியலையா? நான் உன் கணவன். பேரு கோபால் சாமி'' என்றான்.

அவனைப் பார்த்ததும் பச்சாதாபமாக இருந்தது. அவசரமாக துணி திணித்த பையும் தோல்பையும் செருப்புமாக... 'இவரைப் போய் ஏமாற்றினோமே!'

அவன் முகத்தில் சலனம் கோபம் எதுவும் இல்லை. பரிவுதான் இருந்தது.

"எங்கயாவது அமைதியான இடத்தில் போய் உக்காரலாம். விஷயம் தீவிரமானது இல்லையா!"

"சரி" என்றாள்.

சந்தடியற்ற கடற்கரையில் சிலை நிழலில் உட்கார்ந்தார்கள். கடலலை புரண்டு கொண்டிருக்க, பாறைத் தடுப்பை மீண்டும் மீண்டும் விரும்பிய அலைகள், கடலுக்குள் சற்று தூரம் நுழைந்து விட்டு, முயற்சியைக் கைவிட்டு பாலத்தை சீண்டிக் கொண்டிருந்தன.

"அனு உன்னை ஒண்ணு கேக்கணும்."

"ம். நானே உங்ககிட்ட சொல்லணும்னு" என்று ஆரம்பித்தாள்.

நாக்கு உலர்ந்தது. அவள் கைகளைப் பற்றிக் கொண்டான். "நான் சொல்றது உனக்கு அதிர்ச்சியா இருக்கலாம். தப்பா நெனைச்சுக் காதே. ஆபீஸ்ல இந்த மாதிரி விஷயங்கள் நடக்கிறது சகஜம்தான். சிலது சந்தர்ப்பவசத்தால, விதி வசத்தால நடந்துடறது. இந்தச் சமயங்கள்ளதான் நாம மெச்சூரா நடந்துக் கணும். என்ன?"

"ம்.." முதல் தடவை என்னை மன்னிக்கப் போகிறானா! எப்பேர்ப்பட்ட மகான் இவன்!

"அனு நான் இன்னொரு கல்யாணம் செய்துக்கப் போறேன். ஆபீஸ்ல லதான்னு ஒரு பெண்ணை."

அவளை பயத்துடன் நிமிர்ந்து பார்த்தான். "இதைப் பத்தி என்ன சொல்றே? நீ என்ன விரும்பறயோ அதைச் செய்யறேன். டைவர்ஸ்னா... டைவர்ஸ். இல்லை, பரவால்லை ரெண்டு பேரும் இருக்கோம்னாலும் சரிதான். ஆனா உன்கிட்ட சொல்லாம திருட்டுத்தனமா செய்துக்க விரும்பலை. நான் ரொம்ப நேரடியான ஆசாமி. என்ன சொல்றே? சந்தர்ப்பம் அப்படி. ஒரு ஸ்பெஷல் எடிஷன் தயாரிக்கற போது ரெண்டு பேரும் ரொம்ப நெருக்கமா பழகிப் போய் கல்யாணம் செய்துக்கற நெருக்கடிக்கு வந்துட்டோம். அவ ப்ரெக்னண்ட்டாயிட்டா."

இப்போது சற்றே தைரியம் வந்தவன் போல அவளை நேரடியாக கண்ணுக்குக் கண் பார்த்தான். "என்ன சொல்றே?"

"என்ன சொல்றது?"

"உனக்கு ஷாக்கா இல்லையா?"

"ஆமாம், அதிர்ச்சியாத்தான் இருக்கு."

"நீ ஏதோ எங்கிட்ட சொல்லணும்னியே அனு. என்ன அது?"

''ஒண்ணுமில்லை!'' என்றாள். நிறுத்தி நிதானமாகச் சிரித்தாள்.

## காலேஜ் ஸ்டார்

• நாகராஜன்

# மிஸ்டர் பாலம்!

• நண்பர்களுடன்

குங்குமப் பொட்டு, எண்ணெய் தடவி, படிய வாரிய தலை, தாடிக்குள் சீரியஸாய் அடங்கியிருக்கும் 'சமத்து' முகம்...

ஒரு கல்லூரி மாணவனுக்குரிய எந்த இலக்கணமும் அவரிடம் வெளிப்படையாய்த் தென்படவில்லை. ஆனால் இளமைக்கேயுரிய எதிர்க்கேள்வி எழுப்பும் துடிப்பு, நாகராஜனை மாணவராக அடையாளம் காட்டுகிறது. எழுப்பும் கேள்விகளோ மிக மிக வித்தியாசமான மாணவர் என்று அவரை முத்திரை குத்துகின்றன.

"எதுங்க மூட நம்பிக்கை...? சகுனம் பார்க்கறது எப்படி மூட நம்பிக்கை ஆகும்?" என்கிறார் நாகராஜன் கோபமாக!

"வெளியே புறப்படும்போது கல்தடுக்கினால், உட்கார்ந்து தண்ணி குடிச்சுட்டுப் போகச் சொல்வாங்க. ஆராய்ந்து பார்த்தா, அதுக்கு ஒரு தர்க்கரீதியான காரணம் இருக்கு" என்கிறார்.

"கல்லைக் கூடப் பார்க்காமல் தடுக்கினோம்னா நம்ம கவனம் சிதறியிருக்குன்னு தானே அர்த்தம்? போகிற வேலை ஒழுங்காய் முடியணும் என்றால் கவனச் சிதறல் உதவுமா...? அதுக்குத்தான் உட்கார்ந்து தண்ணீர் குடிக்கச் சொல்றாங்க. அலைஞ்ச மனசை அந்த நேரத்துல திரும்பவும் கட்டுக்குக் கொண்டு வந்து ஒருமுகப்படுத்தறதுக்காக..." என்று விளக்குகிறார்.

"முன் காலத்துல இதையெல்லாம் விஞ்ஞான பூர்வமா ஆராய்ஞ்சுதான் கதையோட சேர்த்துச் சொன்னாங்க. நாம கதையை மட்டும் படிச்சுக்கிட்டு, விஞ்ஞான ஆதாரத்தை மறந்துடறோம். அப்படியும் மூட நம்பிக்கைன்னு கலப்பமா விமர்சனம் பண்றோம்..." கோபப்படுகிறார்!

திருநெல்வேலி அருகேயுள்ள திசையன்விளையைச் சேர்ந்த ஆர். நாகராஜன் படிப்பது திருச்சி நேஷனல் கல்லூரியில்... கல்லூரி முதல்வர் தியாகராஜன் உள்ளிட்ட பலரால் நட்சத்திர மாணவராக இனம்காட்டப்பட்டிருப்பவர்.

"எங்க நாகராஜனை 'பாலம்'னு செல்லமா கூப்டா பொருத்தமாயிருக்கும்னுகூட நாங்க பேசிக்கறதுண்டு..." சக மாணவர்கள் சிரித்துக் கொண்டே சொல்கிறார்கள்.

"ஏன்...?"

"சம்பந்தமில்லாத இரண்டு விஷயங்கன்னு நாங்க நினைக்கிறதை இணைச்சுக்கிட்டேயிருக்கறதுதான் அவன் வேலை..."

விளக்குவதுபோல் நாகராஜன் சொல்கிறார்: "ஐன்ஸ்டீன் என் விஞ்ஞான குரு. அவர், என்ன சொன்னார்...? 'சக்தி (energy) இல்லாத பொருண்மை (mass) இல்லை. பொருண்மை இல்லாத சக்தி இல்லை...' என்றார். ஹிந்து மதமும் அதைத்தானே சொல்கிறது...? சிவமில்லையேல் சக்தி இல்லை; சக்தி இல்லையேல் சிவம் இல்லை!...விஞ்ஞானத்தை ஆழமாய்ப்



## “ஆசியாவின் புலியாவேன்!”

நவாஸ் ஷரீஃப், தம் தேர்தல் பிரசாரக் கூட்டங்களில், வானளாவிய வாக்குறுதி களை வாரி விடவில்லை. சுருக்கமாகப் பேசினார். பாகிஸ்தானின் பொருளாதார முன்னேற்றம் இக்கணத்தில் எத்தனை முக்கி யம் என்பதைச் சுட்டிக்காட்டினார். தூய் மையான ஆட்சி, கட்டுப்பாடான விலை வாசி, தொழில் துவங்கத் தேவையான அடிப்படை வசதிகளை ஏற்படுத்துவது இவையே தம் லட்சியம் என்பதை எடுத்துச் சொன்னார். 'ஆசியாவின் புலி'யாக பாகிஸ்தானை ஆக்குவதற்குப் பாடுபடு வேன் என்றார். அவரது கட்சிச் சின்னம் கூடப் புலிதான்!

நவாஸ் ஷரீஃப் சென்ற முறை பதவி யில் இருந்தபோது, ஏழைகள், டாக்ஸி ஓட்டி சம்பாதிக்க ஒரு எளிய கடன் திட் டத்தை அறிமுகம் செய்தார். அதன்படி, பல கட்சிக்காரர்கள், தங்கள் பழைய கார் களுக்கு புதிய பெயிண்ட் அடித்து, பாங்க் கில் காட்டி, கடன் பெற்று மோசடி செய் தார்கள். ஆனாலும், அதே திட்டத்தின் கீழ், பல ஏழைகளுக்கும் டாக்ஸி ஓட்டிப் பிழைக்க வழி பிறந்தது.

தொழிலதிபர் குடும்பத்தைச் சேர்ந்தவர் ஷரீஃப் என்றாலும், ஏழைகளின் நண்பர் என்ற இமேஜை வெகுகாலமாய் தக்கவைத் துக் கொண்டிருப்பவர்.

தொகுப்பு : **மௌலி**

கார்ட்டூன் நன்றி : **சன்டே டைம்ஸ்**

பார்த்தால் நிச்சயமாய் மெய்ஞானம் தெரியும்ங்க...”

இந்த விஞ்ஞான-மெய்ஞான ஒப்பீடுகளைக் கட்டுரையாக்கி கல்லூரிகளுக்கிடையேயான போட்டியில் பங்கேற்றிருக்கிறார் நாகராஜன்.

ரமண மகரிஷி, காந்திஜி, பரமாச்சார்யார், நேருஜி என்று ஆன்மிகத் தலைவர்களும் தேசத் தலைவர்களும் 'விசிட்' செய்த கல்லூரி நேஷனல் காலேஜ். இப்படிப்பட்ட பின்னணியில் நாகராஜன் போல் ஒருவர் சிந்திப்பது ஆச்சர்யமில்லை என்று எண்ணிவிடக் கூடாது.

மற்றவர்களிலிருந்து அழுத்தந் திருத்தமாய் விலகி நிற்கிறார் நாகராஜன். விஞ்ஞான குரு போல் ஆன்மிக குருவும் உண்டு என்கிறார்.

“யார்...?”

“சுவாமி விவேகானந்தர்தான்!” சிரிக்கிறார். “நியூட்டனின் மூன்றாவது விதி நம் தமிழ்ப் பழமொழியில் உள்ளது தெரியுமா...? - 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்!' என்கிற பழமொழி!

“ஹிந்து சடங்குகளில் செப்பு பாத்திரங்களை நிறையப் பயன்படுத்துவதுண்டு. செம்போட மூலக்கூறு பிரமிட் வடிவத்துல இருக்கும். பிரமிடு வடிவத்துக்குத் தனியான சக்தி உண்டு என்பது தெரிந்த விஷயம்தானே.”

எம்.எஸ்ஸி.பிஸிக்ஸ்!- பரிசோதனைக் கூடம்தாண்டி வந்து பேசும் நாகராஜன், சக மாணவர்கள் வைத்துள்ள செல்லப் பெயரை பெருமையுடன் தாங்கியிருப்பதாகவே சொல்கிறார்.

“என் வாழ்க்கை லட்சியமே அதுதாங்க. நிறைய ஆராய்ச்சி செய்து, நமது தத்துவங்களில் பொதிஞ்சிருக்கற விஞ்ஞான உண்மைகளை உலகுக்கு நிரூபிப்பேன். ஹிந்து மதத்துக்கும் விஞ்ஞானத்துக்குமிடையே பாலமாய் இருக்க விரும்பறேன்...”

மற்ற மாணவர்கள் இவருடைய கருத்துக்களை முழுதாய் ஏற்கிறார்களோ இல்லையோ... மரியாதையுடன் நாகராஜனைக் கொஞ்சம் அண்ணாந்தே பார்க்கிறார்கள்.

“படிப்பிலேயும் சூரனாயிருக்கானே சார்!”

**- கிருஷ்ணா**

# ஆசையில் ஓர் கடிதம்!

கை நிறைய சாமான்களுடன் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான் ஸ்ரீதர். நாளை வெள்ளிக் கிழமை. விடுமுறைதான். நிதானமாக எழுந்து ஆற அமர சமைத்துச் சாப்பிடலாம். பிரகாஷ் இவனுக்கு முன்பாகவே வந்திருந்தான். விசிஆரில் தமிழ்ப் படம் ஓட விட்டு, விஸ்கியும், உருளைக்கிழங்கு வறுவலும் உள்ளே தள்ளிக் கொண்டிருந்தான்.

“ஏண்டா பாவி சமையல் பண்ணலையா?” ஸ்ரீதர் கேட்டான். இன்று பிரகாஷ் சமைக்கும் முறை.

“எல்லாம் செஞ்சாச்சு. அப்புறமா சுட வச்சு சாப்பிடலாம். இப்போ படம் பார்க்கலாம் வா.” டீவியிலிருந்து கண்ணை எடுக்காமல் கூப்பிட்டான்.

ஸ்ரீதர் சாமான்களை டேபின்மேல் வைத்து விட்டு சமையலறையை நோட்டம் விட்டான். சப்பாத்தி, பக்கத்தில் இவன் போனமுறை இந்தியாவிலிருந்து கொண்டுவந்த மாங்காய் ஊறுகாய், கருவடாம் பொரித்து, ரெடிமேட் ரசப் பொடி ரசம், ரைஸ்குக்கரில் சாதம், கடையில் வாங்கி வந்த தயிர்.

“சோம்பேறி...” ஸ்ரீதர் முணுமுணுத்துக் கொண்டான். பெண்டாட்டியானால் கத்தலாம், பிரகாஷ் உயிர் நண்பன். “உனக்கும் ஒரு கிளாஸ் ஊத்தவா?” பிரகாஷ் கேட்டான்.

“வேண்டாம். குடி குடியைக் கெடுக்கும்.”

“போடா, பொண்டாட்டி பிள்ளை குட்டிங்களையெல்லாம் ஊர்ல விட்டுட்டு, இந்த பாலைவனத்துல காயறோம். உபதேசம் பண்றியா? படம் நல்லாயிருக்கு. பார்க்கறதானா பக்கத்துல உட்காரு. ஏதாவது சொல்றதானா கிட்டக்கவே வராதே.”

ஸ்ரீதர் சிரித்துக்கொண்டே கையில் காபியுடன் பிரகாஷ் பக்கத்தில் உட்கார்ந்தான்.

“டேய் மறந்துட்டேனே, உனக்கு ஊரிலேர்ந்து லெட்டர் வந்திருக்கு!”

உள்ளே போய் எடுத்து வந்தான். ஸ்ரீதர் ஆசையாக அந்த வெளிர்நீல கடிதாசியைப் பிரித்துப் படித்தான். ரேகாதான் எழுதியிருந்தாள். ஆச்சரியம்! அவளுக்குக் கடிதம் எழுதும் பழக்கமெல்லாம் கிடையாது.

அரபு நாட்டிலுள்ள அன்புக் கணவனுக்கு,

நீ வியாழனன்று வருகிறாய் என்றதும், வீடு சுறுசுறுப்படைந்து விட்டது. எண்ணெய், சர்க்கரை, நெய் எல்லாம் வாங்கி நிரப்பினோம். கடலை மாவு, அரிசி மாவு, கோதுமை மாவு, இன்னபிற மாவுகள் அரைத்து வைத்து, வீடெல்லாம் தூசு தட்டி, திரைச்சீலை மாற்றி, படுக்கைகளுக்குப் புது உறை போட்டு, கார் அலம்பி... எல்லாமே உனக்காகச் செய்யப்பட்டன. பிள்ளைகளுக்குப் பள்ளியில் விடுமுறை சொல்லி விட்டேன். உன் அம்மா நீ வரும் நாளையும், நேரத்தையும் நூறுமுறை கேட்டு விட்டாள். இத்தனைக்கும் இடையில் நான் புருவம் திருத்தி, நகப்பூச்சு தடவி, முடிக்கு மருதாணியிட்டு (ஒன்றிரண்டு வெள்ளி முடிகளை பொன் நிறமாக்கும் தந்திரம்) உனக்காகக் காத்திருந்தேன். விமான நிலையத்திற்குக் குழந்தைகளும் வருவேன் என்றார்கள். ஆவல்தான். உன்னைப் பார்த்து இரண்டரை வருடங்கள் ஆகிவிட்டன. இப்போது நீ எப்படியிருப்பாய், எண்ணிப் பார்த்தேன். பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை உன் குரல் மட்டும் தொலைபேசியில் ஒலிக்கும். உன் குழந்தைகள் உன்னுடன் பேசி, உன் அம்மாவும் பேசிய பின் எஞ்சிய சில நிமிடங்களில் நம் வார்த்தைகள் வெறும் வங்கிக் கணக்குகளும், வரவு செலவும்தான்! வர்த்தகத்துக்கு இடையில் உன் குரலில் காதலைத் தேடும் நான் முட்டாள். இருந்தாலும், அடுத்தமுறையும் தொலைபேசியில் அதையே எதிர்பார்ப்பேன். நீ ஒருமுறை சொன்னாய் ‘எதிர்பார்ப்புகள் இருந்தால்தான் ஏமாற்றங்கள் ஏற்படும்... அதனால் வாழ்க்கையை அப்படியே ஏற்றுக் கொள்’ என்று. என்னால் முடியவில்லை. எனக்கு நீ வேண்டும். இது ஒன்றுதான் என் எதிர்பார்ப்பு. இந்த எதிர்பார்ப்பு கூடாது என்றால் நான் உன் மனைவியாக இருப்பதில் அர்த்தமேயில்லை.

நம்முடைய கல்யாணத்திற்கே ஏதேனும் அர்த்தம் இருக்கிறதா என்று தூக்கம் வராத நாட்களில் நான் எண்ணிப் பார்த்ததுண்டு. என்னைப் பொறுத்தவரை நம் கல்யாணமும் அருமையான வர்த்தக ஏற்பாடு. என் அப்பா இருபத்தி ஐந்து வருடங்களாக உழைத்துச் சம்பாதித்ததை எல்லாம் இரண்டே நாளில் கரைத்து உன்னை மாப்பிள்ளையாகச் சம்பாதித்தார். உனக்கு அரபு நாட்டு மாப்பிள்ளை என்று அமோக வரவேற்பு. எனக்கு நீ தங்கக் கவசம் போடுவாய் என்று உத்தரவாதமாய் நம்பி உன்னிடம் ஒப்படைத்தார்கள். அவர்கள் வரையில் மிகவும் திருப்திதான். தங்கக் கவசத்திற்குள் வியர்த்துப் புழுங்குவது நான்தானே. அவர்களால் என் வியர்வையின் நாற்றத்தை அறிய முடியாது. தங்கக் கவசம் தடுத்து



ஜானகி விஸ்வநாத்

விடும்.

நீ ஒவ்வொரு முறையும் வாங்கி வரும் வெளிநாட்டுச் சாமான்களுக்காகவே காத்து நிற்கும் கூட்டம் ஒன்று இங்குண்டு. நீ வரும் தேதியில் எனக்கும் முன்னால் அவர்கள், உன்னை வரவேற்கக் காத்திருப்பார்கள். உன்னுடன் நான் சேர்ந்திருக்கப் போகும் பதினைந்து நாட்களைப் பற்றி நான் பதினைந்து மாதங்களாய்த் திட்டம் போட்டது எல்லாம் வீணாகும். உன் உறவினர்களும், நண்பர்களும், இன்னபிறரும் உன்னை உறிஞ்சிய பிறகு, எஞ்சியுள்ள எலும்புக் கூட்டுடன் நான் என்ன காதல் செய்வது? உன் கண்களில் முன்பெல்லாம் காமம் கலந்த காதல் இருந்தது. இப்போது நீ மிகவும் சோர்ந்து போய் இருக்கிறாய். ஏன்? காதல் மறந்து விட்டதா? உன்னைத் திருமணம் செய்து கொண்டு, உன் பணத்துடன் குடித்தனம் நடத்தி எனக்கு அலுத்து விட்டது. இந்த அவலத்தைப் பார்த்து, சிலருக்கு பொறாமை வேறு. 'ஆங், அவளுக்கென்ன ஆம் படையான் கனக விருட்சம்' என்கிறார்கள்.

ஒருவேளை நீ விருட்சம்தானோ? ஆசா பாசங்கள் எதுவுமில்லையோ?

நம் குழந்தையின் முதல் அழுகுரல், முதல் காலடி, முதல் வார்த்தை போன்ற நிகழ்வுகளின் சந்தோஷம் உனக்குத் தெரியுமா? அவர்களுக்குக் காய்ச்சல் வரும்போதும், மருத்துவமனைக்குச் செல்லும்போதும், நான் படும் வேதனை உனக்கு எட்டுமா? திடீரென்று மூன்று நாட்கள் மூத்திரம் போகாமல் குழந்தை அழ, தூக்கிக் கொண்டு போய் அவசர அறுவைச் சிகிச்சை செய்து பிழைக்க வைத்த அந்த துக்க நிமிடங்களின் தவிப்பும், துடிப்பும் உனக்குத் தெரியுமா? இப்படி எதிலுமே கலந்து கொள்ளாமல் ஒதுங்கி வாழ்கிறாயே, உன் மனமும் என்னிடமிருந்து ஒதுங்கி விட்டதா?

'இளமையில் வறுமை' மிகவும் கொடிது. நீ அனுபவித்திருக்கிறாய். அதனால் இன்று பணத்தைத் துரத்துகிறாய். இளமையில் தனிமையை நான் அனுபவிக்கிறேனே, நான் எதைத் துரத்த? உங்கள் ஊரிலிருந்து நீ வாங்கி வந்த தொலைக்காட்சிப் பெட்டியில் காலையும் மாலையும் காதலர்கள் பாடிக் கொண்டேயிருக்க, நான் மட்டும் உன் நினைவுகளுடன், உன் தாயுடனும், உன் குழந்தைகளுடனும் எப்படி குடித்தனம் நடத்துவது? எனக்கு கேப்பங்கஞ்சி போதும். நீ உடனே எல்லாவற்றையும் உதறி விட்டு வா. நீ முன்பு ஒருமுறை சொன்னாய். 'இருட்டில் அழுவதைவிட ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றி வைப்பது மேல்' என்று. என்னிடம் உள்ள மெழுகுவர்த்தியில் திரியில்லையே! நீ கொண்டு வா விளக்கேற்றுவோம்.

உன் பிரிய (?) மனைவி,
ரேகா.

"டேய் காபி ஆறி, ஏடு புடைத்து விட்டது. என்ன காதலா?" டபாய்த்தான் பிரகாஷ்.

"பரவாயில்லை. வடிகட்டி சுடவைத்துக் குடிக்கிறேன்" என்றபடி எழுந்த ஸ்ரீதர், சுட வைத்த காப்பியுடன் டெலிபோனுக்குப் போனான்.

# 41 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அர்த்த பஞ்சகம் — இது ராமாயணம் உணர்த்தும் இன்னொரு தர்மம். வேத, சாஸ்திர புராணங்கள் எல்லாமே அதன் மேல்தான் நிற்கின்றன.

நாம் அடைய வேண்டிய பரப்ரும்மத்தினுடைய ரூபம், வடிவழகு என்ன என்பது நமக்கு நன்றாகத் தெரிய வேண்டும். அதன் ஸ்வரூப, ரூப, குண விசேஷங்களைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அந்த பரப்ரும்மத்தை அடைய வேண்டிய ஆத்ம ஸ்வரூபத்தையும் – அதாவது நாம் யார் என்பதையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

அவனை அடைய வேண்டிய வழி எது என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

அவ்வாறு அடைந்த பிறகு ஏற்படக்கூடிய பலன் என்ன என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

அவனை அடையவிடாமல் தடுக்கும் தடை எது என்றும் தெரிந்து கொள்ள வேண்டும்.

இந்த ஐந்து விஷயங்களின் (அர்த்த பஞ்சகம்) மேல்தான் வேதமே நிற்கிறது.

இந்த உலகம் இருக்கிறதே... ப்ரக்ருதி – இது பகவானைத் தெரிய விடாமல் கண்ணை மறைக்கிறது.

கோயிலில் திரை போடுவதற்குக் காரணம் என்ன...? அவனுக்கும் நமக்கும் நடுவிலே இந்த ப்ரக்ருதி தடையாக இருக்கிறது – திரையாக இருக்கிறது என்பதைக் காட்டத்தான்.

அதனால்தான் 'தெரதீயகராதா' என்று அந்த ஏழுமலையான் சன்னதியிலே நின்று பாடினார் தியாக ப்ரும்மம். அந்தத் திருவேங்கடமுடையான் உருவத்தை மறைத்த திரையைச் சொல்லலை அவர்... அவனுக்கும் நமக்கும் இடையிலே இருக்கிற ப்ரக்ருதியாகிய திரையைச் சொல்கிறார். 'அந்தத் திரையைத் நீ கொள்ளக் கூடாதா? உன்னை நான் என்னுள்ளே பார்க்கும் காலம் வருமா' என்று கேட்கிறார்.

ஆகவே, நாம் எம்பெருமானைப் பார்ப்பதற்குப் பெரிய தடையாக இருக்கிறது இந்த ப்ரக்ருதி சம்பந்தம்.

அவனை அடைவதற்கான உபாயம் பக்தி, சரணாகதி. அவனை அடைந்த பிற்பாடு அவன் திருவடியிலேயே நித்ய கைங்கர்யம் பண்ணும் தன்மை உண்டாகும்.



# குறையொன்றுமில்லை

சூரியன் இருக்கிறான்... ஒளிக்கற்றையை உடையவனாகவும் இருக்கிறான். ஒளியே அவனாகவும் இருக்கிறான். அந்த மாதிரி இங்கே ஆத்மா, அறிவை உடையதாகவும் இருக்கிறது. அறிவா கவும் இருக்கிறது. அதற்கு இருக்கும்படியான ஞானம் மிகவும் உயர்ந்தது. அந்த ஞானம் பரவி மோக்ஷத்தை அடைந்துவிட்டால், எல்லாவற்றையும் இருக்கிற இடத்தில் இருந்தபடியே ஆத்மா உணர ஆரம்பிக்கும்.

ஆகவே ஆத்ம ஸ்வரூபத்தை உணர வேண்டும். அதைத்தான் ராமாயணம் நமக்கு நன்கு விளக்கிக் காட்டுகிறது. (அர்த்த பஞ் சகம்)

ஆகிஞ்சன்யம் என்பதும் ஒரு தர்மம். எவ்வளவு தான் நாம் செய்தாலும் அது பகவானுடைய காருண்யத்துக்கு எதிரில் செல்லாது. ஒரு எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து விட்டு ராஜபதவி கேட்கிற மாதிரிதான் அது! மேலும், பகவானிடத்திலே போய், 'நான் அதைக் கொடுத்தேனே– நீ இதைத் தரக்கூடாதா?' என்று கேட்கலாமா? 'அன்றைய தினம் நூறு தேங்காய் உடைச்சேனே' என்று ஞாபகப்படுத்தலாமா...!

நாம் எதைத்தான் செய்தாலும் அவன் காருண்யத்திடத்திலே விலை செல்லாது. அதை நாம் உணர வேண்டும்.

தொண்டரடிப்பொடியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ் வார், திருமழிசையாழ்வார் – இவர்கள் எல்லோரும் சொல்லக் கூடிய விஷயத்தை நாம் பார்த்தோமானால், அந்தப் பாசுரங் களைப் படித்தோமானால், பகவானுக்கெதிரிலே நாம் எதையும் விசேஷமாகச் சொல்ல முடியாது என்பதுதான் தெரிகிறது.

பெரியாழ்வார் சொல்கிறார் பாருங்கள். 'நின்னருளே புரிந் திருந்தேன்...' உன் தயைக்கே நான் பாத்திரம்... உன் கிருபைக்கே நான் பாத்திரம்... இப்படிச் சொல்ல வேண்டுமே யொழிய, 'நான் அதைச் செய்தேன், இதைச் செய்தேன்...' என்றெல்லாம் பகவானிடத்திலே பேரம் பண்ணக் கூடாது.

ஆகிஞ்சன்யம் என்பதை யும் ராமாய



ணம் விளக்கிக் காட்டுகிறது. சரித்திரத்தில் அது காணக் கிடைக்கிறது. விபீஷணன் அதை எடுத்துச் சொல்கிறான். பரதன் அதை எடுத்துச் சொல்கிறான். இவர்கள் இருவருமே தங்களிடம் எதுவும் கைமுதல் இல்லை என்று பகவானுடைய சரணாரவிந்தத்தை ஆச்ரயித்தவர்கள். அது ஆகிஞ்சன்யம் எனப்படுவது.

அகிஞ்சன சுலபம் என்பது மற்றும் ஒரு தர்மம். பரமாத்மாவை அடைதல் ஒரு தர்மம் என்று சொன்னேன். அது அவ்வளவு சுலபத்தில் கிடைக்காது. இடையிலே ஒருத்தர் இருக்க வேண்டும். அவர்தான் ஆசார்யர்.

ஆசார்யரின் துணையால்தான் அவன் நமக்குக் கிடைப்பான்; நாம் அவனைச் சென்றடையலாம்.

ஆஞ்சநேயனுக்கு இங்கே ஆசார்ய ஸ்தானம் இருக்கிறது என்று சுவாமி தேசிகன் விவரிக்கிறார்.

ராமன் தன் திருக்கையில் அணிந்திருக்கும் படியான கணையாழி மோதிரத்தை, ஆஞ்சநேயன்தான் எடுத்துப் போய் சீதா பிராட்டியின் கையிலே வைக்கிறான்.

சீதையை அங்கே ஜீவனாக நம் மனத்திலே உருவகப்படுத்திக் கொள்ள வேண்டும். பகவத் அனுக்ரஹம் அந்த ஜீவனுக்குப் பூரணமாய் இருக்கிறது.

மோதிரத்தை ஆஞ்சநேயன் அங்கு கொண்டு போய்க் கொடுத்தவுடன் சீதா பிராட்டி என்கிற ஜீவனை எம்பெருமான் திருவடியிலே சேர்க்கும் பொறுப்பும் அவனுடையதாகிறது.

ஜீவனானது எப்போதும் பரமாத்மா திருவடியிலே தலைவணங்கிக் கொண்டிருக்க வேண்டும் என்பதைக் காட்டத்தான் சீதா தேவி தன் சிரோபூஷணத்தை (தலை ஆபரணம்) ஆஞ்சநேயனிடம் கொடுத்தனுப்பினாள்.

ராமனின் கைவிரல் மோதிரம் பரமாத்மாவின் அபய ஹஸ்தத்தைக் குறிக்கிறது.

சீதையின் சூடாமணி, தலைவணங்கிய நிலையைக் குறிக்கிறது.

---

***"சுவாமி! 'சித்தி' பெற என்ன செய்வது?"***

***"முதலில் உன் 'சித்தப்பா'வைத் திருமணம் செய்து கொள்ளச் சொல்!"***

***-பென்னை சி. முருகன்***



இரண்டையும் நடத்தி வைத்தவன் ஆஞ்சநேயன்.

ராமாயணத்திலே மூன்று இடங்களில் சீதா கல்யாணம் நடக்கிறது!

– இப்படிச் சொன்னால் ஆச்சர்யம் ஏற்படுகிறதல்லவா?

பால காண்டத்தில் நடந்த கல்யாணத்தை வால்மீகி விவரித்தார்.

அயோத்தியா காண்டம் முடிகிற பகுதியில், இன்னொரு சீதா கல்யாணம்!

எங்கேயென்றால்... அனுசூயையிடம் சீதா பிராட்டி தன்னுடைய வாக்கினாலேயே வர்ணிக்கிறாள். தன் கல்யாணம் நடந்த விதத்தைச் சொல்கிறாள். அங்கே இரண்டாவது தடவையாக சீதா கல்யாணத்தைக் கேட்கிறோம்.

இந்த இரண்டு கல்யாணமும் யாருக்கு வேண்டுமானாலும் நடக்கும். ஒருத்தருக்குக் கல்யாணம் நடப்பதும்; ஒருத்தர் தம் கல்யாணத்தை மற்றவரிடம் விவரிப்பதும் அதிசயமில்லை.

ஆனால் சுந்தர காண்டத்திலே நடந்த கல்யாணம் இருக்கிறதே, அது ஒருசிலருக்குத்தான் நடக்கும். அதுதான் ஆத்ம விவாகம். 'இந்த ஆத்மா அவனுடையது' என்று சமர்ப்பிக்கிற நிலை. அதை ஓர் ஆசார்யர் பக்கத்திலே இருந்துதான் நடத்த வேண்டும். அதைக் காட்டத்தான் ஆஞ்சநேயன், சுந்தர காண்டத்திலே சீதாத்மாவை எம்பெருமானின் திருவடியிலே சேர்த்து வைத்தான்.

கிருதக்ருத்யத்வம் என்கிற ஓர் உயர்ந்த விஷயமும் ராமாயணத்திலே சொல்லப்படுகிறது. 'கிருதக்ருத்யாள்' யாரென்றால் தனக்கு விதிக்கப்பட்ட கடமையைச் செய்து முடித்தவர்கள். விபீஷண பட்டாபிஷேகம், முடிந்த பிறகு, 'கிருதக்ருயத்வோ ராம :' என்று பகவான் அழைக்கப்படுகிறார்.

ராமபிரான் கிருதக்ருத்யன் ஆனான். நான் சொன்ன உயர்ந்த தர்மத்தை நடத்திக் காட்டியவனானான்.

இன்னுமொரு தர்மம் – இப்படியிப்படி இரு..., இப்படியிப்படி இராதே என்று எடுத்துச் சொல்கிறது. அதாவது, 'வாலி-சுக்ரீவன் போல் இராதே; ராம-லக்ஷ்மணரைப் போல் இரு!' என்கிறது!

வாலி-சுக்ரீவ யுத்தம் நடக்கிறது. அதைப் பார்த்துவிட்டு லக்ஷ்மணன் சகிக்க முடியாமல் தமையனிடம் வந்து கேட்கிறான் : "இப்படி அண்ணன் – தம்பி சண்டை போடறாளே...? இது நன்றாகவா இருக்கு...?"

அதற்கு ராமன் சொல்கிறான் பாருங்கள் : "ஹே லக்ஷ்மணா! என்ன நினைத்துக் கொண்டு பேசுகிறாய் நீ...? இவர்கள் சண்டை போடு



வதைப் பார்த்து என்னிடம் வந்து கேட்கிறாயே? இந்தக் குரங்கின் நிலை – விலங்கின் நிலை உனக்குப் பெரிதாகத் தெரிகிறதே... இதைப் போல் மனிதர்களும் உண்டு என்பது உனக்குத் தெரியாதா...?"

– சொன்னவன் ஒரு படி மேலே போய்ப் பேசுகிறான் : "நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்...? எல்லா தம்பியும் பரதனைப் போல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா...? அப்படிக் கிடையாது!" என்கிறான்.

உண்மையில் லக்ஷ்மணனிடம் பேசும்போது என்ன சொல்ல வேண்டும் பரமாத்மா...?

'எல்லாரும் உன்னைப் போல் என்று நினைத்தாயா...?' என்றல்லவா கேட்க வேண்டும்.

'உன்னைப் போல் ஒரு தம்பி உண்டோ?' என்று லக்ஷ்மணனை பரமாத்மா ஏன் ஸ்தோத்திரம் பண்ணவில்லை?' எங்கேயோ இருக்கிற பரதனைப் பற்றி ஏன் லக்ஷ்மணனிடத்திலே சொல்கிறான்?

லக்ஷ்மணனும், பரதனுடைய பெருமையை ராமன் பேசும்போது ஆனந்தமாய்க் கேட்கிறான். கொஞ்சம் கூட பொறாமையின்றிக் கேட்கிறான்.

'கூடவே இருந்து இவ்வளவு கைங்கர்யம் பண்ணியிருக்கிறோம். நம்மைச் சொல்லாமல், எங்கோ இருக்கிற பரதனைச் சொல்கிறானே...!' என்றொரு எண்ணம் லக்ஷ்மணனுக்கு வரவில்லை.

அந்த பரதனுடைய நிலை என்ன? அந்தக் குழந்தை எத்தனை சிரமப்படுகிறான்? பழிச் சொல்லுக்கு ஆளான பரதன், அர்த்த ராத்திரியில் சரயுவில் போய் ஸ்நானம் பண்ணிவிட்டு வருவானாம்! ஏனென்றால் பகலில் மற்றவர்கள் ஸ்நானம் செய்யும் நேரத்தில் போனால், 'அண்ணாவைக் காட்டுக்கு அனுப்பினவனுக்கு இந்த மகாபாவிக்கு – ஸ்நானம் ஒரு கேடா?' என்று யாராவது பேசி விடுவார்களோ என்கிற பயமாம்!

அப்படிப்பட்ட பரதனை நினைத்து நினைத்து பரமாத்மா பஞ்சவடியிலே உருகினான். அவனையே உதாரணமாகச் சொன்னான்.

அந்தக் காலத்தில் ஒரு வழக்கம். அண்ணன் தம்பிகள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டு மத்யஸ்தத்துக்கு வந்தால் மத்யஸ்தம் செய்பவர்கள் என்ன சண்டை என்று கேட்க மாட்டார்களாம். ராமாயணத்திலிருந்து ஒரு சுலோகத்தைச் சொல்வார்களாம். சொன்னவுடனேயே, சண்டை போட்ட இரண்டு சகோதரர்களும் கட்டிக்கொண்டு ஒற்றுமையாய்ப் போய்விடுவார்களாம்!

ராமாயணம் அந்த அளவுக்கு நம்மை சிக்ஷிக்கிறது. இப்படி இப்படி இரு... என்று மட்டுமல்லாமல் இப்படியெல்லாம் இராதே என்றும் கற்றுத் தருகிறது.

(தொடரும்)



• உமாசங்கர் சர்மா





• அமிர்தசரஸ் பெண்மணி

# துப்பாக்கியை ஒதுக்கினார்; தூரிகையை எடுத்தார்!

"நான் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு போலீஸ் உத்தியோகத்துக்குப் போக வேண்டும் என்றுதான் என் அப்பா ஆசைப்பட்டார். நானோ தூரிகை எடுத்துக் கொண்டு ஓவியம் வரைய விரும்பினேன்!" என்று சொல்லும் இளைஞர் உமாசங்கர் சர்மா, கிஷன்கஞ்சைச் சேர்ந்தவர்.

ராஜஸ்தானத்து அஜ்மீரிலிருந்து அரைமணி நேரப் பயணம்தான் கிஷன்கஞ்ச். சின்னஞ்சிறு ஊர்.

"கிஷன்கஞ்ச் மகாராஜா சாவந்த் சிங் ஓர் ஓவியர். கவிஞர். பதினேழாம் நூற்றாண்டில் ஆட்சி செய்த அரசர். அவருடைய பாணி ஓவியங்கள் 'மினியேச்சர் பெயின்டிங்'. அதைத்தான் நானும் வரைகிறேன்!"

மிக நுணுக்கமான வேலைப்பாடுகள் மிகுந்த ஓவியங்கள். கையில் பூதக் கண்ணாடியோடு பார்த்தால் ஒவ்வொரு கீற்றும் துல்லியமாகத் தெரிகிறது. ஓவியப் பெண்ணின் ஆபரணங்கள் என்றால் நிஜ ஆபரணங்களில் உள்ளது போன்றே அத்தனை நுணுக்கங்களையும் கட்சிதமாக வரைந்திருக்கிறார்.

இத்தனை நுணுக்கங்களை எப்படி வரைய முடிகிறது இவரால்? "இதுபோன்ற நுணுக்கமான வேலைப்பாடுகளுடைய படங்களை வரைகிறபோது நான் பயன்படுத்துகிற பிரஷ் எப்படிப்பட்டது தெரியுமா? அணிலின் ஒரேயொரு ரோமம் கொண்ட பிரஷ்! நான் பூதக் கண்ணாடி வைத்துக் கொண்டு வரைவதில்லை. வெறும் கண்ணால்தான் வரைகிறேன்!"

இப்படி இவர் வரையும் ஓவியங்களின் விலை ஐயாயிரத்திலிருந்து பதின்மூன்றாயிரம் வரை. ரசிப்புத் தன்மையுள்ள சாதாரண மக்களால் வாங்க முடியுமா? "அவர்களும் வாங்க வேண்டும் என்பதால்தான் இதே போன்ற நுணுக்கமான மினியேச்சர் ஓவியங்களை மார்பிளிலும் வரைகிறேன். அவற்றின் விலை ஐநூறிலிருந்து ஆரம்பம்!"

சில ஓவியங்களில், நம் தஞ்சாவூர்ப் பாணி ஓவியம் போல, தங்கமும் பளீரென ஒளிவிடும் வண்ண வண்ணக் கற்களும் பின்னணியில் மின்னுகின்றன.

ஓர் ஓவியம் வரைய, சுமார் இரண்டு மாதங்களாகின்றன சர்மாவுக்கு.

"பள்ளிக்கூட நாட்களில் பாடத்தை



• ராஜாபிரதாப் சிங்

விட்டுவிட்டு ஓவியர்களின் வீட்டுக்குப் போய் விடுவேன். அவர்களின் கான்வாஸ்களில் உருவாகும் ஓவியங்களை அலுக்காமல் சலிக்காமல் பார்த்துக் கொண்டே இருப்பேன்!" என்கிறார் உமாசங்கர் சர்மா.

அந்தக் காலத்து முத்திரைத் தாள்களில் இவர் வரைந்திருக்கும் ரஜபுத்திர ஓவியங்களும் செபியா வண்ணத்தில், கையினால் தயாரிக்கப்பட்ட காகிதத்தில் வரைந்திருக்கும் பாம்பு - கீரிச் சண்டையை வேடிக்கை காண்பிக்கும் லம்பாடி ஓவியமும், இவரைப் பரம்பரை ஓவியரோ என்று நினைக்கத் தோன்றும். ஆனால் குரு என்று யாருமே இல்லாமல் உருவானவர் உமாசங்கர் சர்மா.

ஆயில் பெயின்டிங்குகளிலும் அசர வைக்கிறார். பாலைவனக் காட்சிகள், வெயிலின் வீச்சோடு தத்ரூபமாக உயிர் பெற்று நம் கண் முன்னே காட்சி தருகின்றன.

"இது மறைந்து கொண்டிருக்கும் கலை. நான் எட்டுப் பேருக்கு இப்போது இந்த வகை ஓவியங்களைக் கற்றுத் தருகிறேன்!"

இவரது ஆர்வத்தையும் திறமையையும் பார்த்த பஜாஜ் நிறுவனம், பம்பாய்க்கு இவரை அழைத்து, ஓவிய ஆர்வம் உள்ளவர்களுக்கு ஒரு வார பயிற்சி அளிக்கச் செய்தது.

பிரான்ஸ் நாட்டின் புகழ்பெற்ற அவிக்னான் விழாவுக்கு இந்தியன் எக்ஸ்பிரஸ் தனது செலவில் இவரை அனுப்பி வைத்தது.

திருப்புமுனையாக அமைந்தது -

"தொழிலதிபர் சி.ஜி. மெர்க்சன்ட் பம்பாயில் என்னைப் பார்க்க வந்தார். அவர் வீட்டில் இருந்த முப்பது மினியேச்சர் பெயின்டிங்குகளை மறுபடி புதிது மாதிரியே வரைந்து தர முடியுமா என்று கேட்டார். அவர் பல பேரை முயன்று பார்த்துத் தோற்றிருக்கிறார். நான் வரைந்து கொடுத்தவுடன் மிகவும் சந்தோஷப்பட்டார். அவர் குடும்பத்தைச் சேர்ந்த பத்து உறவினர்களுக்கும் அந்த முப்பது ஓவியங்களையும் வரைந்து கொடுக்கச் சொன்னார். அவர் போன வருடம் காலமானார். ஆனால் அந்தக் குடும்பம் என் மீது இன்றும் அக்கறையும், அன்பும் காட்டி வருகிறது!"

மனைவி மதுரா சர்மா. கூடவே இருந்து ஒத்துழைப்பதோடு மட்டுமின்றி, தாமும் வரைய ஆரம்பித்திருக்கிறார்! அழகாக விளக்கங்களும் தருகிறார்.

"மகாபலிபுரம் சிற்பங்களைப் போய்ப் பார்த்தோம். அவற்றைக்கூட, அவற்றின் நுணுக்கங்களோடு மினியேச்சர் பெயின்டிங் பாணியில் வரைய முடியும்!" என்கிறார் உமாசங்கர் சர்மா.

சந்திப்பு: **சாருகேசி**



• பாலைவனம்....

**சு**ஜாதாவின் நாவலை திருப்பிக் கொடுத்து விட்டு வந்து விடலாம் என்றவளை இந்துதான் கட்டாயப்படுத்தி, தன் அண்ணனின் கல்யாண வீடியோவைப் பார்த்துவிட்டுப் போகச் சொன்னாள்.

"இன்னொரு தடவை பார்த்துக்கறேனே இந்து."

"அப்புறம் சந்தர்ப்பம் அமையாது ரேவதி."

"நான்தான் மேரேஜ் அட்டெண்ட் பண்ணி னேனே..."

"இது... மேரேஜ் வீடியோ மாதிரி இல்லாம, ஒரு படம் பார்க்கிற மாதிரி இருக்கு பாரேன். ஃப்ளவர்ஸ், மழை, கோபுரம், மணிக்கதவு, பறவைன்னு பல ஷாட்ஸை சேர்த்து, ம்யூசிக் வேற ரம்யமா மிக்ஸ் பண்ணி... சூப்பரா வந்திருக்கு..."

பிறகு ரேவதியால் தட்ட முடியவில்லை.

பெரிய ஹாலில் நிறையப் பேர் உட்கார்ந்து இருக்க.... ரேவதியும் அமர்ந்தாள்.

இந்து சொன்னது நிஜம்தான்.

சினிமா பாணியில் நட்சத்திரம் நடுவே பெண், மாப்பிள்ளை முகம் சுற்றியது.

திறக்கும் மணிக்கதவு. வாசல் கோலம்.

நீலவானம்... கோபுரம் நிழல் படம் போல.

பெண்ணின் தலை அலங்காரம் இன்ச் இன்ச்சாக... புடைவை அழகு தனியாக நடுநடுவே க்ளோஸப்பில் ரேவதி யின் முகம் தெரிய.




இந்துவின் அம்மா திரும்பிச் சிரித் தாள்.

ஊஞ்சல் ஆடும் போது கேமராவும் ஆடி அசைந்து படமாக்கி இருக்கிறது.

பாதங்களை மட்டும் டைட் க்ளோசப்பில் காட்டி அசத்தி.

இடையிடையே ரேவதியின் முகம் ஃப்ரீஸ் ஆகி இருக்கிறது.

விளம்பரப்படம் போல் -

சிரிக்கும் ரேவதி...

பேசும் ரேவதி...

திரும்பும் ரேவதி...

முகம் சுளிக்கும் ரேவதி.

ஒரு கண் மாதிரி அவளை கவனமாக ரசித்துப் பதிவாக்கி இருக்கிறது.

மற்றவர்களுக்கு யதார்த்தமாக இருக்கலாம்.

அவளுக்கு அநியாயமாகத் தோன்றியது.

அப்பாவிடமே நியாயத்தைப் பட்டெனச் சொல்லும் ரேவதி.

ஆண் என்பதால் அண்ணன் சொல்வதற்கு அடங்கிப் போக வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது என்று வாதாடும் ரேவதி.

அம்மாவிடம் 'சமையல் சாதாரண விஷயம், அதுவே பெண்ணின் முழு வேலை யன்று' என்று வாதாடுகிற ரேவதி...

நிச்சயம் இந்த வீடியோகிராபருக்குத் தெரியாது.

"என்ன ரேவதி?" இந்து உலுக்கினாள்.

"என்ன...." சமாளித்தாள்.

"நீயே அசத்

துட்டே பார்த்தியா!"

"ஆமாம்..."

"இந்த வீடியோகிராபர் அட்ரஸ் தர முடியுமா..."

"அட அதுக்குள்ளே உன் கல்யாணத்துக்கு அட்வான்ஸ் புக்கிங்கா..."

"ப்ளீஸ். விளையாடாதே இந்து. ஐ'ம் சீரியஸ்."

"சாரிம்மா. இது அண்ணன் ஃப்ரெண்ட் சிவா எடுத்தது. பெருமாள் கோவில் தெரு, ஏழாம் நம்பர் வீடு. வாசல்ல போஸ்ட் பாக்ஸ் இருக்கும்."

தன் வீட்டை அடைந்ததும்



வாசலில் அம்மா நின்று கொண்டிருந்தாள்.

"ஏன் ரேவதி லேட்?"

"நான் என்னம்மா சின்னக் குழந்தையா இப்படிப் பதர்றே..."

"சின்னக் குழந்தையா இருந்தா பிரச்னையே இல்லையே. வயசுப் பொண்ணு."

"அம்மா... இன்னிக்கு இந்து வீட்ல அவங்க அண்ணன் மேரேஜ் கேசட் பார்த்தேன்."

"அதான் லேட்டா..."

"ம்..."

மேற்கொண்டு அம்மாவிடம் தன்னை அதிகம் காட்டி இருப்பதைச் சொல்லவில்லை.

எப்படி இருப்பான் அந்த வீடியோகிராபர்...

தனியே ஸ்டுடியோவிற்கு போகலாமா? ஏன் என்னை அதிகம் எடுத்தாய் என்று கேட்க முடியுமா....

அண்ணனையோ, அப்பாவையோ துணைக்கு அழைக்கலாமா...

இது சாதாரண விஷயம் என்று சொல்லி விடுவார்களா...

இந்துவைக் கூப்பிடலாமா...

# ஆசை முகம்

"நீ அழகா இருக்கே. அதனால கவர் பண்ணி இருக்கலாம்..." என்று ஈஸியாக சொல்லி விடுவானா...

சே... என்னெல்லாம் பிரச்னைகள்.

வீடியோ பார்க்கிற ஒவ்வொருத்தரும் அவள் யாரென்று விசாரிக்கப் போகிறார்கள்.

பையன் இருந்தால் தங்கள் பையனுக்குப் பெண் கேட்டு வரப் போகிறார்கள்.

அப்பா, அம்மாவை அடிக்கடி நச்சரித்து, அவளையும் அக்கா மாதிரி குடும்பக் கூண்டில் பூட்டிவிடப் போகிறார்கள்...

எத்தனை நாள் எதிர்த்துக் கொண்டே இருக்க முடியும்...

ரொம்பவும் யோசித்துப் பார்த்ததில் அவனைப் பார்த்துப் பேசி விடுவதுதான் சரி என்று தோன்றியது.

இனியாவது வேறு எந்த கல்யாணததிலும் தன்னை அதிகம் காட்டாமல் இருப்பான்.

மறுநாள் அம்மாவிடம் எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸ் போவதாகப் பொய் சொல்லி விட்டு சீக்கிரம் கிளம்பினாள்.

## அருள்வாக்கு

பத்மபாதருக்கு ஒரு பெரியவர் நரஸிம்ஹ மந்த்ரோபதேசம் பண்ணினார். நன்றாக ஜபம் பண்ணி ஸித்தி பெற்று நரஸிம்ஹமூர்த்தியை தரிசிக்கணுமென்று அவருக்கு ஆசை உண்டாயிற்று. ஏகாந்தமாக ஒரு மலையின் உச்சியிலிருந்த காட்டுக்குப் போய்த் தபஸ் பண்ண உட்கார்ந்தார்.

ஒரு வேடன் அவரிடம் வந்து, "எங்கள் மாதிரி பலசாலியான வேடர்கள் இங்கே வேட்டையாடிப் பிழைப்போம். பூஞ்சை ப்ராமணன், உனக்கு இங்கே எதுவும் கிடைக்காமல் கஷ்டப்படுவாய். எதுக்கு வந்தே?" என்று கேட்டான்.

நரஸிம்ஹர், தபஸ் என்றெல்லாம் சொன்னால் அவனுக்குப் புரியாதென்று அவர், "இடுப்புக்குக் கீழே மநுஷ்யன் மாதிரியும் மேலே சிங்கம் மாதிரியும் ஒரு ப்ராணி உண்டு. எனக்கு அது தேவைப்படுகிறது. இந்தக் காட்டில் அது இருக்கிறதென்று கேள்வி. அதற்காகத்தான் வந்தேன்" என்றார்.

"இந்தக் காட்டிலே நான் பார்க்காத இடமோ, எனக்குத் தெரியாத மிருகமோ ஒண்ணும் கிடையாது. ஆனால் நீ சொன்ன மாதிரி மிருகம் என் கண்ணில் பட்டதே இல்லை. நீ சொல்வது மட்டும் நிஜமென்பாயானால் அதை நான் பார்க்காமல் விடுவதில்லை. நானே அதைப் பிடித்துக் கொண்டு வந்து கொடுக்கிறேன். நீ கஷ்டப்பட வேண்டாம். ஆனால் நிஜமாகவே அப்படி உண்டா, சொல்லு" என்றான்.

"நிஜமாக அது இங்கே இருக்கிறது. ஆனால் உன்னால் பார்க்க முடியாது. உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ" என்றார்.

"அப்படியா சொன்னே? நாளைக்கு ஸாயங்காலத்துக்குள் அதை நான் பிடித்துக்கொண்டு வருகிறேனா, இல்லையா, பாரு! அது மட்டும் முடியாவிட்டால் இந்த உயிரை விட்டுவிடுவேன். இந்தக் காட்டுக்கே பெரிய வேடன் என்று இருந்து கொண்டு, உன் மாதிரி ஐயர் கஷ்டம் பார்க்காமல் எங்கள் இடத்துக்கு வந்திருக்கும்போது உதவி பண்ண லாயக்கில்லையென்றால் நான் உசிரை வைத்துக் கொண்டு என்ன ப்ரயோஜனம்?" என்று வேடன் நரஸிம்மத்தைத் தேடிக்கொண்டு புறப்பட்டான். காடு பூரா தேடு தேடு என்று தேடினான். ஆஹார நினைவே இல்லாமல், களைப்பு பார்க்காமல் ஒரே குறியாய்த் தேடினான். அன்றைக்கு முழுதும் போய் விட்டது. மிருகம் அகப்படவில்லை. அவனும் விடவில்லை. மறுநாளும் தேடினான். ஸாயங்கால வேளையும் வந்து விட்டது.

வழியெல்லாம் சிந்தனை.

வயதானவராக இருந்தால்....

இல்லை விளையாட்டுப் பிள்ளையாக இருந்து லெண்டலடித்தால்....

ரெண்டில் ஒன்று பார்த்து விடுவது என்று தீர்மானித்தான்.

வீட்டு வாசலில் யமாஹா நின்று கொண்டிருந்தது. யமஹாதகன்.

வாசல் கதவைத் தட்டிய போது ஒரு நடுத்தர வயது அம்மாள் கதவைத் திறந்து இவளைப் பார்த்துச் சிரித்து,

"வாம்மா ரேவதி..." என்று நெடுநாள் பழகியவர்களைப் போல வரவேற்றது ஆச்சரியப்படுத்தியது.

"என் பேரு..."

"உள்ளே வா. விவரமா பேசலாம்." கதவை விரியத் திறந்தார்கள்.

கிராம வீடு. நீளமான வீடு. கனமான வேலைப்பாடு நிறைந்த தேக்குக் கதவுகள்.

மணிரத்னம் படம் மாதிரி கொஞ்சம் இருட்டு.

மரநாற்காலிகள்.

கூடத்தின் நடுவே ஊஞ்சல்.

சின்னச் சின்ன ரூம்கள்.

ஓரத்தில் பெரிய டீ.வி டெக். துணி போட்டு மூடி வீடியோ கேமரா.

"சிவா..."

சிவா சட்டையில்லாமல் வெளிப்பட்டான்.

"என்னம்மா..."

"ரேவதி..."

"ஹலோ... சாரி... ஒரு நிமிஷம். அம்மா காப்பி தயார் பண்ணு..."

"இல்லே.. நான் காப்பி சாப்பிட வரலை. சண்டை போட வந்தேன்.." சொல்ல முடியவில்லை.

மனிதர்கள் அத்தனை உயர்வானவர்களாகத் தெரிந்தார்கள்.

ஒரு வொயிட் ஷர்ட்டில் வந்த சிவாவிற்கு முப்பதிற்குள் வயதிருக்கும்.

நாசர் மாதிரி கருண்முடி.

சாந்தமான பார்வை.

சிரிக்கும் கண்கள்.

"சொல்லுங்கோ ரேவதி..."

"நான் இந்து அண்ணன் கல்யாண வீடியோ பார்த்தேன்..."

"சரி..."

பிறகு எப்படி ஆரம்பிக்க என்று தெரியவில்லை.

'ஸரி', ஐயரிடம் சொன்னதை நம்மால் செய்ய முடியவில்லை. அவர் பொய் சொல்லியிருக்க மாட்டார். நாம்தான் கையாலாகாதவனாகிவிட்டோம். உயிரை விட்டுவிட வேண்டியதுதான்' என்று தீர்மானம் பண்ணினான்.



அங்கே படர்ந்திருந்த கொடிகளை அறுத்தான்! தூக்குப் போட்டுக் கொள்வதற்காகக் கிளையில் கட்டினான்.

அந்த ஸமயத்தில் எதிரே ஒரு மிருகம் நின்றது.

ஐயர் சொன்ன வர்ணனைப்படியே மிருகம் இருந்ததைப் பார்த்து அவனுக்கு ஒரே ஸந்தோஷமாயிற்று. 'பாழும் மிருகமே! நீ அகப்படுவதற்கு இத்தனை பாடாபடுத்தினாய்?" என்று சொல்லி, தூக்காகப் போட்ட கொடியை அவிழ்த்து அதனால் நரஸிம்ஹத்தைக் கட்டினான். ஸ்வாமியும் அவனுக்குக் கட்டுப்பட்டு நின்றார்.

கரகரவென்று நரஸிம்மத்தை இழுத்துக் கொண்டு அவன் ப்ராமணரிடம் வந்தான். "ஓய், பாரும்! இதுதானே நீர் சொன்ன மிருகம்?" என்று கேட்டான்.

இவன் காட்டினானே தவிர, அவரால் பார்க்கமுடியவில்லை! அதாவது நரஸிம்ஹ ஸ்வாமி அவருக்குக் காட்சி கொடுக்கவில்லை!

அவனானால், "இந்தா புடிச்சிக்கோ. உனக்காகத்தான் கொண்டு வந்தேன். ஓட்டிக் கொண்டு சுகமாக ஊருக்குப் போ" என்றான்.

அவருக்கு துக்கம் துக்கமாக வந்தது. "ஹீனனான வேடனுக்குத் தெரிகிறாய், எனக்குத் தெரிய மாட்டேன் என்கிறாயே!" என்று ஸ்வாமியிடம் நொந்து கொண்டார்.

அப்போது அசரீரி வாக்கு உண்டாயிற்று. "கோடி வருஷம் ஸ்வரூப த்யானம் பண்ணினாலே ஏற்படக்கூடிய சித்த ஐகாக்ரியம் (ஒரு முனைப்பாடு) இவனுக்கு ஒரே நாளில் உண்டாயிற்று. பசி, நித்ரை இல்லாமல், எங்கே சுற்றினாலும் ஒரே த்யானமாக, இப்படி ப்ராணனைப் பந்தயம் வைத்து ஸாதனை பண்ணினவராக எந்த ரிஷியும் இல்லை. இந்த மஹா பக்தனின் ஸங்கம் உனக்கு ஏற்பட்டதால் தான், தர்சனம் கிடைக்காவிட்டாலும் கர்ஜனையும் இப்போது இந்த வாக்கும் கேட்கிற பாக்யமாவது கிடைத்தது."

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

---

மேஜை நிறையப் புத்தகங்களாக இருந்தன.

அசோகமித்திரன், ஜெயகாந்தன், தி.ஜா., கல்கி...

ஓ புத்தகப் பித்தனோ....

அது போக ஸ்டாண்டில் கர்நாடக இசை கேசட்டுகள்.

பாலமுரளி, பிஸ்மில்லாகான், மஹாராஜாபுரம், உன்னி கிருஷ்ணன்...

எந்த நேரத்திலும் அவன் அம்மா காப்பி தம்ளருடன் உள்ளே நுழைந்து விட முடியும் என்பதால் சண்டையைத் தவிர்த்து, சாதாரண குரலில் பேசிவிட முடிவு செய்தாள்.

"எஸ் ரேவதி...."

"சாரி... நான் என். ரேவதி..."

"குட் ஜோக். சொல்லுங்க. எனக்கு ஆபீசிற்கு டயம் ஆகுது..."

"ஆபீசா..."

"ஆமாம். நான் ஒரு சென்ட்ரல் கவர்ன் மெண்ட் எம்ப்ளாயி. வீடியோ பார்ட் டைம் ஒர்க்! ஆபீஸ்ல பெர்மிஷன் வாங்கி தெரிஞ்சவங்களுக்கு மட்டும் இப்படி வீடியோ எடுத்துக் கொடுக்கறேன். ஒரு ஆத்ம திருப்திக்கு..."

"நோக்கம் எல்லாம் உயர்வாத்தான் இருக்கு. செயல்தான் சரியில்லை..."

"புரியலை..."

"நிஜமாவே புரியலையா..."

"சரி. கம் அவுட். வெளிப்படையா பேசுங்க..."

"கல்யாணம்னா பொண்ணு, மாப்பிள்ளை, வாத்தியார், சடங்குன்னு எடுக்கறதை விட்டுட்டு பர்டிகுலரா ஒரு நபரை அதிகம் காட்டி இருக்கீங்களே... நியாயமா..."

"ஸாரி..."

"வெறுமனே ஸாரி சொன்னா ஆச்சா? வீடியோவை எத்தனை பேர் பார்ப்பாங்க. எல்லாரும் விசாரிப்பாங்க. என்னை வழில பார்த்தா கேட்பாங்க. ஒதுங்கி அமைதியாய்ப் போயிட்டிருக்கற எனக்கு எதுக்கு பாப்புலாரிட்டி. வேண்டாம்... என்னை அதிகம் காமிச்சது எதுக்குன்னு வம்பா யோசிக்க மாட்டாங்களா..."

மெள்ள மெள்ள ரேவதிக்குக் கோபம் வந்தது.

தான் சொல்ல வந்ததை முழுமையாகச் சொல்லி விட வேண்டும் என்ற ஆவேசம்.

"ரேவதி. நான் அந்தக் கோணத்தில் பார்க்க



''பையனை துபாய்க்கு அனுப்பினது தப்பா போச்சி!''

''ஏன்?''

''இந்தியாவுல மாடு மேய்க்கறதை விட துபாய்ல ஒட்டகம் மேய்க்கறது பரவாயில் லேனு சொல்றான்!''

– பென்னை சி. முருகன்



''நாட்டுல சில்லறைத் தட்டுப்பாடு ஹெவியா இருக்குங்க.''

''அதுக்காக பாக்கி பத்து ரூபாய்க்குப் பதிலா இன்னொரு ஊசி போட்டுக்கச் சொல்றது நல்லா இல்லே டாக்டர்!''

– சீர்காழி வி.ரேவதி



''அந்த தனியார் டீ.வி.காரங்க ஏமாற்றுப் பேர்வழிங்கனு எப்படி சொல்றீங்க?''

''போட்டிக்கான விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 31.12.2005ன்னு அறிவிக்கறாங்க!''

– பா.ஜெயக்குமார்

வில்லை. கல்யாண வீடியோன்னு ஆடாம அசையாம பொண்ணு மாப்பிள்ளைன்னு தொலைக்காட்சி வயலும் வாழ்வும் பேட்டி மாதிரி இருக்கணும்னு நான் நினைக்கலை. அன்னிக்கு கூட்டத்துல உங்க முகம் என்னை இம்ப்ரஸ் பண்ணிச்சு. அதை ஒரு மூணு நிமிஷம் எடுத்து அங்கங்கே பிரிச்சு காமிச் சேன். நீங்க மட்டும் இல்லே ரேவதி, ஒரு குழந்தை, ஒரு பாட்டி, ஒரு லைட் தூக்கிற கிழவனோட கொட்டாவி, சம்பந்தி அம்மா வோட திருப்திப் புன்னகை, மாப்பிள்ளை ஒரு பொண்ணுகிட்டே தனியா நின்னு பேசினது இவ்வளவும் அந்த வீடியோ கேசட்ல ரகசியா பதிவாயிருக்கு. பட்... உங்களைத் தவிர யாரும் அதை சீரியஸா எடுத்துக்கிட்டு சண்டைக்கு வரலை. இந்து ஃப்ரெண்ட் ரேவதின்னு கேசட் போடும்போது என் அம்மாவுக்கு அறிமுகப் படுத்தினேன்.'' அவனும் பதிலுக்கு நீளமாகப் பேசினான்.

அவன் அம்மா காப்பியைக் கொண்டு வந்து வைத்துவிட்டு உடனே வெளியேறி னார்கள்.

''காப்பி சாப்பிடுங்க ரேவதி...''

''வேண்டாம்...''

''ப்ளீஸ். வீடு தேடி வந்திருக்கீங்க. உங்க ஃபேமிலி பத்தி நான் தெரிஞ்சுக்கலாமா?''

''ஏன் பெண் எடுக்கப் போறீங்களா?''

''கோபமா இருக்கீங்களா ரேவதி. சாரி. வெரி சாரி. ரொம்ப ரொம்ப சாதாரணமான ஒரு நிகழ்ச்சியா நான் அதை நினைச்சேன். சிலருக்குத் தன் முகத்தைப் பார்த்தா சந்தோ ஷம் வரும். அப்படிப் பாராட்ட வந்திருக்கீங் கன்னு நினைச்சேன். இது நாணயத்தின் இரண்டாவது பக்கம். ஓ.கே. பர்கெட் இட். சாரி இனி நாம நண்பர்கள். பரவாயில்லையா? காப்பி சாப்பிடலாமா...''

இவன் விளையாட்டுப் பிள்ளையா என்று யோசித்தாள்.

''உங்கள் கல்யாணத்திலாவது உங்களை அதிகம் காட்டலாமா ரேவதி...''

''சிவா...'' சிரிப்பு வந்தது.

''ஓ.கே... தேங்க்யூ. இந்த சிரிப்புக்குத்தான் காத்திருந்தேன். காப்பி சாப்பிடுங்கள்.''

அவள் கோபம் தணிந்து சமாதானமாகி காப்பி சாப்பிடுவதை ரசித்துக் கொண்டிருந் தான்.

''உங்கள் கல்யாணத்திற்கு நான் உண்டு ரேவதி. மாப்பிள்ளையாகவோ அல்லது வீடியோகிராபராகவோ...''

வாய் வரை வந்து விட்ட வார்த்தைகளை உள்ளே தள்ளினான், மீண்டும் கோபப்பட்டு சீரியஸாகி விடுவாளோ என்கிற பயத்தில்!

# படித்ததில் பிடித்தது:

# அலட்சிய ஆட்சி அழிவையே தரும்!

அவர் அமைச்சர்; மகா நேர்மையாளவர்; மாபெரும் அறிஞர்; எளிமையாக, வளையாமல் வாழ்ந்து, மனத்தில் பட்டதைச் சட்டெனத் தெரிவிக்கும், அறிவுறுத்தும் துணிச்சல்காரர். ச(ம்)ம(ன்) காலத்தில் எவர் என்று யாரும் அவசரமாகப் புருவம் உயர்த்த வேண்டாம்.

அவர்தாம் விதுரர். சுமார் ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பு வாழ்ந்தவர். ஆயினும் விதுரநீதி இ(எ)ன்றைக்கும் செல்லுபடியாகும்.

தூசு தட்டி எலிப் புழுக்கைகள் நடுவே கண்டுபிடிப்பு. சம்ஸ்கிருதம் என்பதால் விட்டு வைத்த தமிழ்நாட்டுக் கரையான்கள் என எளிய எள்ளலுடன் முன்னுரைத்து விட்டு, விதுரர் வரலாற்றை ஸ்டாம்ப் சைஸில் காண்பித்துவிட்டு, சரேலென்று விதுர நீதிக்கு வந்து விடுகிறார் டாக்டர் என். ஸ்ரீதரன்.

விதுர நீதி வாழ்வியல் நூலாகும். தூது ரிசல்ட்டை தர்பாரில் அறிவிப்பதாகச் சஸ்பென்ஸ் வைத்துவிட்டுச் சென்றுவிடுகிறான் சஞ்சயன். திருதராஷ்டிரர் உறங்க முடியாமல் கவலையுடன் அல்லாடும்போது, விதுரர் சொல்லும் உபதேச வடிவக் கருத்துக்களே விதுரநீதி. மொத்தம் 605 சுலோகங்கள்.

அரசியல் முதல் அன்றாட வாழ்வியல் பிரச்னை வரை, சகலமும் அலசி வரையறுக்கிறார் விதுரர். மனிதர்களை நுண்மையாக வகைப்படுத்துகிறார். குணங்கள், பாவ - புண்ணியங்களை வரிசைப்படுத்தி, உறவு முறைகளை எடுத்துச் சொல்கிறார். புலனடக்கம், சொல் வன்மை, நட்பு, வெற்றிக்கு வழி, விருந்தோம்பல் என விதுரர் தொடாத விஷயமே இல்லை. கடமைகள், பொறுப்புக்களை வலியுறுத்துகிறார். செய்யத் தக்க அறிவுறுத்தல், தகாத எச்சரிக்கைப் பட்டியல்கள் பரவலாக. (சற்றே முன்பின்னாகவும்). இருப்பினும், ஒரு சிலதைக் கடைப்பிடித்தாலும் உயரிய வாழ்க்கை உத்தரவாதம்.

விதுர நீதியின் ஊடே அவ்வப்போது அடைப்புக் குறிகளுக்குள் ஸ்ரீதரன் வருகிறார்; கீதை, குறள், இன்ன பிறவுடன் செய்யும் ஒப்பீடுகளும், சிறு விளக்கங்களும், ஆராய்ச்சி செய்திகளும் நூலுக்குக் கூடுதல் சுவையும் தெளிவும் சேர்க்கின்றன.

ரஸ்கின் வகைப்படுத்தியது போல, விதுர நீதி Books for ever வகையைச் சேர்ந்தது. இன்றும் பலிதமாவது கண்கூடு. நூலின் பக்கம் 61-ல் விதுரர் விடுக்கும் எச்சரிக்கையில் ஒன்று வருமாறு:

"ஆட்சியைப் பிடித்து விட்டோம் என்று ஓர் அரசர் அதன்பின் அலட்சியமாக ஆட்சி செய்வது சரியல்ல; ஆட்சி தன் வசம்தான் உள்ளது என்று திமிராக இருப்பது அந்த ஆட்சி அழிந்து போகச் செய்துவிடும்."




இதற்கான உதாரணம் நாம் அனைவரும் அறிந்தது.

— பத்மா ரவிசங்கர்

(விதுர நீதி / தமிழில்: டாக்டர் என். ஸ்ரீதரன், கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, சென்னை - 600 017. விலை ரூ.30/-)

# பிரபஞ்சன்

**வா**னம் உடைந்து, பொடியாகித் தன் தலையில் விழுந்தாற்போல் உணர்ந்தாள், ஜானு மாமி. வள்ளி காதல் அவஸ்தையில் சிக்கிக் கொள்வதாவது? அதுவும் ஆர்த்தநாரியின் மனைவி? காலனியில், ஈரம் கசியும் மனமும், யாருக்காயினும் உபகாரம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும் என்று துருதுருக்கிற மனுஷிக்கு இப்படியும் ஒரு வில்லங்கமா?

"என்னடி பெண்ணே, ஊருக்கெல்லாம் பலன் சொல்கிற பல்லி, கழனிப் பானையில் விழுந்தாற்போல நீயே இப்படி?" என்றாள் ஜானு மாமி விசனமுடன். அவர்கள், மொட்டை மாடியில் அமர்ந்திருந்தார்கள். ஒரு பிரம்பு நாற்காலியில், தலையைக் கையில் தாங்கிக் கொண்டு, தரையைப் பார்த்தபடி இருந்தாள் பிந்து. நிலா, வீட்டை விட்டு வெளியே இன்னும் வந்திருக்கவில்லை. குழந்தைகள் வாசலில் விளையாடுவது போல, நட்சத்திரங்கள். சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள், வள்ளி. அவர்களைச் சுற்றிலும், தரையை மையால் மெழுகியது போல இருட்டு வியாபித்து இருந்தது.

வள்ளி, மல்லிகை மொட்டவிழும் சத்தமும் கேட்கும்படியான அந்த நன்னிரவில், மெல்லச் சொல்லத் தொடங்கினாள்.

"எப்படி இது தொடங்கிச்சுன்னே எனக்குத் தெரியலை. பிந்துக்கா. ஏற்பட்டுடுச்சு. தெற்குப் பார்த்த வீடுன்னா, காற்று நல்லா வரும்னு சொல்லுவாங்க. மதியத்துல, வடக்குப் பார்த்த ஜன்னல் வழியா காற்று வர்றதுல்லியா? அது மாதிரிதான் எனக்கும் நேர்ந்துடுச்சு. நான், கதவைச் சாத்தித்தான் வச்சிருந்தேன். திருடன் வரக் கூடாதுன்னுதான். காற்று உருவிலே கள்ளன் வந்தா என்ன பண்றது. சண்முகம். இத்தனைக்கும், அந்த இடத்துக்கு என்னை அழைச்சுண்டு போயிடலை. கழுத்துக்குக் கீழே மறந்தும் கூட அவன் பார்த்தது இல்லை. காமம் பூசிக்கிட்டு, ஒளிஞ்சு நிற்கிற வார்த்தைகளை அவன் பேசினது இல்லை. இருட்டுப் பிரதேசங்கள் இருக்கிற பிரதேசங்களுக்கு அவன் வார்த்தைகளோ, பார்வைகளோ தொனியாகக் கூட ஒலிக்கவில்லை, பிந்தாக்கா. நானும் அவனும்,



# பூக்கள் நாளையும் மலரும் 17

மும்பைக்குப் போயிருந்தோமே, உனக்குத் தெரியும் தானே? பால்தாக்கரேயையும் அமிதாப்பையும் விளம்பரம் விஷயமாகப் பார்க்கப் போயிருந்தோமே. எத்தனை சந்தர்ப்பங்கள். மூன்று இரவுகள், மூன்று பகல்கள். ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி அவனுடன் இருந்தேன். உனக்குத் தெரியுமே, பிருந்தாக்கா. அவன் படுக்கைக்குப் போகு முன்பு. விஸ்கி சாப்பிடுவான்னு. என்னோட ராத்திரிக்குப் பத்து மணிக்கும் மேல அவன் விஸ்கி சாப்பிட்டான். முதல் நாள், நீ உன் அறைக்குப் போன்னு என்னைப் பிடிச்சுத் தள்ளாத குறையா, கெஞ்சினான். அவன் மேல இருந்த அசைக்க முடியாத நம்பிக்கையிலே, நான் அவன் டேபிளுக்கு முன்னால இருந்தேன். என் மனசுக்குள்ளே, பரீட்சை வைக்கிறோமோன்னு நினைச்சேன். அப்படித்தான் தோணிச்சு. அந்தப் பரீட்சையிலே, நான் தோற்று, அவன் ஜெயிக்கணும்னு வேண்டிக்கிட்டேன். மாமி... அவன் குடிச்ச பிறகு, எப்படி மாறிடறான்னு, நான் எதிர்பார்த்துக்கிட்டு இருந்தேன். குடிக்கிற முன்னால அவன் இருந்த தெளிவைக் காட்டிலும், குடிச்ச பிறகு, ரொம்பத் தெளிவாவே இருந்தான்...

"ரெண்டு மணி நேரம் அவன் முன்னாலே பொறுமையா உக்காந்திருக்கோமேன்னு, நான் தான், அவன் காதல் தோல்வியைப் பற்றி ஆரம்பிச்சேன். கண்ணை மூடிக்கிட்டு, ரொம்ப நாழி இருந்தான். தவம். ஏன் சொல்லக் கூடாது? மனசுக்குள்ளே, நெருப்பு மலை உடைச்சுக்கிடுச்சுன்னு தெரியுது. திடுமென, அவன் கண்கள்ளேந்து கண்ணீர் வழிய ஆரம்பிச்சுடுச்சு... சண்முகம், என்கிட்டே என்ன சொன்னான், தெரியுமா...?

"வள்ளி அவளை நான் சந்திச்சது, ஒரு பார்ட்டியிலதான். மன்மோகன்சிங், சென்னைக்கு வந்தாரில்லையா? அப்போ, பிசினஸ் கிளப்பிலே அவருக்கு 'பார்ட்டி' கொடுத்தோம். அதிலே, அவளை முதன் முதலா பார்த்தேன். பட்டாம்பூச்சி மாதிரி, ஹால் முழுக்க அவளே இருந்தா. பார்க்கும் இடமெல்லாம் அவள் இன்றி வேறில்லை. முன் எப்போதும், குடித்து அறியாத ஒரு புது பானத்தைக் குடித்தது மாதிரி இருந்தது எனக்கு. உறை நெய், உருக்கு நெய்யாக, எனக்குள் நான் உருகத் தொடங்கி இருந்தேன். முதன் முதலில், சவரம் செய்து கொண்டபோது, எனக்கு ஏற்பட்ட மனக் கிளர்ச்சி அப்போதும் ஏற்பட்டது. எனக்குள்ளிருந்து வெளிப்படும் உணர்வு, காந்தம் போல அவளையும் பற்றிக் கொண்டிருக்கும் போலும். அவள் என்னிடம் வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டாள். எனக்கு மரியாதை இருக்கும் ஒரு பெரிய கம்பெனியின் பி.ஆர்.ஓ.வாக அவள் இருந்தாள். என் வளர்ச்சியை அவதானித்துக் கொண்டு இருப்பதாக அவள் ஆதாரத்துடன் சொன்னாள். அப்போதெல்லாம் நாங்கள், சோப் கம்பெனிகளுக்கு விளம்பரம் செய்து கொண்டிருந்தோம். 'என் மேனி அழகைப் பராமரிப்பது இந்த... சோப்தான்' என்று நடிகை நந்தா சொல்வாரே, அதெல்லாம் எங்கள் கைவண்ணம்தான். அவள் கேட்டாள். 'மிஸ்டர் சண்முகம்... அந்த நந்தா சினிமாவுக்கு வந்தே மூணு மாசம் கூட ஆகலை. உங்க சோப் அவள் மேனி எழிலை எப்போ இருந்து காப்பாற்ற முடிந்ததாம்' என்றாள்.



எனக்கும், எங்கள் விளம்பரத்தில் இருந்த அபத்தம் புரிந்தது. நாங்கள் அடிக்கடி சந்தித்தோம். சந்திக்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டோம் என்பதுதான் உண்மை. அனேகமாக மாலை வேளைகளில், நாங்கள் சந்திப்போம். அவன் குடும்பத்தாரிடம் அவன் என்னை அறிமுகப்படுத்தினான். ரிடையர்டு குமாஸ்தா அப்பா, டயபடீஸ் அம்மா, கல்லூரியில் படித்து, மாப்பிள்ளைக் கனவு கண்டுகொண்டிருக்கும், தங்கைகள். மழையில் ஒழுகும் ஓட்டு வீடு. இந்தப் புகை நடுவினில், அந்த நெருப்பு கனன்று கொண்டிருந்தது. வைரங்கள் தகரத்தில் புதைக்கப்படலாமோ? நான், அழகான, இரண்டு படுக்கை அறை கொண்ட 'பிளாட்டை' அவனுக்கென்று வாங்கிக் கொடுத்தேன். ரொம்பவும் அரும்பாடுபட்டு இரண்டு பெண்களுக்கும் வரன் தேடிக் கல்யாணமும் பண்ணி வைத்தோம்...'

"மாமி... நான் பிந்துக்கா சொல்லி எனக்குத் தெரிஞ்ச விஷயத்தைக் கேட்டேன்.

"இவ்வளவு பெரிய செலவை இழுத்து விட்டுட்டு, காரியம் முடிஞ்ச பின்னால, அவ, வேறு யாரையோ...'

"அவன், என்னை வெட்டிக் கொண்டு சொன்னான்.

"இல்லை. அப்படி அதைக் கொச்சையாகப் புரிந்து கொள்ளக் கூடாது, வள்ளி. ஒரு பெண்ணுக்கு ஒரு ஆணின் மேல் விருப்பம் ஏற்பட எத்தனை காரணம் இருக்கோ, அதே அளவுக்கு விருப்பம் மாறவும் நியாயங்கள் இருக்கும். அவள் என்னை நேசிக்க வேண்டும் என்று கட்டாயம் பண்ண முடியுமா, சொல்லுங்கள். காதலை வகுப்பறை பிரம்போ, சட்டமோ காப்பாற்ற முடியுமா, என்ன? நான் அவள் மேல் வைத்திருந்தது மெய்யான விசுவாசம். எனக்கு அதுதான் முக்கியம். என்னைப் பொறுத்த வரைக்கும் நான் அவளை வெறுக்க முடியாது.'

"அவளை நெருப்புன்னு சொன்னீங்களேன்னு நான் கேட்டேன். நெருப்புத்தான், இப்பவும். நான் சுட்டுக்கிட்டேன். என்னை அது சுட்டுதுங்கற காரணத்தாலேயே, நெருப்பு தன் சுடுகிற இயல்பை இழந்துடணும்னு நான் எதிர்பார்க்க முடியுமா, வள்ளி?' அப்படீன்னு சொன்னார்.

"என்ன மனுஷன் இவன்னு எனக்கு மாய்ஞ்சு போச்சு, அக்கா. கொடுக்கிறவர், விரல் நகம் கிறீடுச்சேன்னு யாசகம் கேட்கிறவங்களும் கோவிச்சுக்கிற இந்த உலகத்துல, இப்படி ஒரு மனுஷனான்னு; எனக்கு அழுகையே வந்துடுச்சு... ஆங்... அந்த க்ஷணம், அந்த சுபவேளையா, அசுப வேளையா, எனக்கு அவன் மேல லயிப்பு விழுந்துடுச்சு... நான் என்ன பண்ணட்டும்..."

வள்ளி, தன் முழங்காலில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவள் முதுகு குலுங்கியது. பொங்கி வடியட்டும் என்று காத்திருந்தார்கள் அவர்கள். வள்ளி தொடர்ந்தாள்.

"இலைக்கு முன்னால உட்கார்ற நேரத்துல, வாசல்லேந்து ஒரு பிச்சைக்காரக் குழந்தை அம்மா பசிக்கிறதுன்னு குரல் கொடுத்தா, சாப்பாடு இறங்குமா, மாமி. அவனைப் பார்க்கிறபோதெல்லாம், எனக்கு ஒரு குழந்தையைப் பார்க்கிற மாதிரி இருக்கு. திருவிழாவிலே தொலைஞ்சு போன குழந்தை. மதியம், லஞ்ச்சுக்கு உட்கார்ற போது, அவன் அறையை எட்டிப் பார்ப்பேன். ஜன்னல் வழியா, தொலைதூரத்துக்கு அப்பாலே, அடிவானத்துக்கு அப்பாலே, பனை, தென்னைகளைத் தாண்டி அவன் பார்த்துக்கிட்டு இருப்பான். எதையும் பார்க்காத பார்வை அது.

எதைப் பார்க்கிறீங்க சண்முகம்னா, என்னைத்தான்னு சொல்லுவான். நீங்க என்ன, கடலுக்கு அப்பாலேயா இருக்கீங்கன்னு கேட்டா, ஆமாம்பான். வேலைக்காரச் சிறுமிகளைச் சில ராட்சசிகள் சூடு போடுமே, அந்த மரண வேதனை அவன் முகத்துல அப்போ தெரியுதுக்கா. நான் என்ன பண்ணுவேன்..."

வள்ளியின் கண்களில் இருந்து கரகர வென்று கண்ணீர் வழிந்தது. மார்புச் சேலையை நனைத்தது.

இரவு, வீட்டை விட்டு ஓடிப் போகும் பெண்ணைப் போல, சத்தம் இன்றி நகர்ந்து கொண்டிருந்தது. பேச்சைப் பெட்டியில் போட்டுப் பூட்டின மாதிரி, எல்லோரும் அமைதியாக, பேச மறந்தவர்களாக இருந்தார்கள். மௌனத்தை முதலில் உடைத்தவள், பிந்துக்காதான்.

"எனக்கு இது ஆச்சர்யமாக இல்லை."

"எது?" என்று கேட்டாள் மாமி.

"சண்முகத்தின் பக்கம், பெண்கள் ஈர்க்கப்படுவது" என்றவள் தொடர்ந்தாள்.

"இது விசித்திரம்தான். பெண்கள் மனசுக்குள் ஆயிரம் தடைகள். ஆயிரம் மீறல்கள். ஒரு கதவு திறக்கும்போது மற்றது சாத்திக் கொள்கிறது. அவர்கள் காதல் வசப்பட விரும்புகிறார்கள். ஆனால், யாராவது காதல் என்றால் சுருங்கி விடுகிறார்கள். பேசுகிறவரை விடவும் பேசாமல் பேசுகிறவரை விரும்புகிறார்கள். இது தப்பு என்று முதலில் தோன்றுவது அவர்களுக்குத்தான். தப்பை, முதலில் துணிந்து செய்கிறவர்களும் அவர்களாகவே இருக்கிறார்கள்..."

"என்னடி பிந்து, என்ன என்னமோ பேசிட்டு இருக்கே... எனக்கு என்னமோ பயமா இருக்குடி... என்னத்தையாவது செய்யக்கூடாததைச் செஞ்சி வைக்கப் போறா, இந்தப் பொண்ணு..."

பிந்து சொன்னாள், சிரித்துக் கொண்டு.

"என்ன மாமி... எதுக்குப் பயப்படறீங்க...

என்ன நடந்து போச்சு. சண்முகத்து மேல, இவ கவனம் போயிருக்கு. அவ்வளவுதானே?"

"அவ்வளவுதானா?"

"அவ்வளவுதான். வள்ளி. உன் ஆசையை சண்முகத்துகிட்டே சொன்னியோ?"

"இல்லை."

"ரொம்ப நல்லது. சொல்லாதே. சொல்லணும்னு தோணினாலும், தள்ளிப் போடு. உடம்பு, மனசு இதுகள் சதா எதையாவது கேட்டுக்கிட்டே இருக்கும், குழந்தைகள், தெருவில போகிற எல்லா பலூனையும் கேட்கிற மாதிரி. சித்தே நாழி போனா, பலூனைத் தூக்கிப் போட்டுட்டு, பொம்மையை எடுத்துக்கும். கட்டுப்படுத்திக்கோ... அதை மறக்கப் பாரு.... முடியவே முடியாதுங்கற கட்டம் வரும். வந்தா, அப்புறம், இதை யோசிக்கலாம். கவலையை விடு. பெரிசா ஒன்றும் நடந்து போயிடலை... என்னத்துக்கு இதைப் பெரிசு பண்ணறே?"

"அக்கா... நான், ஒருத்தர் மனைவி. இதெல்லாம் தப்பில்லையா?"

"தப்பு இல்லைன்னு சொல்ல முடியாது. தப்புதான்."

"பெரிசு பண்ணாதேன்னு சொல்றீங்களே?"

"வள்ளி. நீ வாயை விட்டு, மனசை விட்டுச் சொல்லிட்டே. பல பேர், சொல்றதில்லை. ஏன், நான் சொல்லலையே! நாம், ஆண்கள் மத்தியிலும், ஆண்கள் பெண்கள் நடுவிலேயும் வாழறோம். இந்த மாதிரி ஈர்ப்பு சகஜம். நிறைவான குடும்ப வாழ்க்கையிலே இருக்கிற அதிர்ஷ்டசாலிகளுக்கு இந்தப் பிரச்னை தோணாது. எலியும் பூனையுமா வாழற ஆண் பெண்களுக்கு இது நேர்ந்துடும். மனசு, காட்டுக் கொடி மாதிரி. ரொம்ப துர்பலம்டி வள்ளி. காற்றுல கையை விரிச்சுண்டு, எந்த மரத்தைச் சுத்திக்கலாம்னு அலையற பாவம்டி அது. முடிஞ்ச வரைக்கும், கட்டினவனுக்கு விசுவாசமா இருக்க முயற்சி பண்றதுதான் அழகு. முடியவே முடியலைன்னா இதுக்கு முற்றுப்புள்ளி வச்சிட்டு அடுத்ததைத் தொடங்கு. ஏக காலத்துல, இதுக்குத் தெரியாமே அதையும், அதுக்குத் தெரியாமே இதையும் போஷிக்கக் கூடாது. அது அசிங்கம். மனுஷர் கேவலப்பட்டுப் போறது, ரகசியங்களை மூட்டைக் கட்டிச் சுமக்கும் போதுதான். பிரச்னை, என்னன்னா, நீ அன்புக்கு ஏங்குகிற டைப் இல்லை. மாறா, அன்பு செய்ய ஏங்குகிற டைப். எதையாவது, யாருக்காவது கொடுக்கணும்னு அலையற டைப் நீ."

"பாவம்" என்றாள் மாமி, மனம் சுரம் சுரக்க.

"யார்தான் பாவம் இல்லை, மாமி? நீங்க பாவம் இல்லையா? நீங்க, பத்து வருஷம் கூட உங்க புருஷன் கூட வாழலையே. நான் வாழலையே. நாமெல்லாம் பாவம்தானே?"



பல ஆண்டுகட்கு முன் பிரிட்டனில் பிரதம மந்திரியாயிருந்த ஸர் ஹென்ரி காம்பல் பானர்மன் என்பவர்க்கு ஸ்காட்லாந்தில் வீடும் தோப்புத் துரவுகளுமிருந்தன.

அவர் அங்கு போனால் தோட்டங்களை சுற்றிப் பார்ப்பார். பார்த்து வரும் போது தமக்குப் பிரியமான மரங்களிடம் வந்ததும் தம்முடைய தலையிலுள்ள தொப்பியை எடுத்து வணக்கம் செய்வார்!

– 'அறிஞர்களின் வாழ்வில் நடந்த அதிசயங்கள்' நூலிலிருந்து தகவல் : ஆர். பார்த்திபன்

"ம்" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டாள், மாமி.

"வள்ளி..." என்றழைத்த பிந்து, ஒரு யோசனையாக இதைச் சொன்னாள்.

"கொஞ்ச நாள், அலுவலகத்துக்கு 'லீவ்' போடு. சண்முகத்தைப் பார்ப்பதை, பேசுவதைக் கொஞ்ச காலம் தள்ளிப் போடு. இந்த விலகல், சில தெளிவுகளைக் கொடுக்கக்கூடும். அப்புறம், அர்த்தநாரி பற்றி, அவர் நல்ல அம்சங்களை மட்டும் யோசனை செய்து பார். கணவர் பற்றி வெறுப்பு அம்சங்களைச் சிந்திக்கச் சிந்திக்க, கூடுதல் வெறுப்புதான் மிஞ்சும். அது நல்லது இல்லை."

வள்ளி, தலையை அசைத்துக் கொண்டு சொன்னாள்.

"என் கணவரைப் பற்றி யோசிக்காத நாள் இல்லை. அவரிடம் நல்ல அம்சங்களே இல்லை அக்கா."

"அப்படிச் சொல்லாதே, வள்ளி. எந்த நல்ல அம்சமும் இல்லாமல், ஒரு கூரைக்குக் கீழே இத்தனை வருஷம் வாழ்ந்திருக்க முடியுமா? இருக்கும். அவரைப் பற்றி எதிர்மறையான கருத்துக்களை வளர்த்துக் கொள்வது, இந்தச் சூழ்நிலையில் உனக்கு நிம்மதி தருகிறது. உன் குற்றமனப்பான்மை, அப்படி நினைப்பது, கொஞ்சம் நகர்த்தி வைக்கும். இந்த நேரத்தில் தான் நீ நிறைய யோசிக்க வேணும். நீ சின்னப் பெண் இல்லை. நீ ஜனனி இல்லை. ஊசி



**நீதிபதி : நீங்க என்ன தப்புச் செய்தீங்க, முன்ஜாமீன் கேக்கறீங்க?**

**அரசியல்வாதி : ஐந்து வருஷம் அமைச்சரா இருந்த நான் நிச்சயம் ஏதாவது தப்புச் செய்திருப்பேன் சார்....!"**

**– சீர்காழி வி. ரேவதி**

வழியாகப் போகிற நூல் மாதிரி, நாம் போய் விட முடியாது. தேடு. உன் வாழ்க்கையின் சந்தோஷங்களை, ஒரு காகிதத்தில் எழுதிப் பார். அதில், அர்த்தநாரிக்கு என்ன பங்கு இருக்கிறது, என்று பட்டியல் போடு. முதலில் இதைச் செய். சண்முகத்தைப் பற்றி அப்புறம் யோசிக்கலாம்..."

"சரிக்கா..." என்றாள் வள்ளி.

**மி**குந்த மனக்கிலேசத்தோடு வீடு திரும்பினாள், வள்ளி. நேரம், நள்ளிரவைத் தாண்டி இருந்தது. தன்னிடம் இருக்கும் மாற்றுச் சாவியால், கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். படுக்கையில் அர்த்தநாரி படுத்திருப்பது விடிவிளக்கின் வெளிச்சத்தில் தெரிந்தது. விளக்கைப் போட்டாள். வெளிச்சம், அறைக்குள் பரவியது. வெளிச்சத்தில் கண் கூச, அர்த்தநாரியின் உறக்கம் கலைந்தது.

"எங்கே போனே வள்ளி, இத்தனை நேரம்?"

"பிந்து அக்கா வீட்டுல பேசிக்கிட்டு இருந்துட்டேன்."

பிந்துவை அவனுக்குப் பிடிக்காது. சண்டை போடுவான் என்று எதிர்பார்த்தாள். இல்லை. மாறாக, அவன், "ஏதாவது விசேஷமா?" என்றான்.

"ஆமாம். ஆபீஸ் விஷயமா சில சந்தேகம்."

"பிந்து, ஆபீஸ் வேலையில புலி. அவளைப் பயன்படுத்திக்கோ..."

அவள் சுவர்ப் பக்கம் திரும்பிக் கொண்டு, புடைவையைப் பல்லால் கடித்துக் கொண்டு, ஜாக்கெட்டைக் கழற்றிவிட்டு, 'நைட்டி'யை அணிந்து கொண்டாள். பாத்ரூம் சென்று, வழக்கப்படி பல் துலக்கி, முகம் கழுவித் திரும்பினாள். முகம் கழுவுதல் என்பது வள்ளிக்குச் சற்றேறக்குறைய பாதி உடம்பைக் கழுவிக் கொள்ளுதல் ஆகும்.

"தண்ணி ரொம்பவும் சில்லுன்னு இருக்கே... சளி பிடிச்சுக்கப் போகுது?" என்றான் அர்த்தநாரி.

"பழக்கமாயிடுச்சு."

"என்றாலும், இந்த அர்த்தராத்திரியிலா? ஜலதோஷம் வரப் போகுது."

அவள், அவனுக்கு மட்டும் கேட்கிறவிதமாக கேசட்டைப் போட்டாள். தனித்தனியாகப் போடப்பட்ட கட்டில்கள். ஒன்றுக்கொன்று இரண்டு மூன்று அடி தூரம் இருந்தது.

மிக மெலிதாக, சந்தானத்தின் குரல், சன்னமாக, கம்பியைச் சிறிக பண்ணியது போல எழத் தொடங்கியது. கருதிக்கு உறை போட்டது போல, கருதியைப் பிசகாத சன்னச் சாரீரம், இழையத் தொடங்கியது. படுக்கையில் சாய்ந்து கொண்டு, கண்ணை மூடிக் கொண்டாள். 'மருகேலரா' முடிந்து, 'அலைபாயுதே' தொடங்கியது.

அவளும் அலைபாயத் தொடங்கினாள். கானடாவுக்கே கெஞ்சலும் உண்டு. பொங்கலில் மிதக்கிற முந்திரி மாதிரி, அதில் சற்றுத் தூக்கலான அதிகாரமும் இருக்கிறது போலும். 'உன் ஆனந்த மோகன வேணுகானத்தில் நான் சர்க்கப்பட்டேனே' என்கிற ஆதங்கமும், 'என்னைக் கைவிடுதல் முறையா' என்கிற உரப்பும் பின்னிக் கொள்கிற, இரட்டை நாக்கு அது. பாம்பின் இரட்டை நாக்கா? இல்லை. இரட்டை நாயனம் மாதிரி, ஒட்டிக் கொண்டு பிறக்கிற ரெட்டைக் குழந்தை.

கிருஷ்ணன், குழலை இசைத்துக் கொண்டு நிற்கிறான். வானமும், பூமியும் கரங்களால், திணிக்கப்பட்டு, உறைதிப் பருத்திருக்கின்றன. பசுக்கள், செவியே கண்ணாக, அவனையே பார்த்துக் கொண்டு நிற்கின்றன. அவை தம் பிரக்ஞை இன்றிப் பாலைச் சொரிகின்றன. பசுக்கள் மாத்திரம் இல்லை. கோபிகளும் கூட. அட, யார் அது! வள்ளியும் கூட அந்தக் கூட்டத்தில் நிற்கிறாள்.

அவனைச் சுற்றிப் பால்மணம், தயிர் கடைந்த கோபியரின் மணம் நிலவுகிறது. அவளை, கிருஷ்ணனின் குழல், அருவியில் நீராட்டிக் கொண்டிருந்தது. வள்ளி, தெப்பலாக நனைந்து கொண்டிருந்தாள். அவள் கோபியரைத் தள்ளிக் கொண்டு, கிருஷ்ணன் அருகாக வருகிறாள். கிட்டே நெருங்கி விட்டாள். இன்னும் ஒரே கணம்தான். ஒரு முரட்டுக் கை, அவளைத் தடுத்து நிறுத்தியது.

அவள் கண் விழித்தாள்.

"என்னம்மா, என்ன ஆச்சு... கிருஷ்ணன், சண்முகன்னு சொல்லிக்கிட்டே இருந்தே... ஏதாவது கனவா?" என்றான் அர்த்தநாரி.

கனவா, நனவா?

என்ன சொல்வது?

(தொடரும்)

# வட்டமேஜை

✉ "தட்டிக் கேட்கும் த.மா.கா!" தலையங்கத்தின் மூலம் தாங்கள் த.மா.கா.வினரை தட்டிக் கொடுத்துள்ள விதம் பாராட்டுக்குரியது. தொடரட்டும் த.மா.கா.வினரின் துணிவான தொண்டு.
வள்ளூர், சி. கஸ்ரத்.

✉ மதக் கலவரங்கள் பெரிதாகி விடுமோ என்று கவலைப்படுகிற இவ்வேளையில், நோன்பு முடிக்கையில் முஸ்லீம் சகோதரர்களுக்கு, உணவு பரிமாறும் இந்து சகோதரர்களின் மனித நேயத்திற்கும், மத நல்லிணக்க உணர்விற்கும் தலை வணங்குகின்றேன்.
திருச்சி - 4, எச். கௌஸ் பெய்க்.

## ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்

✉ "முதல்வருக்கு ஏன் இந்த வேலை" பகுதி பார்த்தேன். மூவர் சொல்கிற கருத்து இருக்கட்டும். முதல்வரின் கருத்தே சர்ச்சைக்குரியதாகப் படுகிறது. பார்த்திபனுக்கு பாராட்டு தருபவர், பாரதிராஜாவைக் "கண்டிக்கத் தக்கவராக"க் கருத்துக் கூறியிருப்பது ஒரு நெருடல். பாரதி எதற்காகக் கண்டிக்கப்பட வேண்டும்? அதற்குத் தகுதிதான் யாருக்கு இருக்கிறது?
மதுரை - 1, சா. பாலசுப்ரமணியம்.

## முதல்வரின் கருத்தே சர்ச்சைக்குரியது?!

✉ மூன்று கார்ட்டூன் படங்களும், படங்களாக மட்டுமல்லாது, நாட்டின் நிலைமையை தெளிவாக மக்களுக்குத் தெரிவிக்கக்கூடிய பாடங்களாகவும் அமைந்திருந்ததைப் பாராட்டாமல் இருக்க முடியாது!
உஞ்சவேலாம்பட்டி, டி. பசுபதி.

✉ தமிழன்பனின் கவிதை நகைச்சுவையாகவும், அதே சமயத்தில் அர்த்தங்கள் பல கொண்டதாகவும் அமைந்திருக்கிறது.
விழுப்புரம், வை. வெங்கடேசன்.

✉ நூல் அறிமுகம் பகுதியில் 'பார்வைக்கு வந்தவை' கீழ் எனது நூல் 'மண்ணில் இருக்குது மோட்சம்' அறிமுகப்படுத்தப் பட்டிருக்கிறது. இந்நூல் கிறிஸ்தவத் திருமறை(பைபிள்)யைச் சார்ந்து படைக்கப்பட்ட குறுங்காவியம். 'திருக்குர் - ஆனைக் கவிதை நடையில்' என்த் தவறுதலாகத் தெரிவிக்கப் பட்டுள்ளது.
அரக்கோணம் - 1, டி. சுவாமிநாதன்.

✉ தங்களது எல்லா தவறுகளுக்கும், மக்களின் ரசனை மீது குற்றம் சுமத்தி தப்பித்துக் கொள்ளும் சினிமாக்காரர்கள் மத்தியில், தவறு தனது துறை மீதுதான் என்பதை ஒப்புக் கொண்ட எடிட்டர் லெனினின் பேட்டி வித்தியாசமாக இருந்தது. வாய்ப்புகள் இல்லையெனில் டிரைவராகக்கூட போவேன் எனச் சொல்லியிருந்த இடத்தில் யதார்த்தமான கலைஞனைப் பார்க்க முடிந்தது.
கள்ளிப்பாடி, கே. ஸ்டாலின்.

✉ லெனின் பேட்டி படித்தேன். திரைப்படக் கல்லூரி முதல்வர் என்ற முறையில் சில வார்த்தைகள்: மாண்புமிகு முதல்வர் ஒரு நடை வந்தால் மகிழ்ச்சியோடு வரவேற்கக் காத்திருக்கிறோம். ஆனால் அவர் வராமலேயே எங்கள் தேவைகளை இயக்குனர் அமிர்தம் மூலம் அறிந்து நிறைவேற்றி வருகிறார். கடந்த எட்டு மாதங்களில் வந்துள்ள புதிய திரைப்படச் சாதனங்களின் பட்டியல் மிக நீண்டது. லெனின் கூறியுள்ள படத்தொகுப்புக் கருவிகள் வாங்கவும் திட்டமுள்ளது. "மாணவர்களே தாங்கள் தயாரிக்கும் படங்களுக்கு செலவு செய்கிறார்கள்" என்று லெனின் கூறியிருப்பது சரியல்ல. பதினைந்து லட்சம் பெறுமானமுள்ள வசதிகள், சாதனங்கள் வழங்கப்படுகின்றன. ஆண்டுக்கு பன்னிரண்டு புராஜெக்ட் படங்கள் எடுக்கப் படுகின்றன. மாணவர்களுக்கு வேலை வாய்ப்பு பிரகாசமாக உள்ளது.
சென்னை-113. ஏ. சீனிவாசராவ்.

✉ இலங்கை, அட்டனில் 'மலையக தமிழ் இலக்கிய நற்கலை மன்றம்' பிப்ரவரி மாதம் 15, 16ம் தேதிகளில் சுவடிகள், சித்திரங்கள் அடங்கிய கண்காட்சி ஒன்றினை ஏற்பாடு செய்தது. காந்தியவாதி எஸ்.ஏ. கந்தசாமி அனுசரணையுடன் நடந்த இக்கண்காட்சியில், சிறப்பு அம்சமாக 1944ம் ஆண்டு முதல் 1971ம் ஆண்டு வரையிலான "கல்கி" இதழ்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. இலங்கை வாழ் இந்திய வம்சாவளி மக்களின் பிரஜாவுரிமை பிரச்னைகளையும் அதனால் ஏற்பட்ட தாக்கங்களையும் அவ்வப்போது உலகுக்கு எடுத்துக் காட்டும் வண்ணம் 'கல்கி' பிரசுரித்த விஷயங்கள் மிகவும் உருக்கமானவை; இந்திய வம்சாவளி மக்களின் சார்பாக நன்றி செலுத்தவே இக்கண்காட்சியில் 'கல்கி' இதழ்களை வைப்பதாக மலையகத்தின் நாவலாசிரியர் தி.இரா. கோபாலன் கூறினார்.
அட்டன், இல. நாகலிங்கம்.

# பாக்யராஜ் எங்கே காணோம்?

● கே. கணேசன், கிருஷ்ணகிரி.

*? பாகிஸ்தானின் அடுத்த பிரதமர் என்று பத்திரிகைகளால் வர்ணிக்கப்பட்ட இம்ரான் கானும் அவரது கட்சியும் படுதோல்வி அடைந்திருப்பது பற்றி..?*

! 'பெண் பாவம் பொல்லாதது' என்பது அமெரிக்கப் பெண்ணுக்கும் பொருந்தும் போல!

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

*? நம் இந்திய கிரிக்கெட் அணிக்கு என்ன வாயிற்று? இப்படி சொதப்புகின்றனரே?*

! பல சந்தர்ப்பங்களில் சொதப்பினாலும் சில சமயம் அபாரமாக ஆடியிருக்கிறார்களே! ஜிம்பாப்வேயுடன் டிரா ஆன ஆட்டமும் ஃபைனல்ஸுக்குத் தகுதி பெற்ற பந்தயமும் மெய் சிலிர்க்கச் செய்தன. பின்னதில் டெண்டுல்கர் சக்கைப் போடு. ராபின் சிங் இரண்டிலுமே தமிழகத்துக்குப் பெருமை சேரும்படி ஆடியிருக்கிறார்.

● விஜயலட்சுமி சிவசங்கரன், வேலூர்.

*? குமரி அனந்தன் தலைமையில் உள்ள காங்கிரஸ் கட்சிக்கும் மூப்பனார் தலைமையில் உள்ள த.மா.காவுக்கும் என்ன வித்தியாசம்?*

! வெற்றிடத்துக்கும் வெற்றியின் இடத்துக்கும் உள்ள வித்தியாசம்.

● கே. சங்கர், சித்திரம்பட்டி.

*? ஞானப் பழத்துக்குப் பிறகு பாக்யராஜ் காணோம்...?*

! 'வேட்டியை மடித்துக் கட்டி'க் கொண்டு சிஷ்யர் பாண்டியராஜனுக்காக ஒரு படத்துக்குக் கதை, திரைக்கதை, வசனம் எழுதிக் கொண்டிருக்கிறார்.

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? 'ஜெ'யின் சொத்து மதிப்பு மொத்தம் 351 கோடி ரூபாய் என்று அன்பழகன் கூறியிருப்பது சரியாக இருக்குமா?*

! பேராசிரியர் பொய் பேச மாட்டார்; ஆனால் பினாமிகளை அவர் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.

● எம். அழகம்மாள், மதுரை – 10.

*? இன்று மக்களை அதிகம் ஏமாற்றிக் கொண்டிருப்பது அரசியல் துறையா? திரைப்படத் துறையா?*

! திரைப்படத் துறை ஏமாற்றம் அளிக்கிறது என்றாலும் மக்கள் விரும்பினால் அதைப் புறக்கணிக்கலாம். ஆனால் அரசியல் அப்படி யல்ல – ஏமாற்றமும் அளிக்கிறது. மக்களை ஏமாற்றவும் செய்கிறது. அதிலிருந்து விடுபடவும் மக்களால் முடியாது.

● ப. மூர்த்தி, பெங்களூர் – 21.

*? தற்போதைக்கு தராகக்கு அச்சம் தருகிற சமாசாரம் எது?*

! அணுமின் நிலையங்களை அமைக்க அயல் நாட்டினர் வரலாம் என பிரதமர் கௌடா விடுத்துள்ள அழைப்பு – மிக மிக அபாயகரமான அழைப்பு அது.

● எஸ். கலா சுப்ரமணியன், முதலமடை (கேரளா).

*? தனியார் தொலைக் காட்சியில் சினிமா நிகழ்ச்சிகளைக் காட்டத் தடை விதித்தால் எப்படி இருக்கும்?*

! தடை விதிப்பது என்பது தனிமனித சுதந்தரம், கருத்துச் சுதந்தரம் ஆகியவற்றில் தலையிடுவதாகி விடும். ஆனால், வெறும் கேளிக்கை நிகழ்ச்சிகளுக்கான அவகாசத்துக்கு வரம்பு விதிப்பதோடு, அவை எந்தெந்த நேரத்தில் ஒளிபரப்பப்படலாம் என்பதையும் நிர்ணயிக்கலாம். (சில அயல்நாடுகளில் இது உண்டு) இங்கேயானால் கேபிள் டிவிகாரர்களே வீடியோ திரைப்படம் போட்டு மக்கள் மனத்தைக் கெடுக்கிறார்கள். மதியம் ஒரு மணிக்கு கிரிக்கெட் 'ஹைலைட்ஸ்' பார்க்கலாமென்று ஸ்டார் டீ.வி. சானல் தேடினால், ஆபாச அயல் நாட்டு சினிமா தோன்றி அதிர்ச்சி அளிக்கிறது.

● கி. முருகன், மாப்பிள்ளைக்குப்பம். ❑

*? தம் நாட்டில் இறைச்சிக்காக மாடு*

• பெண் பாவம்!



• சக்கை போடு



• தலைநிமிரும் தமிழகம்



• சிஷ்யருக்காக...





• முக்கியமானதை மறந்தாரே!

கள், எருமைகள், செம்மறி/வெள்ளாடுகள், பன்றிகள், கோழிகள் என பல உயிரினங்கள் வெட்டப்படுகின்றன. ஆனால் மதவாத அமைப்புகள் பசுவதைக்கு மட்டும் குரல் கொடுப்பது ஏன்? மற்றவையும் உயிரினம்தானே?

! நியாயமான கேள்விதான். இந்த விஷயத்தில் மதத்தலைவர்களை விட மேனகா காந்தி உயர்ந்து நிற்கிறார்.



• ஆபத்தான அழைப்பு

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

? குறைகளைச் சுட்டிக்காட்டும் பத்திரிகைகளை மட்டும் சாடுகிறார்களே அரசியல்வாதிகள்; அதே பாணியில் வரும் திரைப்படங்களைச் சாடுவதில்லையே... ஏன்?

! பத்திரிகைகளிலும் கூட கதையாக எழுதப்பட்டால் அரசியல்வாதிகள் எதிர்க்க மாட்டார்கள். இப்படி எமெர்ஜென்ஸி காலத்தில் கூட இந்திரா பார்த்தசாரதி கல்கியில் எழுதி, அன்றைய அரசை சாடியிருக்கிறார்! நேரடித் தாக்குதல்தான் அவர்களை உசுப்பிவிடும்.



• அதிக உயரத்தில்

● எம். கதீஜா ஹனீஃபா, திருச்சி - 6.

? 'கள்ளர் வகுப்பைச் சேர்ந்த பெரியசாமிக்கு அமைச்சர் பதவி; மறவர் வகுப்பைச் சேர்ந்த தங்க பாண்டியனுக்கு அமைச்சர் பதவி; அகமுடையார் வகுப்பைச் சேர்ந்த கோ. சி. மணிக்கு அமைச்சர் பதவி - இப்படி முக்குலத்தோரையும் திருப்திபடுத்தியிருக்கிறேன்... முக்குலத்தோர் ஒருவரை மத்திய அமைச்சராக்கி அழகு பார்க்கிறேன்...' - புதுக்கோட்டை தேர்தல பிரசாரத்தில் முதல்வர் இப்படிப் பேசியது நியாயமா?



எமெர்ஜென்ஸி காலத்திலேயே...

! வடிகட்டின அநியாயம்! ஆனால், முதல்வரை மட்டும் குறைகூறிப் பயனில்லை. ஜாதி அடிப்படையிலேயே ஒவ்வொருத்தரும் கட்சி ஆரம்பித்து அரசியல் பண்ணும் போது, அது மற்றவர்களையும் அதே கட்டாயத்துக்கு உட்படுத்துகிறது. தேர்தல் சீர்திருத்தங்கள் இந்த அடிப்படைக் கோளாறுகளைக் களையும் வகையில் விரைவில் அமுலாக வேண்டும்.

● டி. செல்வன், மேடவாக்கம்.

? மைக்கேல் ஜாக்சன் படுத்துறங்கிய தலையணை உறையை ஏலம் எடுக்க போட்டா போட்டி போடும் பாரத நாட்டை ஏழை நாடு என்று எப்படிச் சொல்லலாம்?

! ஒருசில பண மூட்டைகள் இருப்பதால் இது பணக்கார நாடாகி விடாது. பெரும்பான்மை மக்களின் நிலை காரணமாக இது ஏழை நாடுதான். ஒரு பக்கம், காசு இல்லாததால் வறுமை. இன்னொரு பக்கம் மைக்கேலின் தலையணை உறையை ஏலம் எடுக்கும் பண்பாட்டு வறுமை!

● பாலாஜி, குடந்தை - 1.

? கடந்த ஆட்சியில் அ.தி.மு.க. மோசடி செய்யாத ஒரு திட்டமாவது உண்டா...?

! ஏன், சொத்து சேர்க்கிற திட்டம் இருக்கிறதே!

● ஜெ. கண்ணன், சென்னை - 101.

? கோவில் நகைகளைக் கொள்ளையடித்த ஒருவர், 'ஜென்டில்மேன்' அர்ஜுன் ஸ்டைலில் பள்ளி மாணவர்களுக்குக் குடிநீர்த்தொட்டி கட்டிக் கொடுத்திருக்கிறாரே?

! எவ்வளவு சாமர்த்தியம் பாருங்கள்! அவரை விட சாமர்த்தியம் அவரை மடக்கிப் பிடித்த காவல் படையினருக்கு, த்ரீ சியர்ஸ்!

● என். வி. ரமணி, சென்னை - 92.

? மனித இனம் தோன்றி பல கோடி ஆண்டுகளாகியுள்ளதெனினும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் பெருமளவில் ஏற்பட்டது கடந்த முந்நூறு ஆண்டுகளில்தானே? இதன் காரணம் என்ன...?

! பரிணாம வளர்ச்சியின் அந்தந்த கட்டத்தில் நிகழ்ந்த கண்டுபிடிப்புகள் அவ்வப்போதைய கால கட்டப்படி பிரமிக்க வைப்பவைதான். மனிதன் முதன் முதலாக நெருப்பையோ சக்கரத்தையோ கண்டுபிடித்தபோது விளைந்த முன்னேற்றம், இன்றைய கம்ப்யூட்டர் அல்லது டெஸ்ட் ட்யூப் குழந்தை கண்டுபிடிப்புகளுக்கு இணையாகச் சொல்லக்கூடியவையே.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
கி. முருகன்,
பூங்கா இல்லம்,
மாப்பிள்ளைக்குப்பம் - 610 105.

# அழுகிப் போனாலும் அள்ளித் தரும் லாபம்!

டிஸ்னி லேண்ட் பற்றி அனைவருக்கும் தெரியும். ஆனால் பலருக்கும் தெரியாத ஒரு விஷயமும் அங்கே இருக்கிறது. அதுதான் இயற்கை உரம் தயாரிப்பது. ஆயிரக் கணக்கான ஏக்கர் பரப்பில் இயற்கை உரம் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். எதிலிருந்து? அழுகும் பழவகைகள், கறிகாய்கள் போன்றவற்றிலிருந்து!

அமெரிக்காவில் பதினொரு வருடங்கள் தங்கி யிருந்து இதை நேரில் பார்த்ததாலோ என்னவோ, தமது டாக்டர் தொழிலை உதறித் தள்ளிவிட்டுத் தமது சொந்த ஊரான மைசூருக்கே வந்து விட் டார் டாக்டர் தலவானே கிருஷ்ணன்.

"இயற்கை உரத் தயாரிப்பில் ஒரு புரட்சி யையே செய்து வருகிறார் அவர். மைசூருக்குப் போய் அவர் இந்தத் துறையில் செய்து வரும் சாதனைகளை



• விற்பனைக்குத் தயாரான இயற்கை உரம்...



நேரில் பார்த்துவிட்டு வந்த நாங்களும் இப்போது அந்த முயற்சியில் இறங்கியிருக் கிறோம்!" என்கிறார் எக்ஸ்நோரா செயலர் வி.என். சுப்பிர மணியம்.

"இயற்கைக் கழிவுகளுக்கு என்ன செய்கிறீர்கள்?"

"என்ன இப்படிக்கேட்டுவிட்டீர்கள்! கோயம்பேடு மார்க்கெட்டில் என்ன நடக்கிறது? விற்பனைக்குப் போக மீதியுள்ள எத்தனையோ காய்கறிகளும் பழங்களும் பூக் களும் அழுகி, மக்கி வீணாகப் போகிறதல்லவா? அவற் றையே உரமாக மாற்றும் திட்டமொன்றை அரசுக்கு அனுப்பினோம்!"

"அரசிடமிருந்து அனுமதி கிடைப்பது அவ்வளவு சுலபமா என்ன?"

"அதுதான் இல்லை. உடனடி யாக அனுமதி கிடைத்து, வேலை யையும் துவங்கிவிட்டோம்!

"இதில் என்ன பெரிதாக லாபம் கிடைத்து விடப் போகிறது?"

"இதுவொன்றும் குப்பை சமாச்சாரமில்லை. மைசூரி லுள்ள டாக்டர் தலவானே கிருஷ்ணன் என்ன செய்கிறார் தெரியுமா? சாமுண்டீஸ்வரி மலைக்குக் கீழே இருக்கிற மார்க் கெட்டிலிருந்து வருகிற குப் பையை விலைக்கு வாங்கி, அதை அருமையான இயற்கை உரமாக மாற்றி விற்கிறார். ஒரு டன்

[redacted]

உரத்தின் விலை 3200 ரூபாய்!"

"செலவு?"

"ஒரு டன் உரம் தயாரிக்க ஆகும் செலவு ஆயிரத்து அறுநூறு ரூபாய்தான்! தொண்ணூறு டன் குப்பைகளிலிருந்து முப்பது டன் உரம் தயாரிக்க முடியும். அதில் 54,000 ரூபாய் லாபம் பெற முடியும்!"

"குப்பைகளை அப்படியே போட்டு வைத்தாலும் அது ஒரு நாள் மக்கி உரமாகத்தானே செய்யும்!"

"குப்பைகளிலும் நல்லது கெட்டது இருக்கின்றன. அழுகும் தன்மையுள்ள குப்பைகளிலிருந்து வெளிப்படும் ஈரத்தன்மையினால் சுற்றுச் சூழல் பாதிக்கப்படும். அவை இருக்கும் நிலமும் பாதிக்கப்படுவதால் அந்தப் பகுதியிலுள்ள நிலத்தடி நீரும் பாதிக்கப்படும். நாம் செயற்கையாக இயற்கை உரம் தயாரிக்கிறபோது இந்த பாதிப்புகள் தடுக்கப்படுகிறது. கூடவே, குறுகிய காலத்திலும் உரத்தைத் தயாரித்து விட முடிகிறது! இவற்றோடு காய்கறிச் செடிகளுக்கும் இயற்கை உரத்தையே பயன்படுத்துகிற வாய்ப்பும் விவசாயிகளுக்குச் சுலபமாகக் கிடைக்கும். அதனால்தான் இப்படித் தயாரித்து, விவசாயிகளுக்குக் கூட்டுறவு முறையில் வழங்க இருக்கிறோம்!"



கழிவுகளை வைக்கோல் போட்டு மூடி உரம் தயாரிக்கும் டாக்டர் தலவானே கிருஷ்ணன்

"வரவேற்பு இருக்குமா?"

"வரவேற்பா? இப்படியொரு திட்டத்தை நாங்கள் துவங்கியிருக்கிறோம் என்று கேள்விப் பட்டவுடனேயே சேலம், மதுரை, திருச்சி போன்ற நகரங்களிலுள்ள மார்க்கெட்டுகளிலிருந்து 'எக்ஸ்நோரா'வுக்கு அழைப்புகள் வந்து விட்டன, அங்கும் இத்திட்டத்தை அமல்படுத்தச் சொல்லி!" என்று பூரிப்புடன் கூறுகிறார் வி.என் சுப்பிரமணியம்.

- எஸ்.வி.என்.



"நான் ஜெயில்ல இருக்கும்போது ஏன் என்னை பார்க்க வரலேன்னு தலைவர் சத்தம் போட்டாரு..."

"ஏதாவது உருக்கமா சொல்லி அவரை ஏமாத்தியிருப்பியே...?"

"பின்ன?... 'உங்களை கைதியா பாக்கற தைரியம் என் இதயத்துக்கு இல்லை, தலைவரே'ன்னு சொன்னேன். சிலிர்த்துப் போயிட்டார்!"



"ஆனாலும் நம்ம தலைவி இப்படி சொல்லியிருக்கக் கூடாது..."

"என்ன சொல்லியிருக்காங்க?..."

"இடைத்தேர்தல்தானேன்னு இரக்கப்பட்டு, ஆளுங்கட்சி போட்டியிடாம இருந்திருந்தா நாங்கதான் ஜெயிச்சிருப்போம்'ன்னு சொல்லியிருக்காங்க!"

—எஸ்.எஸ். பூங்கதிர்

## மகனுக்காக ஒரு சொத்து!

●● வாழ்க்கையில் நான் கற்ற ஒரே பாடம் – பணம் மட்டும் நிம்மதி தராது என்பதுதான். ஒரு லட்சாதிபதி எனக்குக் கற்றுத் தந்த பாடம் இது. வருமான வரித்துறை அதிகாரியான என்னிடம் அவரே முன்வந்து தம் 25 லட்சம் மதிப்புள்ள சொத்துக்களுக்குக் கணக்குக் காட்டி, அஸெஸ்மென்ட்களை சீக்கிரம் முடிக்க வேண்டியபோது ஆச்சர்யப்பட்டேன். (இன்றைய மதிப்பில் அந்த 25 லட்சம், கோடிகளை எட்டும்!) அவர் சொன்னார் : "சாகும் முன் என் கணக்குகளை சரிசெய்து விட விரும்புகிறேன். ஏனெனில், சித்த சுவாதீனமில்லாத என் ஒரே மகனுக்கு நான் இறந்தபின் தொல்லைகளை விட்டுப் போக விரும்பவில்லை. இது ஒன்றைத்தான் அவனுக்காக என்னால் செய்ய முடிகிறது!"

அம்பர்நாத் (கிழக்கு). கே. லட்சுமிநரசிம்மன்,

## என் குழந்தை மட்டும்...

●● மைலாப்பூர் பஸ் நிலையத்தில் குழந்தையுடன் நின்றிருந்தேன். குழந்தை கையில் வைத்திருந்த பிஸ்கெட்களில் ஒன்று கீழே விழுந்து விட்டது. குனிந்து எடுத்து, மண்ணை ஊதி சுற்றுமுற்றும் பார்த்தேன். பிளாட்பாரத்தில் இருந்த ஒரு குழந்தையிடம் அதை நீட்டினேன். உடனே அக் குழந்தையின் அம்மா, "கீழே விழுந்த பிஸ்கெட்டை உன் குழந்தை சாப்பிடக் கூடாது என்றால் என் குழந்தை மட்டும் சாப்பிடலாமா?" என்று கேட்டபோது துடித்து விட்டேன். கையிலிருந்த பிஸ்கெட் பொட்டலத்தையே அவர்களிடம் கொடுத்துவிட்டு மன்னிப்புக் கேட்டேன். மனிதர்களை மதிக்கிற பாடத்தை அந்த பிளாட்பாரப் பெண்மணியிடம் கற்றேன்.

சென்னை – 28. வி. நாராயணசாமி,



## அள்ள முடியுமா?

●● அப்போது எனக்குப் பன்னிரெண்டு வயது. தோழியுடன் பல்லாங்குழி ஆடிக் கொண்டிருந்தபோது, ஏதோ வாக்குவாதம் வர, அவளைக் கண்டபடி ஏசி விட்டேன். இதைப் பார்த்துக் கொண்டிருந்த அவ்ளது தாயார் அருகே வந்து பல்லாங்குழியில் இருந்த முத்துக்களைக் கீழே கொட்டி, "இதை அள்ளி எடு" என்றார். எடுத்தேன். "இதே போல் நீ பேசிய சொற்களை உன்னால் திருப்பி எடுக்க முடியுமா?" என்றபோது துணுக்குற்றேன். "பெண்கள் அன்பு, அடக்கத்தோடு இருக்க வேண்டும் வார்த்தைகளை யோசித்துப் பேச வேண்டும்' என்று அவர் சொன்ன பாடத்தை இன்றும் கடைப்பிடிக்கிறேன்.

பழநி. ஜி. உமாதேவி,

## பாதகம் செய்பவரைக் கண்டால்...

●● தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு ஸ்கூட்டரின் நடுவே ஒரு குடிகாரன் வந்து விழுந்து விட்டான். பார்க்க மிகவும் சாதுவாகத் தெரிந்த ஸ்கூட்டர்காரரிடம் எப்படியாவது பணம் பறித்துவிட வேண்டும் என்று முடிவு செய்த அந்தக் குடிகாரன், அவரைக் கண்டபடி திட்டவும் கலாட்டா செய்யவும் ஆரம்பித்தான். தவறு என்னவோ அவனுடையதுதான். பொறுத்துப் பார்த்த ஸ்கூட்டர்காரர் திடீரென்று அவன் கன்னத்தில் பளார் என்றொரு அறை விடவும் மிரண்டு விட்டான்.

அவன். "இன்னா அண்ணாத்த, இப்படி அடிச்சிட்டியே" என்றபடி நைசாக நழுவிப் போய் விட்டான். பாதகம் செய்பவரை மோதி மிதித்துவிடச் சொன்ன மகாகவி எழுதிய வரிகளின் பொருள் அன்று எனக்குப் புரிந்தது. அதுவே வாழ்க்கையில் எனக்குப் பெரிய பாடமாகவும் ஆனது.

சென்னை – 12, எம். தக்ஷிணாமூர்த்தி.

### தன் கையே...

●● ரயில்வே மேம்பாலத்தில் நடந்து கொண்டிருந்தேன். எதிர்ப்புறம் ஓர் இளைஞர் தன்னு வண்டியில் சில பொருட்களுடன் மேடு ஏற முடியாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்து அருகே போய், "நான் உதவட்டுமா?" என்றேன். "வேண்டாம். இன்று நீங்கள் உதவினால் நாளை மறுபடி யாராவது உதவ மாட்டார்களா என பார்க்கத் தோன்றும். என் வேலையை நானே செய்வதுதான் முறை" என்று அவர் சிரமப்பட்டு மேடு ஏறிப் போய் விட்டார். எதற்கும் அடுத்தவரை எதிர்பார்க்கக் கூடாது என்ற பாடம் அன்று எனக்குக் கிடைத்தது.

வட்டியூர்க்காவு, கே. பாமா,

### முகம் தெரியாத அன்பு...

●● கோவையில் இருந்தபோது ஒருமுறை சென்னையில் இருக்கும் என் மாமாவுக்கு எஸ்.டி.டி. செய்தேன். பலமுறை முயன்றும் ராங் நம்பராகவே போய்க் கொண்டிருந்தது. இரவு பன்னிரெண்டு மணி! பலமுறை என் 'ராங் காலை' சந்திக்க நேர்ந்த அந்த முகம் தெரியாத நபர், தூக்கம் கெடுவதைப் பொருட்படுத்தாமல், என் மாமாவின் நம்பரைக் கேட்டு வாங்கி, தாமே விஷயத்தைச் சொல்லி, எனக்கும் தகவல் சொல்லி விட்டார். அந்தச் சம்பவம் அப்படியே என் மனத்தில் நின்று விட்டது. பொறுமை, பிறருக்கு உதவுவது என்கிற இரண்டு பாடங்களையும் அவரிடமிருந்து அன்று கற்றேன்.

சென்னை – 21. அரிச்சந்திரன்,



# பணம் நிம்மதி தருமா?

**இந்த வாரம் ஒரு சவரன் பரிசு பெறும் வாசகர் :**
**காமாட்சி நடராஜன்,**
**108, மஹானா தெரு,**
**திருவிடைமருதூர்– 612 104.**

### மாணவி நடத்திய பாடம்...

●● நான் ஒரு ஆசிரியை. என் மாணவியரில் ஒருத்தி சற்று மந்தம். படிப்பும் போதாது. ஒழுங்காக வகுப்புகளுக்கு வருவது, ஹோம் ஒர்க் செய்வது போன்ற பழக்கங்களும் இடையாது. மொத்தத்தில் எனக்கு அவளை அவ்வளவாகப் பிடிக்காது. ஒரு மழை நாளில் நான் குடை கொண்டு வராமல் வந்து விட்டேன். வகுப்பு முடிந்ததும் தத்தம் குடைகளுடன் சென்று விட, நெடுந்தூரம் செல்ல வேண்டிய

நான், என்ன செய்வதென்று புரியாமல் நின்று கொண்டிருந்தேன். அப்போது அந்த 'மக்கு' மாணவி வந்து, "டீச்சர், நீங்கள் என் குடையை எடுத்துச் செல்லுங்கள். நான் ஒருத்தி மழையில் நனைந்து உடல்நலம் சரியில்லாமல் போனால் பெரிய பாதிப்பு ஒன்றுமில்லை. நீங்கள் நனைந்து, ஏதாவது ஆனால், அத்தனை பேர் பாடமும் கெடும். ஆகவே நீங்கள் குடையை எடுத்துப் போங்கள்" என்று சொல்லி விட்டு, அவள் மழையில் இறங்கி நடந்து போய் விட்டாள். படிப்பை மட்டும் வைத்து ஒருவரின் குணத்தை எடைபோடக் கூடாது என்ற பாடத்தை அந்த மாணவி எனக்குச் சொல்லித் தந்தாள்.

கும்பகோணம், கே. ஆர். சாவித்ரி,

## பணம் என்றால்...

●● மிக அவசரத் தேவைக்காக என் நண்பர் ஒருவரிடம் ஓடிச் சென்று பண உதவி கேட்டேன். இல்லை என்று சொல்லி விட்டார். பிறகு அவரே வேறொருவரிடம் "இவனுக்குத் தரலாம்தான். ஆனால் வட்டியில்லாக் கடன்தானே!" என்று பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டு அதிர்ந்தேன். பணம் என்று வரும்போது நட்பு, உறவு, பாசம் எல்லாம் இரண்டாம்பட்சம்தான் என்ற பாடம் கற்றேன். பிறகு நான் ஒரு உண்டியல் வாங்கி சிறுகச் சிறுக சேமிக்கத் தொடங்கினேன். பிறரிடம் கடன் கேட்பதை அறவே விட்டு விட்டேன்.

வேலூர் - 4, கே. வெங்கடேசன்.

## இப்படியும் தற்புகழ்ச்சி...

●● "என்னால் என்ன முடியும்? நான் அற்பப்புழு! எனக்கு ஒன்றும் தெரியாது!" என்று இப்படித்தான் நான் எப்போதும் பேசிக் கொண்டிருப்பேன். என் அலுவலகத்தில் இருந்த ஒரு பெண் ஒருநாள், "சார், இது ஒண்ணும் தன்னடக்கம் இல்லை. இதுவும் தற்புகழ்ச்சிதான். ஆனா நீங்க வேற ரூபத்துல வெளிப்படுத்தறீங்க" என்றாள். எனக்குப் பொட்டில் அடித்தது. அன்று வரை என்னைத் தாழ்த்திச் சொல்வதே உயர்வு என்று நினைத்திருந்தேன். 'யதார்த்தமாய் வாழ்வதே சரி!' என்று அந்தப் பெண் எனக்குப் பாடம் போதித்தாள்.

கடலூர், எஸ். ராமச்சந்திரன்,

## அன்பின் ஆழம்...

●● ஒரு விடுமுறையில் என் தாத்தா ஊருக்குச் சென்றிருந்தேன். ஒருநாள் பிற்பகல் என் தாத்தாவின் நண்பர் (85 வயது) அவரைப் பார்க்க வந்து, பேசிக் கொண்டிருந்தார். "வெயில் அதிகமாக இருக்கிறது. இங்கேயே சாப்பிட்டு விட்டு மாலை வீடு திரும்பலாமே?" என்று என் தாத்தா அவரிடம் சொன்னார். சற்று யோசித்து விட்டு ஒப்புக் கொண்ட அவர், என்னைக் கூப்பிட்டுத் தன் வீட்டுக்குப் போய், அவர் மனைவியிடம் தகவல் சொல்லி விடச் சொன்னார். "அவள் சாப்பிடாமல் எனக்காகக் காத்திருப்பாள். நீ போய் விவரம் சொல்லிவிடு" என்ற போது அவரது அன்பின் ஆழம், எதிர்பார்ப்பின் அவசியம் புரிந்தது. 85 வயதில் அவர் கடைப்பிடித்த அந்தப் பண்பு எனக்கொரு பாடமானது.

மானம்புச்சாவடி, த. ஜெயகுமார்.

## மறக்க முடியாத பாடம்!

●● அரசுடைமை வங்கியில் எனக்கு நேர்முகத் தேர்வு. முடிவில் "If I am selected, I will do my best" என்றேன். தேர்வாளர் உடனே, "Your best may be our least" என்றார் பட்டென்று. வேலை, திருமணம், குடும்பம் என்று இந்த 25 வருடங்களில் அந்த வாக்கியத்தின் உண்மையை உணராத நாளே இல்லை. என்னதான் சிறப்பாகச் செய்தாலும் திருப்தியுறாத வாடிக்கையாளர்கள், அலுவலகம், வீடு. நம் செயல்பாடுகள் எப்போதும் விமர்சனங்களைச் சந்திக்க வேண்டியே இருக்கிற நிலை. அதனால் எப்போதும் செயலின் சிறப்பு எல்லைகளைத் தேடித் தேடி ஓட வேண்டிய கட்டாயம். என்னைப் பொறுத்தவரை "Your best may be our least" என்கிற மந்திரச் சொல்தான் எனக்கு இன்றும் வேதமாக - பாடமாக இருக்கிறது.

திருவிடைமருதூர், காமாட்சி நடராஜன்.

இன்று இரவு டூட்டிக்கு, இரண்டு மணி நேரம் லேட்டானதால் செய்யக்கூடிய வேலைப் பளுவை நினைத்துக் கொஞ்சம் பரபரப்பு அடைந்தாள் ரேவதி.

இவள் உள்ளே நுழைந்ததும், மதியம் டூட்டி பார்த்த நர்ஸ் உடை மாற்றி ரெடியாக இருந்தாள். "வரட்டுமா...? பத்து கேஸ் புதுசு இருக்கு. லிஸ்டை பார்த்துச் செய்..." அவள் நடந்து கொண்டிருந்தாள்.

அவள் அவசரம். கிராமத்துக்கு கடைசி பஸ்சை பிடிக்கணும்.

யூனிபாஃர்ம் மாட்டிக் கொண்டு வெளியே வந்து லிஸ்டை பார்த்தாள் ரேவதி. எல்லாம் வயிற்றுப் போக்கு கேஸ். சீசன் இது. வரிசையாக எல்லோருக்கும் பி.பி. பார்க்கணும். ஊசி போடணும். மாத்திரை கொடுக்கணும். சலைன் ட்ரிப்பை சரி பார்க்கணும்.

அந்த நேரத்தில்...

தன் கணவருடன் வார்டு பேஷன்டான வள்ளி வந்து நின்றாள்.

"என்ன...?"

"யம்மா... இவருக்கு வயத்த வலிச்சிக்கிட்டு தண்ணியா போவுதும்மா.."

"எத்தினி தடவ போனது...?"

"மூணு நாலு தடவ இருக்கும்மா..."

"காலரா கேஸ்ல... துணைக்கி யாரும் அங்க இருக்கக் கூடாதுன்னா, யாரும் கேட்டாத் தானே...! ஓ.பி.க்கு போக சொல்லு.. டாக்டர்ட்ட அட்மிஷன் சீட்டு வாங்கி வந்தா, ஒரு பெட்ட போட்டு படுக்க வச்சுடலாம்..."

"வேண்டாம்மா... நா வந்தே மூணு நாள் ஆயிட்டு. நாளைக்கி வூட்டுக்குப் போகணும். புள்ள குட்டி எல்லாம் பசி, பட்டினியா பயந்து போய்க் கெடக்கும். நீங்களே ஊசி போட்டு மாத்திரை கொடுங்கம்மா..."



# இவர்கள்தான்

ரேவதி கொஞ்ச நேரம் யோசித்தாள். டாக்டர் வார்டு ரவுன்ட்ஸ் வரும் போது சொல்லிக் கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டே ஒரு ஊசி போட்டாள். உள்ளுக்கு மாத்திரை கொடுத்தாள்.

வரிசையாக ஒவ்வொரு பேஷண்டாக, பி.பி. பார்த்து ஊசிபோட்டு, மாத்திரை கொடுத்தாள். சலைன் ட்ரிப்புகளை மாற்ற வேண்டியதை மாற்றிச் சரி செய்தாள்.

திரும்ப ஓய்வு அறைக்கு வரும்போது மணி பன்னிரண்டு. பசி.

டிபன் பாக்ஸை திறந்ததும்... சட்னியின் ஊசிப் போன வாசம் 'குப்'பென்று முகத்தில் அடித்தது. அடிவயிற்றைக் குமட்டியது. பெயருக்கு இரண்டு இட்லியை பிளாஸ்க்கில் உள்ள வெந்நீரில் நனைத்துச் சாப்பிட்டாள்.

மாலை நான்கு மணிக்கு கட்டு டப்பாவில் வைத்த இட்லி. பன்னிரண்டு மணிக்கு சாப்பிட்டால் என்னவாகும்...?

இன்று எல்லாமே அவசரம். எப்போதும் அவன் வண்டியில் கொண்டு வந்து விட்டு போவான். நேற்று இரவு டூட்டி முடிந்து காலை பஸ் பிடித்து வீட்டுக்குப் போகும் போது மணி பத்து. இவளைப் பார்த்ததும் அவன்

# மனிதர்கள்

சத்திய சந்தன்

கணவன் முறைத்துக் கொண்டே வண்டியை வேகமாக உதைத்து ஸ்டார்ட் பண்ணி வேகமாகப் போனான்.

வெளியே கோபமாகப் போன கணவனை எதிர்பார்த்து... என்னமோ, ஏதோ என்று பயந்து அவள் காத்திருக்க... ஆறு மணிக்குத்தான் வீடு வந்தான்.

"இங்க அம்மாவுக்கு உடம்பு முடியல. பையன் பரீட்சைக்குப் படிக்கிறான்.... வூட்டு வேலை நெறையா இருக்கு... நீ ஆஸ்பத்திரி, ஆஸ்பத்திரின்னு ஓடுற... அதான் உன்மேல கோவம். பகல்ல நா இருந்தா உன்னுட்ட சண்டை போட்டிருப்பேன். அதான் வெளில கௌம்பிட்டேன்..." என்ற கணவனை, கண்களில் நீர் கலங்கப் பார்த்தாள் ரேவதி. அவன் தரை பார்த்தான்.

ரேவதி பதில் பேசாமல் மௌனமாக பையைத் தூக்கி கொண்டு பஸ்ஸுக்கு நடந்தாள். அவனைப் போலவே தானும் மௌனமாக நடந்து கொள்வது தான் இருவருக்கும் நல்லது என்று நினைத்துக் கொண்டாள்.

பொழு விடிஞ்சி, பொழுது போனா... எந்த நேரமும் மனசு ஒரே பரபரப்பா இருக்கு. வாழ்க்கையை அவசரப்படுத்துகிற நர்ஸ் தொழில். மனசில் உள்ள ஆசைகளைக் காலில் போட்டு மிதித்து விட்டு ஆஸ்பத்திரி வீடு என்று மெஷினாய் ஓடுகிற நர்ஸ் தொழில்...

இப்படிக்கெடந்து கஷ்டப் படுகிறபோதும் இந்த வேலைக்கு உள்ள மரியாதையும், கௌரவமும் கிடைக்கிறதா? வீட்டிலும் இல்லை. ஆஸ்பத்திரியிலும் இல்லை.

இவளும் ஓ.பி.யில் இருந்து-ஆபரேசன் தியேட்டர், பிரசவ வார்டு, குழந்தைகள் வார்டு, எம்.எஸ். வார்டு, ஐ.சி.சி.வார்டு என்று ஒவ்வொரு பிரிவிலும் இருந்து பார்த்து விட்டாள்.

சொன்னதைக் கேட்காமல் மருத்துவப் பணிக்கு இடைஞ்சலாக 'நா ஆளுங் கட்சிக்காரன், ஒன்றியம், வட்டம்' என்று கரை வேஷ்டியை மடித்துக்கட்டிக் கொண்டு மீசையை முறுக்கும் அதிகாரம்.

ஓ.பி.யில் டாக்டரை பார்க்க சீட்டு வாங்கி வரிசையில் வரும்போது... இடையில் ஆஸ்பத்திரி பணியாள் தன் உடம்பைக் காண்பிக்கப் புகுந்தான் என்று, 'இதுக்கு எதுக்கு வரிசை' என்று சீட்டைக் கிழித்து இவன் தலையில் போட்டுச் சென்றவனும் உண்டு.

'இது ரம்பா மாதிரி இல்ல... நக்மா மாதிரி இல்ல' என்று நடிகைகளின் பெயரை வைத்துக் கேலி பேசி காமப் பார்வையுடன் சுத்திவரும் பார்வையாளர்களும் உண்டு.

"ம்! எதை நினைத்து என்ன பயன்? கை நிறைய



"எங்க கம்பெனிக்கு ரெண்டு பிராஞ்சு இருக்கறதா சொன்னேனே!"

— பாஸ்



"அதுவா... மார்டன் குடும்பம் ஆச்சே... அதனாலே மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் இடையே நலங்குக்குப் பதிலா வீடியோ கேம்ஸ் போட்டி நடத்தறாங்க..."

— ராஜிராதா



"வாப்பா... உன்னைத்தான் எதிர்பார்த்துட்டு இருந்தேன்..."

"ஏன் தாயீ!"

"வீட்ல திடீர்னு விருந்தாளிங்க வந்துட்டாங்க. கொஞ்சம் சாப்பாடு கொடு. நாளைக்கு பிச்சைபோடும் போது சேர்த்துப் போடறேன்!"

— எஸ்.எஸ். பூங்கதிர்

சம்பளம் கிடைக்கிறது. நிம்மதி? போன ஜென்மத்தில் எதாவது பாவம் பண்ணியிருப்போமா?

"அய்யய்யோ... நா, என்ன பண்ணுவேன்... கன்னு சொருகிட்டே... நல்லா இருந்த மனுசனுக்கு ஒரு ஊசி போட்டதால இப்படி ஆயிட்டே... பாவி! அவ நல்லா இருப்பாளா? காசு கொடுக்கலன்னு இது மாதிரி பண்ணிட்டாளா? உனக்கு எம்புட்டுக் காசு வேணும்? அம்பதா? நூறா? உன்னோட ரேட் எம்மா?" வள்ளி போட்ட சத்தம் மருத்துவமனையின் சகல வார்டுகளிலும் ஒலித்து, எதிரொலித்தது.

"ரேட்டா...?" ரேவதி எழுந்து வெளியே சப்தம் கேட்ட வார்டுக்கு ஓடினாள். "உன்னோட காசக் கொண்டுப் போய்க் குப்பையில போடு. நா ஊசி போட்டதால இது மாதிரி ஆயிட்டுன்னு கத்தறியே...?"

"ஆமாண்டி பாவி! எனக்குத் துணையா வந்த எம் புருஷன்.. புருஷன்..."

"நா என்ன பண்ணினேன். நீ தானே! மூணு தரம் தண்ணியா போவுது, ஊசி போடுங்கன்னு சொன்ன...?

"அப்ப.. சொன்னேன். இப்ப இப்படி ஆயிட்டே... பொழுதனைக்கும் டாக்டர்களுங்ககிட்ட பல்லக் காமிச்சுக்கிட்டு நிக்கிறதுக்குத் தானே ஒங்களுக்கு நேரம் சரியா இருக்கு... எங்க வைத்தியம் பார்க்கிறீங்க..."

"இத பாரும்மா... மரியாதையா பேசு. நீ ஊசி போடுங்கன்னு சொன்னதும், நா ஓ.பிக்கு தான் போவ சொன்னேன். இரக்கப்பட்டதால இப்படியா? முதல்ல நீ எந்திரி... என்னை ஒண்ணும் பண்ண முடியாது. முறைப்படி ஓ.பிக்கு போய் டாக்டர்ட்ட காமிச்சிட்டு வா!"

"அய்யய்யோ... உடம்பு சில்லின்னு ஆயிடுச்சே... மூச்சக்காணுமே! நா என்ன பண்ணுவேன்... அடிப்பாவி, கொன்னுட்டியே...! எம் புருஷனை..." மீண்டும் அவளின் ஒப்பாரி அதிகமாக...

சட்டென்று படுத்திருந்த அவனின் கண் இமையை விலக்கிப் பார்த்தாள் ரேவதி. வாயைப் பிளந்து பார்த்தாள். நாடி பிடித்து, பி.பி. செக் பண்ணும் போது...பல்ஸ் ரொம்ப இறங்கிப்போய் ஆபத்தான நிலையில் இருந்தது.

அவனுக்குள் அதிர்ச்சி. வயிற்றுப் போக்கு ரொம்ப நேரமாகப் போயிருக்க வேண்டும். இல்லையேல் உடம்பு இவ்வளவு சீக்கிரம் ஆபத்தான நிலை ஆகியிருக்காது.

"அய்யா... உங்க பெயரென்ன?"

"......"

"சொல்லுய்யா, உங்க பெயரென்ன...? உடம்பை உலுக்கினாள்.

"செய... ராமன்ங்க..."

# கல்கி - பாலு ஜுவல்லர்ஸ்

## இணைந்து வழங்கும்



## வாரம் ஒரு சவரன்

## போட்டி – 7



எல்லோரும் எப்போதாவது ஒருமுறை பயந்திருப்போம். திகிலில் திகைத்து நின்றிருப்போம். அப்படி, பயத்தை உண்டாக்கிய-திகிலில் ஆழ்த்திய சம்பவம் ஒன்றைக் கீழுள்ள கூப்பனில் சுருக்கமாக எழுதியனுப்புங்கள். சிறந்தவை பிரசுரமாவதோடு, மிகச் சிறந்த ஒரு சம்பவத்தை எழுதியவருக்கு ஒரு சவரன் பரிசு. கடைசி தேதி:3.3.97. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உறையின் மேல் 'சவரன் போட்டி - 7' என்று குறிப்பிடுதல் அவசியம்.

**சவரன் போட்டி - 7**
**பயத்தை-திகிலை உண்டாக்கிய சம்பவம்:**

பெயர்:..........................................................

முகவரி:..........................................................

..........................................................

..........................................................

"ம்... சொல்லு, எத்தினி தடவ போனது...?"

"..........."

"சொல்லுய்யா... எத்தினி தடவ போனது...?"

"............."

பளிச்சென்று அவன் கன்னத்தில் அறைந்தாள். "உண்மையைச் சொல்லு? எத்தினி தடவ போனது...?"

அவன் மிரண்டு போய் விழித்தான். "இ...இரு...பது தடவைக்கு மேல... காலலருந்து போவுதும்மா..."

"அடப்பாவி, மனுசா...காலையில் இருந்து இருபது தடவைக்கு மேல போயிருக்கு... நீ! மூணு, நாலு தடவன்னு என்னுட்ட பொய் சொன்னியே..."

பக்கத்தில் இருந்த வார்டு ஹெல்பரிடம் டாக்டருக்கு மெமோ எழுதி அனுப்பி விட்டு, காலியாக இருந்த பெட்டில் படுக்க வைத்தாள்.

இரண்டு கைகளிலும் நரம்புகளைக் கண்டு பிடித்து ஒருபக்கம் குளுக்கோஸ் சலைனும், மறு பக்கம் குளுக்கோஸ் சொலுயூசன் சலைனும் போட்டாள். ஆம்பிசிலின் ஊசியுடன், காராமைசின் ஊசியும் சேர்த்துப் போட்டாள்.

கொஞ்ச நேரத்தில டூட்டி டாக்டர் வந்தார். விவரம் சொன்னாள். அட்மிசன் சீட்டில் கையெழுத்துப் போட்டுவிட்டு, "ட்டிரிப்பை கண்டினியூவ் பண்ணுங்க. காலையில நார்மலுக்கு வந்துடும்..." என்று சொல்லிப் போனார்.

மனம் சலித்துப் போனது. ஒரு நிமிஷத்தில் உடல் நடுக்கம் கண்டது. இது மாதிரி பத்து கேஸ் வந்தால் போதும்! தொழிலில் உள்ள புனிதம் கெட்டு விடும்.

திரும்ப ஒவ்வொரு வார்டாக நுழைந்து, வரிசையாக பேஷண்டுகளைப் பார்த்து வந்தாள். மணி இரண்டானது. நேற்று பகலில் வேறு தூக்கம் இல்லை. உடம்பு பலகீனமாய் இருந்தது. கொஞ்ச நேரம் கண் அசந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்தவள் வேண்டாம், ஜெய ராமன் கேஸ் கொஞ்சம் சீரியஸ் என்று... சேரை தூக்கி அந்த வார்டுக்கு நேராகப் போட்டுக் கொண்டு, இதர எழுத்துப் பணிகளைப் பார்த்தாள்.

விடிந்ததும் ஏழு மணிக்கு அடுத்த டூட்டி நர்ஸ் ரெடியாக வந்தாள். ரேவதி உடை மாற்றிக் கொண்டு வெளியே வரும் போது...

"அம்மா... தெய்வம் போல எம் புருஷனை எமன்கிட்ட இருந்து காப்பாத்தினீங்க..." என்று ரேவதியின் காலில் பொத்தென்று விழுந்தாள் வள்ளி.

"சீச்சி... என்ன வேல...இது? எந்திரி..." என்று பின் வாங்கினாள் ரேவதி.

S M T

ஸ்ரீ ராம ஜெயம் ☎ 5726891, 5723735

# ஸ்ரீ மீனாக்ஷி டிராவல்ஸ் [டில்லி] (Regd.)

4/24, W.E.A., Karol Bagh, NEW DELHI - 100 005

Branch Office: Opp. Thiruvalluvar Theatre, THANJAVUR - 613 001 Ph: 31306

## சுற்றுலாத் துறையில் அனுபவமிக்கவர்களால் நடத்தப்படும் வட இந்திய புனித யாத்திரைகள்

1. **தேவிதரிசனம்:** மதுரா தேவி-துவாலாமுகி-சிந்தபூரணி-சாமுண்டி-காங்க்ரா-வைஷ்ணவிதேவி-ஜம்மு ரகுநாத் மந்திர்-அமிர்தசரஸ் பொற்கோவில்-வாகா-(INDIA BORDER) -ராம் தீர்த்-குருக்ஷேத்திரம் (கீதோபதேசம்) 6 நாட்கள் சுற்றுலா புறப்படும் தேதி 5-4-97 கட்டணம் நபர் ஒன்றுக்கு ரூ. 1,500/-
2. **ராஜஸ்தான் சிறப்பு சுற்றுலா** அஜ்மீர்-புஷ்கர்-ஜெய்ப்பூர் 3 நாட்கள் புறப்படும் தேதி 6-3-97 நபர் ஒன்றுக்கு கட்டணம் ரூ.800/-
3. **பத்ரிநாத் யாத்திரை** ஹரித்வார்-ரிஷிகேஷ்-தேவ ப்ரயாக்-ஜோஷிமட் 6 நாட்கள் Travel By 3x2 Seat Bus 1,300/- கட்டணம் if it is 2x2 Seater Delux Bus ரூபாய் 1,600/-
4. **பத்ரிநாத் & கேதார்நாத்** ஹரித்வார்-ரிஷிகேஷ்-தேவப்ரயாக்-ஜோஷிமட்-அவ்லி, Travel 2x2 Super Delux Push Back Seat கட்டணம் நபர் ஒன்றுக்கு ரூ.2,100/- டூர் 3 & 4 புறப்படும் தேதி 5-5-97, 15-5-97, 23-5-97, 6-6-97.
5. **நேபாள் டூர்** ([illegible]) நைமிசாரண்யம்-அயோத்யா-கோரக்பூர்-பொக்ரா-கண்டகிநதி-முக்திநாத்-காட்மாண்டு-பசுபதி நாத்-வாரணாசி (காசி) அலகாபாத்-ஆக்ரா-மதுரா-பிருந்தாவனம்-டில்லி. 15 நாட்கள் Travel 2x2 Seat கட்டணம் ரூ.5,500/- (விமானக் கட்டணம் தனி) புறப்படும் தேதி 3-4-97.
6. **சிம்லா-குலு-மணாலி-ரோதங்பாஸ்-சண்டிகர்-பிஞ்சூர் கார்டன்-ராக் கார்டன்** சுற்றி பார்க்க நபர் ஒன்றுக்கு ரூ.2,000/- 6 நாட்கள் (குழுக்கள், மேற்கண்ட சுற்றுலாக்கள் அனைத்திற்கும் [illegible] சாப்பாடு மற்றும் தங்கும் வசதியும் உண்டு [illegible] முன்னதாகவே பதிவு செய்துக் கொள்ளவும். [illegible] சுற்றுலாக்களை ஆக்ரா, ஜெய்ப்பூர், ஹரித்துவார்-ரிஷிகேஷ், சிம்லா-குலு-மணாலி, சுற்றுலாக்களுக்கும் எங்களை தொடர்பு கொள்ளவும்.

**தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:** (AT SOUTH INDIA)

1. R. Kesavan Iyengar, Sri Meenakshi Telecom Centre, Thanjavur, Ph.No.: 31306, 60426
2. Panneerselvam, Vinayaga Trade Link (Commodities Agents) 21/2, K.R. Buildings, Royal Road, (Near Gajapriya Hotel), Contonment, Tiruchy - 620 001. Ph.No.:466007, 461050.
3. Vedavalli, 19/2 Kesava Perumal East Ward St, Mylapore, Madras - 4. Ph: 495 0530.

ERRICA

# உன் கூந்தல் ஏறி தவழும் பூ கோடி ரூபாய்...

- அதிக முடி உதிர்வை தடுக்கிறது
- அடர்த்தியான முடி வளர தூண்டுகிறது
- பொடுகை எதிர்க்கிறது
- இள நரையை தடுக்கிறது

அதிக மூலிகை அதிக சக்தி

தூய தேங்காய் எண்ணெயில் தயாரிக்கப்பட்டது.

# எரிகா

ஹெர்பல் ஹேர் டானிக்.

ERRICA

HERBAL HAIR TONIC

*Very Effective*

A Quality Product from:

Dales

MEDICINAL PLANTS RESEARCH DIVISION

**DALE CARE**

Brindavan, Pondicherry - 605 013.
M.R.P. 100 ml Rs. 29.50 - 200 ml Rs. 54.50 Available at all medical shops and General Stores in Tamilnadu and Pondicherry

LAYAM/ER/319/97

‘பட்டுப்பாவுக்கு ஆறாயிரம் இழை! அத்தனையின் ஊடே மீன் என திரிந்து மீளும் கெண்டை இழைதான் மிஷின் கட்டையில் மோதி வேட்டியை உருவாக்குகிறது. இதில் அழுத்தி நெய்வது முதல் இதமாக நெய்வது வரை பலவிதம் உண்டு. நடுநடுவே ஓரமாக ஜரிகை கொல்கி மேல் சோற்றுப் பருக்கை வைத்து பிசைந்திழுத்து, கொஞ்சம் கோந்துப் பசையையும் தடவி, வாயால் ஊதிக்காயச் செய்தபடியே பார்த்துப் பார்த்து நெய்யும்போது தொலை தூரத்தில் நின்று கொண்டு யாரோ தாளம் போடுவது போல் இருக்கும். நெய்பவர்கள் மனதும் அதில் ஆடத் தொடங்கி விடும்.’

**கா**ளியப்பனைத் திரும்பவும் தெருவில் பழைய தீர்க்கத்தோடு பார்க்கவும் அதிக பட்சம் கசங்கிப் போகிறான் மோகன்ராம். முகுந்தன் புரிந்து கொள் கிறான்.

மோகன்ராமுக்கு எழுந்து போய் அவனை திரும்பத் தாக்க வேண்டும் போல் தோன்றியது. ஆனால் சமை யல் கட்டிலிருந்து ஓடிவந்து அவன் முன் பதைபதைக்க நிற்கும் அவன் தாயும், முகுந் தனும் அவனைத் தடுப்பது போல் பார்க்கிறார்கள்.

''முகுந்தா, இவன் பண்றது கொஞ்சம் கூட நல்லால்ல... வீதி



7

# ஆசை நெசவு

யில போற ஓணானை எடுத்து மேல விட்டுக்கறான். எனக்குப் பயமா இருக்கு...."

"தெரியும்மா... நானும் கேள்விப்பட்டேன். மோகன், இவங்க விஷயத்துல ஒதுங்கிப் போறதுதான் நமக்கு நல்லது. அதுதான் நாகரிகமும் கூட...."

முகுந்தனின் கருத்துக்கு பதில் முறைப்பு மோகன்ராமிடம்.

"டேய் இப்படியே விட்டு விட்டுத்தாண்டா இன்னிக்கு பத்து வயசுப் பையன்லாம் தண்ணி போட்டுட்டுத் திரியற நிலை வந்திருக்கு..."

கை கால்கள் ஸ்தம்பிக்க, தறி ஓட்டம் நின்று போக, மோகன்ராம் கண்கள் சிவக்கப் பேசுவதை முகுந்தன் இளக்காரச் சிரிப்போடு அணுகுகிறான்.

"என்னடா சிரிக்கிறே..."

"சிரிக்காம?"

"வயிறு எரியற விஷயம்டா இது. சாராயத்தால நீ பாதிக்கப்பட்டிருந்தா இப்படி சிரிக்க மாட்டே..."

"நான் இல்லடா, இந்த தேசமே... ஏன் நம்ம கண்ணுக்குத் தெரியாத இந்திர சந்திர லோகங்களே பாதிக்கப்பட்டுத் தாண்டா கிடக்கு! அங்கல்லாம் இதுக்குப் பேர்தான் வேற... சோமபானமோ என்னவோ... லுக் மோகன்ராம், இந்த விஷயத்துல பெரிய பெரிய அரசியல் தலைவர்களே தோத்துட்டாங்க. இது விஷயமா செய்யாத பிரசாரமும் இல்லை. எதுவும் குடிகாரங்க முன்னால ஓர்க் அவுட் ஆகலை. இது கூடாதுன்னு சொன்னவங்களும் தோத்து, காணாம போயிட்டாங்க. நீயும் அந்த லிஸ்ட்டுல சேர விரும்பறியா?"

முகுந்தனின் பொருள் பொதிந்த கேள்வி முன் மௌனம் கட்டிக் கொள்கிறது மோகன்ராம் மனது. பதில் உடனேயே தெருவில் கிடைக்கிறது. அச்சுப் பிணைப்பு செய்து தினக்கூலியாக முப்பதோ, நாற்பதோ கிடைத்தாலே பெரிதென்று நினைக்கும் குமாரசாமித் தாத்தா குடித்துவிட்டு ஊறுகாய்க்காக மோகன்ராம் வீட்டு வாசலுக்கே வந்து நிற்கிறது.

"மகா... மகா... ஊறுகாய்..." – என்று எச்சில் ஒழுக விக்கல் குரலுடன் கேட்கும்போது மோகன்ராம் முகத்தில் ஒரு பிரளய உணர்வே தெரிகிறது.

"முகுந்தா நீ என்ன சொன்னாலும் நான் கேக்க மாட்டேன். புத்தி சொல்லி இவங்களைத் திருந்த முடியாதுன்னும் எனக்குத் தெரியும். பயத்தால மட்டும்தான் இவங்களைக் கட்டுப்படுத்தலாம். அத நான் உருவாக்குவேண்டா... நிச்சயம் உருவாக்குவேன்..."

மோகன்ராம் கிட்டத்தட்ட பித்துப்பிடித்தது போலவே பேசுகிறான். ஆனாலும் பொருள் சிதறாத பேச்சு, நைச்சியமாகத் தொடங்கி இதமாய் போய்க் கொண்டிருந்த பேச்சு இப்படியா இந்தக் காளியப்பனால் நிறம் மாறும்?

இட்லிப் பானையில் ஆவி அலையடிக்கிறது. விறகடுப்புப் புகை கூட சேர்ந்து கொள்கிறது. பக்கத்து கும்முட்டி அடுப்பில் சாம்பாரின் உற்சாகக் கொந்தளிப்பு.

மூக்கில், காதிலெல்லாம் கரிக் கீறலோடு அருகில் பானு. இன்னமும் வாழை இலையைப் பிரித்து நறுக்கவில்லை, தினத்தந்தி காகிதச் சதுரங்களை தொங்கும் கம்பி மூக்கில் கோத்து முடிக்கவில்லை, குடிக்கத் தண்ணீர் எடுத்து வந்திருக்கவில்லை. கைப்பிடி இல்லாத இரும்பு வாளியிலும் கை கழுவத் தண்ணீர் எடுத்து வைத்திருக்கவில்லை.

ஆனால் கடையோ திறந்தாகி விட்டது. ஒதுங்கி ஓரமாகக் கண்ணில் கட்டோடு அமர்ந்திருக்கிறாள் மந்தா. பானுவை தனது குரல் எனும் ரிமோட்டால் இயங்க வைத்துக் கொண்டிருக்கிறாள்.

மூக்கும் காதுமே சாம்பாரின் கொதிப்பை அடக்கச் சொல்கிறது. இட்லி முதல் ரவுண்டு வெந்து விட்டதையும் உணர்த்துகிறது. பானுவிடமோ சமாளிக்க இயலாத முணுமுணுப்பு

"உம்... உம்... கைக்குக் கை வாய்க்கு வாய்னு வேலை நடக்கணும். அடுத்த ஈடு இட்லிக்கு மாவு ஊத்தி வெச்சுட்டு தண்ணி எடுத்துட்டு வர கிளம்பு. மத்ததை நான் பாத்துக்கறேன்...." என்று

இந்திரா சௌந்தர்ராஜன்

## சுட்ட பழம்:

"சினிமாவில் 'சிக்குபுக்கு ரயிலே' என்று பாட்டு எழுதுவது எல்லாம் சில்லறைக்காகத்தான். ஏனென்றால் கல்லறைக்குப் போகும் வரை இந் நாட்டில் சில்லறை தேவைப் படும்."



— எஸ்.பி.பி.க்கு நடந்த பிறந்தநாள் கம் பாராட்டு விழாவில் கவிஞர் வாலி.

### கனிந்த சிந்தனை:

எப்பேர்ப்பட்ட பேருண்மையைப் பேசியிருக்கிறார் வாலி! என்று வியந்த நேரத்தில், சண்டைக்கு வந்தார்கள் விதண்டாவாதப் பேர்வழிகள்.

"என்னையா பேருண்மை. எல்லா நாட்டிலும் எல்லாருக்கும் சில்லறை இருந்தாத்தான் வாழ்க்கை நடக்கும். அதுக்காக எல்லாருமா சிக்குபுக்கு ரயிலுன்னு பாட்டு எழுதறாங்க!"

பாட்டெழுத வராத பொறாமையினால் பேசுகிறார்கள் அந்த சண்டைக்காரர்கள்! நானூறு உளறல்பாட்டும் நாலாயிரம் ஆபாச பாட்டும் எழுதிவிட்டு அதை ஒரேயொரு அற்புதக் கவிதையால் ஈடுகட்டிவிடலாம் என்கிற நெஞ்சுரம் அவர்களுக்கு இருக்கிறதா பாருங்கள்! சுத்தமாக இல்லை!

'சரிங்க! சில்லறைக்காக எழுதி வசதியான பிறகும் தொடர்ந்து சமரசம் செய்துக்கறாங்களே தேவையா?' என்று தார்மீகக் கோபக்காரர்கள் அசட்டுத்தனமாய்த் தட்டிக் கேட்கிறார்கள்.

ஒருமுறை சமரசம் செய்துவிட்டால் தொடர்ந்து அதைச் செய்து கொண்டே போவது எவ்வளவு சுலபமானது என்று அவர்களுக்குத் தெரிவதேயில்லை. கனியிருப்ப காய் கவர யாராவது வீண் முயற்சி செய்வார்களா என்ன...!

'விரசமோ சமரசமோ எப்படியோ சினிமாவோடு போகட்டும்!...' என்று ஆரம்பித்து சில செண்டிமெண்ட் பேர்வழிகள் கவலைப் படுகிறார்கள்: 'ஒரு பிறந்தநாள் விழாவில் இப்படி அபசகுனமாய்ப் பேசலாமா?'

செண்டிமென்டை உடைப்பில் போடுங்க சார்! சில்லறை என்கிற பேருண்மைக்கெதிராக அது கால் தூசு பெறுமா...?

"அப்படியானால் தமிழ் சினிமா மட்டும் செண்டிமென்டைக் கட்டிக் கொண்டு அழுவது ஏன்?' என்று அடுத்ததாக வாதாடுகிறார்கள்...

இதுகூட புரியவில்லை பாருங்கள்— அந்த செண்டிமெண்ட் கோடி கோடியாய் சில்லறை சம்பாதித்துத் தரும்; உங்கள் செண்டிமென்ட் உப்புப் பெறாது ஐயா! உப்புப் பெறாது!

-சில்மிஷா

அந்தக் குருட்டு வேதனையிலும் கடமை தழுவுகிறாள் மந்தா.

வயிறு இருக்கிறதே... அவனுக்கு மட்டும் தானா? வீதிக்கே இருக்கிறதே... மந்தாவின கடையை நம்பித்தான் எத்தனை ஜீவன்? மந்தாவும் கூட கடையை கடையாகவா நடத்துகிறாள். சிலருக்கு அது அன்னதான மடம். பலருக்கு அது கடன் சொல்ல முடிந்த இட்லி வங்கி. ரொம்ப பேருக்கு மிக நியாய நிலையில் கிடைக்கும் அற்புதமான மலிவுச் சரக்கு.

இரண்டு நாளாக கடை நடத்தாமல் போக அத்தனை பேரும் ஏமாந்து மந்தாவை ஆய்ந்த ஆய்வில் மந்தாவே திணறிப் போய் விட்டிருக்கிறாள்.

தப்பித் தவறி லாட்டரியில் லட்சம் விழுந்து இட்லி கடைக்கு ஒரு முழுக்குப் போடலாம் என்றால் கூட முடியாது என்கிற மாதிரி, அந்த கடை அவளுடன் பிணைந்து விட்டதை அவளால் உணர முடிந்தது.

பானுவும் புரிந்து கொண்ட மாதிரி இப்போதைக்கு பாட்டியின் கண்ணாய் இருந்து ஓடியாடுகிறாள். ஒருவகையில் இந்த இட்லி கடையின் மறு பிறப்புக்கு மோகன் ராமும் கூட ஒரு காரணம்.

சாப்பிட வரும்போது பார்க்கலாமே...?

தனது அன்பைக் கூட ருசி மூலமாக உணர்த்தலாமே...?

முடிந்தால் நாலு வார்த்தை கூட பேசலாமே...?

அவன் நினைப்பாகவே அடுப்பெரித்து, இட்லி அவித்து, கண்கலங்க நிற்கும்போது கடைக்கு முன்னாலும் கூட ஏகமாய்க் கூட்டம்.

ஆனாளுக்கு தட்டில் இட்லி போட்டு, சாம்பார் சட்னி போட்டு தூர உட்காரச் சொல்லி, பார்சல் இட்லி கட்டி, காசு வாங்கிப் போட்டு மீதிச் சில்லறை தந்து...

உஸ்ஸ்... அப்பாடா! இளைப்பெடுக்கிறது பானுவுக்கு. வியர்வையில் தெப்பமாகிறது உடம்பு. அழுக்கே படாமல் உடுத்திக் களிக்கும் பாவாடை தாவணியில் எல்லாம் அழுக்கு பட்டுக் குனியும் போதும், நிமிறும் போதும் என்ன நடக்கிறதென்றே தெரியவில்லை.

ஆனால் ஒன்று மட்டும் பளிச்சென்று உறைக்கிறது. பாட்டி இந்த தள்ளாத வயதிலும் எப்படி இந்தக் கடையை சமாளித்தாள் என்பதுதான் அது...

இட்லிக் கடைதானே என்கிற இளப்பம் இடிந்து விழுந்து, அந்த நினைப்பில் இப்போது கோபுரம் எழும்பிக் கொண்டிருக்கிறது.

பார்வைக்குச் சாதாரணமாய்த் தெரியும் தொழிலுக்குள் பிடிபட வேண்டிய ஒரு லயம் இருப்பதையும் எண்ணிப் பார்க்கிறாள். அவள்

அப்படி எண்ணும்போது அவளை ராமசாமி மாமாவோ வேறுவிதமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். தோசைக் கல்லில் எண்ணெய்க் குச்சியால் ஒரு வட்டத் தீட்டு அவள் நிகழ்த்தும்போதெல்லாம்.

இனி மாமா தவறாமல் கடைக்கு வரப் போவது நிச்சயமாகிறது. மாமா மட்டுமா? அவர் சகாக்களும்தான். விடலைக் கூட்டமும் கூட்டி ஏறக்கூடும்.

இந்தப் பயம் முன்பே மந்தாவுக்கு உண்டு. அதனால்தான் பானுவை கடைப் பக்கம் அண்ட விடாதிருந்தாள். இப்போது வழியில்லையே...

அந்த கிழவி கடை நடக்கும்போதே அடிக்கடி "யார் வந்திருக்கறது... வெங்கிட்டுவா? குணாவா?" - என்று கேட்பதில் அதை உணர முடிகிறது. ராமசாமி மாமா குரலைக் கேட்ட மாத்திரத்தில் நிறைய பயப்படுவதும் கூட தெரிகிறது. அவனது சபலம் ஜெகப்பிரசித்தம்.

"அடியே இழுத்து மூடி பவிஷா வேலை பார்க்கணும். அதுதான் பொம்பள லட்சணம்" என்று ராமசாமிக்கும் கேட்கும்படி உரக்கச் சொல்கிறாள். பானுவும் புரிந்து கொள்கிறாள்.

"கிழவி ஏன் அதை அதட்றே... இப்பத்தான் உன் கடைக்கு ஒரு களையே வந்திருக்கு..." - என்று இட்லி வாயுடன் ராமசாமியும் பதில் தருகிறான். அந்தப் பதிலால் பானு சற்று சலனப்பட்டுப் போகிறாள்.

ஒ... இனி இப்படி வரும் பிரச்னைகளையும் எதிர்கொள்ள வேண்டி வருமோ?

வரும் என்ன, வந்தே விட்டது... தாமு வடிவில்!

"பார்றா... யாரது பானுவா? பானுவா கடைல... என்னா பானு உனக்கெதுக்கு இந்த அவதாரம்?" - கேள்வியோடு லுங்கியை ஒரு தினுசாக ஏற்றிக் கட்டுகிறான் தாமு.

"உனக்கென்ன வேணும்?" - பானுவிடம் கோபமான கேள்வி.

"உம்... நான் கேட்டா கொடுத்துடுவியா?" - தாமுவிடம் கிண்டலான பதில் கேள்வி.

"நானும் செருப்பால அடிப்பேன். வாங்கிக்குவியா?"

'தோ பார்... நீ மட்டும் இல்ல - நானும் நிறைய தமிழ் சினிமா பார்த்தவன்தான். இந்த மாதிரி வசனமெல்லாம் நிறைய கேட்டுருக்கேன். நீ இப்படிப் பேசப் பேச எனக்குள்ளே கூடுதலா விழுந்துக்கிட்டே போறே... ஞாபகத்துல வெச்சுக்கோ" - தாமு கனிசமாக பதில் கோபம் காட்டுகிறான். மந்தாவிடம் பதற்றம்.

"டேய் தாமு... அவகிட்ட என்னடா பேச்சு. இன்னிக்குத்தான் அவளை கடையில நிறுத்தியிருக்கேன். முத நாளே தகராறு பண்ணாதீங்கடா. நீங்க நல்லா இருப்பீங்க..."

"அப்ப உன் பேத்தியை ஒழுங்கா பேசச்



''உன் மனைவி டி.என். சேஷனை ஆஹா, ஓஹோன்னு புகழறாளே! அரசியல்ல ரொம்ப ஆர்வமோ?''

''அதெல்லாம் ஒரு மண்ணுமில்லே; வாக்காளர் அடையாள அட்டை புகைப்படத்துக்கு என்னிடம் சண்டைபோட்டு புதுசா ஒரு பட்டுப்புடைவை வாங்கிட்டு வந்திருக்கா! அதான்!''

— பாஸு

[redacted]

சொல்...''

"ஏ பானு! வார்த்தைக்கு வார்த்தை பதில் பேசாம பொழப்பப் பாருடி..."

"வந்தவங்க சரியா நடந்துக்கிட்டா நான் ஏன் பாட்டி பேசறேன்..."

''வியாபாரம்னா நாலும் இருக்கும்டி.. நாமதான் அனுசரிச்சுப் போகணும். பேசாம வேலையப் பாரு..."

- கிழவி மிக பயந்து விட்டது நன்கு தெரிகிறது. பானு கூட உடைந்து விட்டாள். கண்ணீரைச் சுண்டி விட்டபடி நிமிர்கிறாள். எதிரில் தூக்கு வாளியும் கையுமாக அவள் ஜனங்கள். யாரிடமிருந்தும் அவளுக்கு சப்போர்ட்டாக ஒரு வார்த்தையில்லை. எல்லோர் விழியிலும் பயம். நமக்கெதற்கு ஊர் வம்பு என்கிற பயம். ஊருக்கு ஊர் தெருவுக்குத் தெரு யூரியா போட்டு வளர்த்துக் கொண்டிருக்கிற பயம்!

கலங்கியபடியே அடுப்பு ஊத ஆரம்பிக்கிறாள்.

தாமுவும் ஓரமாக உட்கார்ந்து சிகரெட் பற்றவைக்க ஆரம்பிக்கிறான். பின் "சரி சரி ஒரு ஆம்லெட் போடு" என்கிறான்.

"இங்க அதெல்லாம் போட்றதில்ல..."

"ஏன்?"

"இங்க சைவம் மட்டும்தான்."

"நான் சொல்றேன் அசைவமும் போடு."

"பாட்டி இந்த ஆளைப் பாரு... வம்பு பண்றதுக்கின்னே வந்துருக்கான்."

"டேய் தாமு வேண்டாம்டா... விட்டுட்றா" - கிழவி திரும்பவும் பயந்து கெஞ்ச, இப்பொழுது அங்கே ஜவஹர் நுழைந்திருந்தான்.

"வா ஜவஹர்" என்கிற பலமான வரவேற்பு



# "நோ செண்ட்டிமெண்ட்ஸ்!"

"என் மகன் கிரிக்கெட்டை விட டென்னிஸில் அதிக ஆர்வம் காட்டுவது பற்றி சந்தோஷம்தான். காரணம் டென்னிஸில்தான் அதிக பணம் சம்பாதிக்க முடியும்" என்று சுனில் கவாஸ்கர் கூறியதுண்டு.

ஆனால் ரோஹன் கவாஸ்கர் பேட்டும் கையுமாக களத்தில் இறங்கிவிட்டார்.

ரஞ்சி கோப்பை பந்தயங்களில் மேற்கு வங்க அணியின் சார்பில் ஆடுவதற்காக சென்னை வந்திருந்த ரோஹனைச் சந்தித்தோம். அப்பாவின் சாயல் பளிச்சென்று தெரிகிறது. அப்பாவித்தனத்தோடு, கூடவே சற்று பிடிவாதத்தையும் வெளிக்காட்டும் முகபாவங்கள். விளையாட்டைப் பொருத்தவரை டீம் ஸ்பிரிட்டில் ஈடுபாடு என்றாலும் மற்ற விவகாரங்களில் பளிச்சென்று அவர் தாமாகவே முடிவெடுப்பதைக் காணமுடிந்தது.

முதல் ரவுண்டில் சில கேள்விகளை மட்டுமே கேட்க முடிந்ததால், அன்று மதியம் அவரை மீண்டும் (மானேஜர் மூலம்) அணுக, நம்மைப் பார்க்காமலேயே, அணியின் மானேஜர் பார்தா கோஷிடம் "பேட்டியெல்லாம் வேண்டாம். நான் கிளம்புகிறேன்' என்று கிளம்ப, குழு மானேஜர் செயலற்று நின்றது கொஞ்சம் வித்தியாசமான காட்சி.

அப்பாவின் புகழ் தனக்கொரு தனி அந்தஸ்தைக் கொடுத்திருப்பதாக ஒப்புக் கொள்கிறார் ரோஹன். அதுவே தமக்கு அதிக எச்சரிக்கை உணர்வையும் தருவதாகக் கூறினார்.

மட்டையை மூன்று முறை கீழே தட்டுவது, இரண்டு பந்துகளை அடித்த பிறகு ஸ்வெட்டரை கழற்றி அம்பயரிடம் கொடுப்பது, மைதானத்தில் நுழையும்போது சூரியனைப் பார்ப்பது போன்ற எந்த சென்டிமென்டிலும் இவர் சிக்கிக் கொள்ளவில்லை. "மைதானத்தில் சென்டிமென்டுக்கு ஏது இடம்?" என்கிறார்.

மகாராஷ்ட்டிரா அணிக்கு பதிலாக மேற்கு வங்க அணியின் சார்பில் கலந்து கொண்டது பற்றி கேட்டால் "அதுவும் ஓர் இந்திய அணிதானே. வாய்ப்புக் கிடைக்கும் இடத்தில் பிரகாசிப்பதுதான் புத்திசாலித்தனம்" என்கிறார் ரோஹன். இந்திய அணியில் ஆடும்போது இதே விவேகம் தொடர வேண்டும்!

- குல்லூ

படம்: சாரி

தாமுவிடம்.

"என்ன தாமு காலங்கார்த்தால கரைச்சல்..."

"ஒண்ணுமில்ல. சும்மா பானுவை சீண்டிக்கிட்டிருந்தேன்."

"வேண்டாம் தாமு. அவ என் ஆள்!"

"அப்படியா... சொல்லவேயில்லையே?"

"இப்ப சொல்லிட்டேன்ல..."

"ரைட்மா... ரொம்ப சந்தோஷம்! அப்புறம்..."

"உன்னைப் பாக்கத்தான் வந்தேன். வா உனக்கொரு முக்கியமான வேலை வெச்சிருக்கேன்."

"சொல்லுபா, என்ன எதாவது டமால் டுமீல் வேலையா?"

"கிட்டத்தட்ட அப்படித்தான். எங்க தெருவுல ஒரு மகாத்மா குடியிருக்கான். நம்ப காளியப்பன்கிட்ட மோதி பெரிய பிஸ்தா வேலையெல்லாம் காட்டியிருக்கான். அவன் கைகாலை ஒடிக்கணும்."

"யாரு... அந்த மோகன்ராமைச் சொல்றியா?"

"அவனையேதான். பெரிய ஹீரோன்னு நினைச்சுக்கிட்டிருக்கான். அவனை ரெண்டுல ஒண்ணு பாக்கணும்."

- பானுவின் காதிலும் விழவேண்டும் என்றே ஜவஹர் பேசப் பேச பானுவும் அருகில் எரியும் அடுப்போடு போட்டி போட்டுக் கொண்டு எரியத் தொடங்குகிறாள்.

"சரி இப்பவே கதைய முடிச்சிடுவோமா?"

"ஏய்... நீ என்ன - கை காலை ஒடிச்சா போதும். ஸ்டேஷன்லையும் யாரும் இல்லை. எல்லாரும் மந்திரி பின்னாடி சுத்தப் போயிட்டாங்க. மீறி எதாவது வந்தாலும் நான் பாத்துக்கறேன்."

"தோ பாரு... எனக்கே அவனோட ஒரு கணக்கு இருக்கு. நீ கவலைப்படாதே. வா. இரண்டு பேருமா சேர்ந்தே போவோம்."

இருவரும் மோகன்ராம் வீட்டைக் குறி வைத்து நடக்கின்றனர். இதுபோல் இதற்கு முன் பல பேர் வீட்டுக்குள் புகுந்து பலரது கால், கைகளை ஒடித்த முன் அனுபவம் நிறையவே அவர்களுக்கு உண்டு.

மோகன்ராம் தறிமேடை முன் திமிறிக் கொண்டு நிற்கும் இருவரையும் பார்த்து விதிர்க்கிறான்.

(தொடரும்)

## தில்லி நியூஸ் :

# வேண்டா ஒரு

**கா**ங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவிக்குத் தம்மை எதிர்த்துப் போட்டியிடுவதாக இருந்த ராஜேஷ் பைலட்டுடன் சமரசம் செய்து கொண்டார் சீதாராம் கேசரி என்பது ரொம்ப ரொம்பப் பழைய செய்தி. ஆனால் திடீரென்று பைலட்டைத் தமது வீட்டுக்கு அழைத்து, சுமார் இரண்டு மணி நேரம் அவருடன் மனம் விட்டுப் பேசியிருக்கிறார் கேசரி. இதற்குப் பின்னணி இருக்கிறது: 1993-ல், கேசரியின் மருத்துவர், டாக்டர் சுரேந்திர தன்வார் மர்மமாகக் கொலையுண்டார். இதை சி.பி.ஐ. தீவிரமாக விசாரிக்க வேண்டும் என்று, பிரதமர் தேவேகௌடாவுக்குச் சமீபத்தில் ஒரு கடிதம் எழுதியிருந்தார் பைலட். ஆனால் பேச்சு வார்த்தை முடிந்து பைலட், கேசரியின் வீட்டை விட்டு வந்ததும் பத்திரிகையாளர்களிடம் இருவரும் சொன்னது என்ன தெரியுமோ? "பஞ்சாப் தேர்தல் பற்றித்தான் விரிவாகப் பேசினோம்!"

● தில்லியில், பணத்துக்காக சிறுவர் சிறுமியரைக் கடத்திக் கொண்டு போகும் கும்பல்களின் கைவரிசை அதிகமாகி வருகிறது. போலீசுக்குப் போனால், கடத்தப்படும் குழந்தைகளின் உயிருக்கு ஆபத்து நேரலாம் என்ற பயத்தில், பணக்காரப் பெற்றோர் பணத்தைக் கொண்டு போய்க் கடத்தல்காரர்களிடம் கொடுத்து விடுகின்றனர். சமீபத்தில் தில்லி சட்டமன்ற உறுப்பினர் சூரஜ் பிரகாஷ் புலிவால் என்பவரின் பேரனைக் கடத்திக் கொண்டு போய் விட்டார்கள். பையனுக்கு வயது 14. தினசரி பள்ளிக் கூடத்துக்கு சைக்கிளில் போகும் பையனைக் கடத்தல் கும்பல் கண்காணித்து வந்து, கடத்தி விட்டது. சூரஜ்பிரகாஷ் சுயேச்சை எம்.எல்.ஏ.



• கேசரி

● ரயில்வே அமைச்சர் ராம் விலாஸ் பாஸ்வானுக்கும் ரயில்வே போர்டு தலைவருக்கும் இடையே கருத்து வேறுபாடு. இதன் காரணமாக பல அதிகாரிகளின் பிரமோஷன்கள் நின்று போயிருக்கின்றன!

• பாஸ்வான்

● தில்லியில் பொது இடங்களில் புகை பிடிக்கக்கூடாது என்ற சட்டம் அமலாக்கப்பட்டிருக்கிறது. இதை மீறுகிறவர்கள் மீது உடனடியாக நடவடிக்கை எடுக்க, இனி மொபைல் கோர்ட்டுகள் ஆரம்பிக்க இருக்கிறது தில்லி நகர அரசு.

● தில்லி குளிர் பிரதமருக்குத் துளியும் ஆகவில்லை. பிப்ரவரி 15-ஆம் தேதி வரை தில்லியில் மனிதன் வசிக்கக் கூடாதுடா சாமி என்று பாதுகாப்புத்துறை துணை அமைச்சர் என்.வி.என். சோமுவிடம் சொன்னார் தேவே கௌடா. தலைக்குப் போட்டுக் கொள்ளும் கம்பளிக் குல்லாவைக் கையிலேயே மறைத்து வைத்துக் கொண்டிருந்த பிரதமரிடம் சோமு கேட்ட போதுதான் தில்லிக் குளிரைப் பற்றிக் குறைபட்டுக் கொண்டார் பிரதமர்!

● கதக், பெயிண்டிங், யோகா, சமஸ்கிருதம், வாத்திய இசை எல்லாவற்றையும் கற்றுக் கொடுக்க 'கலாசிரமம்' ஒன்று தொடங்கப் போகிறார் கதக் நடனப் புகழ் பிர்ஜு மகராஜ். அதிகக் கட்டடங்கள் எதுவும் இல்லாமல், இயற்கையான சூழலில், மரங்களும் குளங்களுமாக ஒரு பெரிய இடத்தில் 'கலாசிரமம்' அமையும். இப்போது 'கதக் கேந்திரா'வில் கற்றுக் கொடுப்பது போலவே, 'கலாசிரமம்' ஆரம்பித்த பிறகும் தொடர்ந்து வந்து 'கதக் கேந்திரா'வில் கதக் பயிற்சி அளிப்பாராம். "அதைப் பிரிந்து என்னால் இருக்க முடியாது!" என்கிறார் பிர்ஜுமகராஜ்!

● எம்.ஏ.எம். ராமசாமி, ஜெய்பால் ரெட்டி, ஹர்மோகன் சிங் யாதவ், கனக் சிங், மங்கோலா, முரளி தியோரா ஆகிய ஐந்து பேரையும் ராஜ்ய சபைக்கு உறுப்பினராக நியமிக்க ஜனாதிபதிக்கு தேவே கௌடா பரிந்துரை செய்தார். கலை, சமூக, அறிவியல் துறையைச் சேர்ந்த பிரபலங்களை மட்டுமே பரிந்துரை செய்ய சட்டத்தில் இடம் இருக்கிறது. சங்கர் தயாள் சர்மாவுக்கு ஐந்து பேரையுமே ஏற்க மனமில்லை. வெகு கோபமாக நிராகரித்து விட்டார். ஆனால் தேவேகௌடாவுக்கு ஜனாதிபதியை இந்தச் சமயத்தில் விரோதித்துக் கொள்

வதில் துளியும் விருப்பமில்லை.

● மூப்பனார் விட்டுக் கொடுத்தது பிரதமர் பதவியை மட்டுமல்ல. தமக்கு அளிக்கப்பட்ட 24, அக்பர் ரோடு வீட்டையும்தான். இகாங்கிரஸில் இருந்தபோது, காங்கிரஸ் கட்சிக்கு அலுவலகம் இல்லை என்று கேள்விப்பட்டவுடன், தமக்காக ஒதுக்கப்பட்ட 24 அக்பர் ரோடு இல்லத்தைக் கட்சி அலுவலகத்துக்குக் கொடுத்து விட்டு இரண்டு அறைகளே கொண்ட 'வெஸ்டர்ன் கோர்ட்' அபார்ட்மெண்ட்டுக்குப் போய் விட்டார் மூப்பனார். இன்றும் காங்கிரஸ் கட்சி 24, அக்பர் சாலையில்தான் இயங்கி வருகிறது!

● பிப்ரவரி 18-ஆம் தேதி நடக்கப் போகும் திருமணத்துக்கு அழைப்பதற்காக, சோனியா தமது மகள் ப்ரியங்காவுடன், பிரதமர் தேவேகௌடாவைச் சந்தித்து ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார். ஏழு வருடங்களுக்குப் பிறகு, இப்போதுதான் சோனியா 7, ரேஸ்கோர்ஸ் சாலை வீட்டுக்கு முதல் முறையாகப் போகிறார். சங்கர்தயாள் சர்மா, கே.ஆர். நாராயணன் உட்பட சுமார் நூறு விருந்தினர்களே அழைக்கப்பட்டிருக்கிறார்கள். திருமணம் 10, ஜன்பத் சாலை இல்லத்தில்தான் நடைபெறுகிறது!



• சர்மா

# வெறுப்பாக கைகுலுக்கல்!

● கனாட் பிளேசில் உள்ள பன்னாட்டு நிறுவனம் ஒன்றில் அதிகாரி கரன் சதானா. டில்லிப் புறநகர் குர்காவ் பகுதியில் உள்ள தம் வீட்டுக்குத் தமது மாருதி காரில் திரும்பிக் கொண்டிருந்தார். இரவு மணி 9.45. ஓர் ஆட்டோ ரிக்ஷாவில் மூன்று பேர் வந்து காரில் மோதிவிட்டு, ஆட்டோ ரிக்ஷா ரிப்பேர் பண்ணப் பணம் தந்தால் தான் நகருவோம் என்று, அவரது பர்சைப் பறித்துக் கொண்டனர். ரகளையின் போது ஒருவன் தன் மீது போர்த்தியிருந்த சால்வையை விலக்கிய போதுதான் தெரிந்தது - அவர் ஒரு சீனியர் போலீஸ்காரர்! மற்ற இருவரும்கூட மகிபால்பூர் காவல் நிலையத்தைச் சேர்ந்தவர்கள்தான்!



● முலாயம்சிங் யாதவ் கொடுத்த இஃப்தார் விருந்தில் கலந்து கொண்ட தேவேகௌடா, சீதாராம் கேசரியைக் கூடுமானவரை சந்திக்காமல் இருக்க முயன்றாராம். ஆனால் வேண்டுமென்றே, பக்கத்தில் பக்கத்தில் இருவரையும் அமர்த்தினார் ஜோதிபாசு. கேசரி புறப்படும் முன், தேவேகௌடாவைப் பின்னாலிருந்து தள்ளி, அவரைக் கையையாவது குலுக்குமாறு ஹர்கிஷன்சிங் சுர்ஜித் வற்புறுத்தவே அதற்கு மட்டுமே வேண்டா வெறுப்பாக இணங்கினார் தேவேகௌடா!

● சுக்ராம் இப்போது தமது தலைவிதியை நொந்து கொள்ளுகிறார். சி.பி.ஐ.யின் நிபுணர் எச்.என். சாந்துவை மாற்றி உத்தரவு போட்டதும், 'அப்பாடா, தப்பித்தோம்!' என்று நினைத்தார். ஆனால் சாந்து தொடர்ந்து அவரது ஊழல் பற்றி விசாரிப்பார் என்று உத்தரவு வந்ததும், மனிதர் வெறுத்துப் போய் விட்டார்! நரசிம்மராவும் கேசரியும்கூட அல்ல, இந்தச் சாந்து தான் தமக்கு வில்லன் என்று குமுறிக் கொண்டிருக்கிறார்!

**- நியூஸ்வாலா**



# அமைச்சர்களுக்கு முதல்வர் விட்ட டோஸ்!

புதுக்கோட்டை தேர்தல் முடிவுகள் வெளிவந்த அன்று காலை, முடிவுகளின் போக்கு கூட தெரியாத நிலையில் கலைஞர் தலைமையில் அமைச்சரவை கூடியது. ஆறு மாநகராட்சிப் பகுதிகளில் ரேஷன் கார்டு புதுப்பிப்பதற்காகவும், புது ரேஷன் கார்டு வழங்கவும் விண்ணப்பங்கள் பெறப்பட்டு வந்தன அல்லவா! இந்த நடைமுறைதான் முதல்வரை கோபத்துக்குள்ளாக்கியது. காரணம், புது ரேஷன் கார்டு விண்ணப்ப பாரங்கள் சில தனியார்களால் அச்சடிக்கப்பட்டு, மூன்று ரூபாய்க்கும் அதற்கு மேலும் கூட விற்கப்பட்டது. "இப்படியிருந்தால் ஏழை மக்கள் என்ன செய்வார்கள்? மாதிரி விண்ணப்ப பாரம் ஒன்றைப் பத்திரிகைகளில் வெளியிட்டு இருக்கலாம். மக்கள் அதைப் பயன்படுத்திக் கொண்டிருப்பார்கள். என்னுடைய ஒட்டுனரின் சொந்தக்காரர் ஐந்து ரூபாய் கொடுத்து விண்ணப்ப பாரம் வாங்கியிருக்கிறார். ஒரு விஷயத்தைச் செயல்படுத்தும் போது மக்கள் நோக்கிலிருந்து பாருங்கள்; அதிகாரிகள் மட்டத்தில் இருந்து பார்க்காதீர்கள். இதுபோன்ற விஷயங்கள் அரசின் மீது மக்களுக்கு வெறுப்பைத்தான் உண்டாக்கும்'' என்று உணவு அமைச்சர் நேருவை ஒரு பிடிபிடித்தாராம் முதல்வர். நேரு ஆடிப் போய் விட்டார். அன்று சுமார் அரை டஜன் அமைச்சர்களுக்கு டோஸாம். புதுக்கோட்டை தேர்தல் முடிவுகளால், அவ்வளவு மகிழ்ச்சியாக இல்லாத முதல்வர், அமைச்சரவை மாற்றம் செய்யப் போவதாக வதந்திகள் வருகின்றன. அதனால் மூன்று சீனியர்களைத் தவிர, மற்றவர்கள் படபடப்புடன் இருக்கிறார்கள்.

புதுக்கோட்டை தேர்தல் முடிவுகள் வெளிவந்து கொண்டிருந்த நேரம். முதல் ரவுண்டில் 400 வாக்குகள் முன்னணியில் இருந்தது தி.மு.க. பல அமைச்சர்களின் பி.ஏக்கள் முகத்தில் கலக்கம். அமைச்சர்களின் அறைக்கும், பத்திரிகையாளர் அறைக்கும் ஓடி ஓடி ரன் எடுத்துக் கொண்டிருந்தார்கள். 4000 லீடிங் என்று வந்ததும்தான் கொஞ்சம் நிம்மதியானார்கள். பார்வையாளர்கள் அமைச்சர்களைப் பார்க்க அனுமதிக்கப்பட்டனர்!

தமிழ்நாட்டின் வடக்கு மாவட்டத்தைச் சேர்ந்த கழக பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர் மிகவும் கடுப்புடன் கூறியது : எம்.எல்.ஏக்களுக்கு அமைச்சரவையில் இடம்கொடுக்கும் விஷயத்தில், 'சென்னையிலிருந்து எத்தனை எம்.எல்.ஏக்களுக்கு அமைச்சர் பதவி கொடுப்பது? மாவட்டங்களை கவனிக்க வேண்டாமா?' என்றார் தலைவர். ஆனால் மத்திய அமைச்சரவையில் இடம்பெற மட்டும் சென்னையில் வென்ற மூன்று எம்.பிக்களுக்கும் வாய்ப்புக் கொடுத்திருக்கிறாரே! மத்திய அமைச்சரவையில் பொறுப்பு வகிக்கிற தகுதி மற்ற மாவட்ட எம்.பிக்களுக்கு இல்லையா, என்ன?

- தில்லைப்பா


பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

# சேமிப்பை

# முதலீடு செய்யும் முன் சிந்திப்பீர் !

- ☐ முழுமையான பாதுகாப்பு
- ☐ நிறைந்த வருவாய்
- ☐ வருமான வரிச் சலுகை
- ☐ மன நிம்மதி

**எல்லாம் இணைந்த நீங்கள் முழு நம்பிக்கையுடன்**
**முதலீடு செய்யப் பொருத்தமான நிறுவனம்**

# பவர்ஃபின்

| முறையான வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'அ' (RIPS) | | | இரள்வட்டி வழங்கும் திட்டம் திட்டம் 'ஆ' (CIPS) | |
|---|---|---|---|---|
| காலம் | வழங்கப்படவுள்ள ஆண்டு வட்டி விகிதம் | | ரூ. 3000க்கு முதிர்வுத் தொகை | ஒரு ஆண்டிற்குப் பெறக் கூடிய வருவாய் விகிதம் |
| | மாதத்திற்கு | காலாண்டுக்கு* | | |
| 12 மாதங்கள் & 1 நாள் | 15% | 15.19% | 3,483/- | 16.06% |
| 25 மாதங்கள் | | | 4,092/- | 17.47% |
| 36 மாதங்கள் | | | 4,692/- | 18.80% |
| 48 மாதங்கள் | | | 5,445/- | 20.38% |
| 60 மாதங்கள் | | | 6,321/- | 22.14% |

* குறைந்த அளவு வைப்புநிதி RIPSக்கு ரூ. 5000/- & CIPSக்கு ரூ.3000/-

மேலும் விபரங்களுக்கும் விண்ணப்பப் படிவங்களுக்கும் கீழ்க்குறிப்பிட்ட முகவரியில் உடனே தொடர்பு கொள்ளலாம்.




## தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

**பதிவு அலுவலகம் :** எண்.84, டிடிகே. சாலை,
(ஆழ்வார்ப்பேட்டை சிக்னல் அருகில்), ஆழ்வார்ப்பேட்டை,
சென்னை - 600 018. தொலைபேசி : 4997689, 4995648.

இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் 23.9.96 அன்று ஏற்கெனவே வெளியான எமது விளம்பரத்தைத் தொடர்ந்து வெளியிடப்படுகிறது

DIPR / 96 / DIS / 97

